# ஸ்டர்லிங் நிதி

ஆர். வேங்கடராஜுலு

PREMIER

ஜோதி நிலையம்

# ஸ்டர்லிங் நிதி

பொருளாதாரம்

ஆர். வேங்கடராஜுலு







ஜோதி நிலையம்

திருவல்லிக்கேணி, சென்னை

# நோக்கம்

ஸ்டர்லிங் நிதியைப் பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் ஓயாது வருகின்றன. முக்கியஸ்தர்களெல்லோரும் இதைப்பற்றி தங்கள் அபிப்பிராயங்களை தெரிவித்து வருகிறார்கள். வர்த்தக, கைத்தொழில் சம்மேளனங்களின் பேச்சுக்களிலும் தீர்மானங்களிலும் ஸ்டர்லிங் நிதியைப் பற்றிய கவலையே தொனிப்பதை காண்கிறோம். பல பிரிட்டிஷ் பத்திரிகைகளும் பொருளாதார பண்டிதர்களும் இந்தியாவுக்கு சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதியைப்பற்றி குதர்க்க வாதம் செய்யக் கிளம்பியிருப்பதே இந்த கவலைகளுக்கெல்லாம் முக்கிய காரணம். இந்தியாவும் இந்த யுத்தத்தில் ஈடுபட்டிருக்கிறது. படைகளிலும் பிறவற்றிலும் தனது சக்திக்கு அதிகமாகவே நேசதேச வெற்றிக்கு இந்தியா உதவி வருகிறது. ஆனால் இந்தியாவுக்கு நஷ்டமும் கஷ்டமும் இல்லை என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் சில சொல்லுகின்றன. யுத்தத்தை சாதகமாக்கிக்கொண்டு இந்தியா கொள்ளை லாபமடித்து பெரிய நிதியை திரட்டி வைத்திருக்கிறதென்றும் கூறுகின்றன. இதற்காக இந்திய சர்க்கார்மீதும் குறை சொல்லுகின்றன. ஆகையால் இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் இருக்கும் யுத்தநிதி ஏற்பாட்டையும் மாற்றியமைக்க வேண்டும் என்ற கூக்குரலையும் கிளப்புகின்றன. உண்மையில் இந்தியாவுக்கு கஷ்டமும் நஷ்டமும் இல்லையா? சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி இந்தியா அடித்திருக்கும் கொள்ளை லாபம்தானா? இதற்கு பதிலளிக்கும் முறையில் நிலைமையை விளக்குவதே இந்த புஸ்தகத்தின் நோக்கம். சிக்கலான இப் பொருளாதார விஷயத்தை எல்லோருக்கும் புரியும் முறையில் விளக்கிவைப்பதில் நான் கொஞ்சமாவது வெற்றி பெற்றிருப்பேனாயின் அதுவே எனக்கு ஆனந்தம். விளங்கவைத்தல், என்ற முயற்சியின் காரணமாகவே சில இடங்களில் 'சுருங்கச் சொல்லல்' என்ற அழகுக்கு வசதி இல்லாமல்போயிருக்கிறது என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஆர். வேங்கடராஜுலு.

## பொருளடக்கம்

# ஸ்டர்லிங் நிதி

## எங்களூர் கந்தப்பிள்ளை

---

தஞ்சை ஜில்லாவில் எங்கள் ஊர் ஒரு குக்கிராமம்.
நூறு, ஆயிரம் வேலி மிராசுதார் யாரும் இல்லை. கந்தப்
பிள்ளைக்கு இருப்பது மூன்றே வேலி நிலம். என்றாலும்
எங்கள் கிராமத்துக்கு அவரே பெரிய புள்ளி. குடித்தனம்
செய்வதில் ரொம்ப கெட்டிக்காரர் என்று பெயரெடுத்
தவர். அக்கம்பக்கம் கிராமங்களிலும் இதுதான் அபிப்
பிராயம். சுமார் 25 வருஷங்களுக்கு முன்பு கந்தப்பிள்ளை
யின் தந்தை இறந்துவிட்டார். தம் ஏக புத்திரனுக்கு
அவர் வைத்துவிட்டுப்போன ஆஸ்திகள், முக்கால் வேலி
நிலம், மனசுக்கு பிடித்தமான ஒரு மருமகள், தம் பெயரை
வைத்து அழைக்க இரண்டு வயதில் ஒரு பேரப்பிள்ளை,
மகன் கல்யாணத்துக்கு வாங்கின கடனில் தீராமல் பாக்கி
யாக இருந்த ரூ. 500, இவைகளே. கந்தப்பிள்ளை முதலில்
கடனைத் தீர்த்தார். இருபது வருஷகாலத்தில் முக்கால் வேலி
நிலத்தை மூன்று வேலியாக்கினார். மூத்த பிள்ளையை
'இண்டர்மீடியேட்' வரையில் படிக்கவைத்திருக்கிறார்.
அடுத்த பிள்ளையும் படிக்கிறான்.

வயிற்றை வாயைக்கட்டி, சொத்தைப் பெருக்கியவரல்ல
கந்தப்பிள்ளை. அவர் வீட்டுக் காப்பியில் புளியங்கொட்
டையைப் போட்டால் மிதக்கும் என்று எல்லோரும் சொல்
லுவது உண்டு. அவர் வீட்டில் எக்காலத்திலும இரண்டு
மூன்று மாடுகளின் வற்றாத கறவை. நெய்யைத் தொட்டுத்
தெளிக்கும் துர்க்குணம் படைத்தவரல்ல அவர் மனைவி.
குழந்தை குட்டிகளும், வருவார் போவாரும் தின்றது

போகவே மிச்சம். மிஞ்சியதை விற்று அந்த அம்மாள் சேர்த்த பணமும் குடும்பத்தின் சொத்து விருத்திக்கு உதவியாக இருந்தது. உண்பது தின்பது, பிறரை உபசரிப்பது போன்றவைகளில் கந்தப்பிள்ளை தாராளமாக இருந்த போதிலும் மற்ற விஷயங்களில் அவர் கரூர் பேர்வழி.

இந்த வருஷத்து நெல் கட்டுக்கடைக்கு வரும் வரையில், போன வருஷத்து நெல் 50 கலமாவது* கந்தப்பிள்ளையின் கையிருப்பில் இருக்கும். கையில் மடியில் இல்லாத சமயம், ஐப்பசி கார்த்திகை அடை மழைக்காலம், நல்லது பொல்லாதது வந்த வேளை முதலிய சமயங்களில், கஷ்டப்படும் குடியானவர்களுக்குக் கந்தப்பிள்ளை நெல்லும் பணமும் கடன் கொடுப்பார். ஐப்பசியில் கலம் கொடுத்து விட்டு. தையில் ஒன்றரை கலம் வசூலித்து விடும் காலகண்டர்களும் எங்களூர் பக்கங்களில் இருக்கிறார்கள். ஆனால் கந்தப்பிள்ளை அப்படிப்பட்டவரல்ல. கலத்துக்குக் கால் கலமே இவர் வட்டி. இவரிடம் வாங்கின கடனை அறுவடைக் காலத்தில் யாரும் தட்டிக் கழித்துவிடவே முடியாது. இதில் அதிக கண்டிப்பானவர். என்றாலும் ஊருக்கு உபகாரி என்று பெயர் எடுத்திருக்கிறார்.

இவர் பேச்சை எங்களூரில் யாருமே தட்ட மாட்டார்கள். கருப்பாயி மகன் இடும்பன் சோம்பேறித்தனத்தின் அவதாரம். கிழவியான அவன் தாய், நடவு நட்டு, களையெடுத்துக் கூலி வாங்கினால்தான், இவை இல்லாத மற்றக் காலத்திலோ புல்வெட்டி விற்றால்தான், இடும்பன் வயிறு நிறையும். பட்டினியானாலும் அவனுக்குப் பரவாயில்லை. பட்டினியைப் போக்க உழைப்பதென்பதே அவன் உடம்புக்கு ஒத்துக்கொள்ளாத விஷயம். ஆனால் கந்தப்பிள்ளை சொன்னால் எந்த வேலையையும் தட்டிவிடும் தைரியம் அவனுக்குக்கூட எங்களூரில் கிடையாது. “கொல்லையில் கொஞ்சம் கொத்திக் கீரை தெளிடா, இடும்பா” என்பார் கந்தப்பிள்ளை. முணு முணுத்துக் கொண்டாவது அவர் இட்ட வேலையை செய்தே தீருவான்.

---

* கலம் என்பது 24 பட்டணம் படி அளவைக் கொண்டது.

மேலும் கந்தப்பிள்ளை பட்டாமணியக்காரர். வேண்டிய போது நாட்டாண்மை செய்யச் சர்க்கார் சம்பளத்தில் வெட்டி, விசாரிப்புக்காரனும் உண்டு. உத்தரவு வந்தாலோ, ஜமாபந்தி காலத்திலோ, தாலுக்காக் கச்சேரிக்குப் போய்வர நல்ல அழகான வில்வண்டிக்கும் குறைச்சலில்லை. கல்யாணத்துக்குக் பெண் எடுக்கவும், பெண் மாப்பிள்ளையை மருவுக்கு அனுப்பவும் ஏழை எளியதுகளுக்கு வண்டி கொடுக்க கந்தப்பிள்ளை கஷ்டப்படமாட்டார். இந்த பெட்டி வண்டியில் பெண்ணெடுத்து வருவதென்பது எங்களூரிலும் அக்கம்பக்கத்திலும் இருக்கும் குடியானவர்களுக்கு ஒரு தனிப்பெருமை. எனவே உபகாரி என்ற பெயர் அவருக்கு இருந்ததில் ஆச்சரியம் என்ன ?

1941 மார்ச் மாதத்தில் எங்கள் ஊருக்குப் போயிருந்தேன். செல்வமிருந்தும், சுகப்பட வழி இருந்தும், சிடுமூஞ்சிகளாகத்தான் இருந்து தீருவதென்று சிலர் சங்கல்பம் செய்து கொண்டிருக்கிறார்களல்லவா? எப்பொழுதுமே கந்தப்பிள்ளை அந்த கோஷ்டிக்காரரர் அல்ல. என்றும் சிரித்த முகம். இந்தத் தடவை அதிக உற்சாகத்தோடும் ஆனந்தமாகவும் தோன்றினார். இதற்கு காரணமும் இருந்தது. கலம் ஒன்றரை ரூபாய்க்கும் விற்பனை யாகாதிருந்த நெல் விலை இரண்டு மடங்குக்கும் அதிகமாக விற்கிறதென்றால் எந்த மிராசுதாருக்குத்தான் குதூகலம் இருக்காது? "சண்டை வந்தது எங்களுக்குத்தான் அதிர்ஷ்டம்" என்றார் கந்தப்பிள்ளை. அதிர்ஷ்டம், சும்மா இருப்பவனுக்குக் கூரையைப் பொத்துக்கொண்டு கொட்டி விடும் என்ற நினைப்பு அவருக்கு கிடையாது. அதிர்ஷ்டத்தின் பலனை அடைவதாயிருந்தால் புத்திசாலித்தனமும் அவசியம் என்பதே அவர் சித்தாந்தம். ஆகவே புத்திசாலித்தனமான காரியத்தைச் செய்வது என்பது அவர் முடிவு. அதன்படி, தாம் செய்யப்போவது என்ன என்பதையும் என்னிடம் கந்தப்பிள்ளை விவரமாக கூறினார்.

நெல் விலை ஏறி இருக்கிறது. பவுன் விலையும் அதிக வேகமாக ஏறிவிட்டது. நெல் கையிலிருக்கிறது. மனைவியிடமும் பெண்ணிடமும் நகைகள் இருக்கின்றன. கட்டுக்

கடையில் வைக்காமல் நெல்லை விற்றால் கைமேல் பணம். அழகுக்கு என்று பார்த்துக் கொண்டிருக்காமல் நகைகளை விற்றால் அதிலும் நல்ல பணம். நெல்லோ கலம் ஒன்றரை ரூபாய்க்கு மேல் கேட்பாரற்றுக் கிடந்தது. இப்பொழுது ரூ. 3-8-0. தங்க நகைகளோ பவுன் ரூ. 13 வீதம் வாங்கிச் செய்யப்பட்டவை. இப்பொழுது பவுன் ரூ. 45. இரண்டையும் விற்றுவிட்டால் வருவது நிறையப் பணம்; பெரிய லாபம் வேறு. பிறகு பவுன் விலை குறைந்துபோகும். பணம் இருப்பதால் இரட்டிப்பு மடங்கு நகைகளைச் செய்து கொள்ளலாம்; நிலத்தையும் வாங்கிப் போடலாம். அதிர்ஷ்டத்தைப் பயன் படுத்திக்கொள்ள தம் மனைவியுடன் கலந்து ஆலோசித்து, கந்தப்பிள்ளை அனுஷ்டிக்க இருந்த புத்தி சாலித்தனமான காரியங்கள் இவைகளே. கோவிந்தக்கோனாரிடமிருந்து வட்டியும் முதலுமாக இவருக்கு ஆயிரம் ரூபாய் வரை வரவேண்டியிருந்தது. அவருக்கு இருப்பதோ ஒரு வேலி நிலம். இன்னும் ஓர் ஆயிரத்தையோ அல்லது கசகினால் நூறு இருநூறு அதிகமாகவோ கொடுத்து அந்த ஒரு வேலி நிலத்தையும் வாங்கி விடுவதென்பதும கந்தப் பிள்ளையின் குறி. மூத்த மகன் கணபதிக்கு, பட்டணத்தில் உத்தியோகமாகி ஒரு மாதம்தான் ஆயிற்று. சப் ரிஜிஸ்டிரார் ஆபீஸில் அவனுக்கு குமாஸ்தா வேலை. "சித்திரை பிறந்ததும் அவனுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணிவிட்டு, இரண்டு வருஷத்தில் மரகதத்தையும் நல்ல இடமாகப் பார்த்துக் கொடுத்துவிட்டால் கவலை தீர்ந்தது" என்றும் கந்தப்பிள்ளை கூறினார்.

யுத்தத்தின் மூலம் வந்த அதிர்ஷ்டத்தை உபயோகித்துக்கொள்ள, கந்தப்பிள்ளை கையாண்ட வித்தையின் விவரத்தைக் காணும் சந்தர்ப்பம் அதற்குப் பிறகு மூன்று வருஷங்கள் வரையில் எனக்குக் கிடைக்கவில்லை. இந்த வருஷம் மார்ச் மாதத்திலேயே திரும்பவும் ஊருக்குப்போனேன். கந்தப்பிள்ளையின் திட்டங்களெல்லாம் கைகூடி யிருக்கும் என்பது என் நினைவு. பார்த்து விசாரிக்க வேண்டுமென்ற ஆவல். ஆகையால் ஊரில் இறங்கியதும் இறங்காததுமாக, கந்தப்பிள்ளை வீட்டுக்குப் போனேன். வீட்டில் பழைய கல்

கலப்பைக்காணோம். கந்தப்பிள்ளையும் வீட்டில் இல்லை. என் பேச்சுக் குரலைக் கேட்டதுமே வெளியே வந்து அன்போடு வரவேற்கும் அவர் மனைவியும் வெளியில் தென்படவில்லை. "என்ன, அம்மா, சவுக்கியமா?" என்று குரல் கொடுத்தேன். "வா, அப்பா! என்னமோ இருக்கிறோம். வெளியே போயிருக்கிறாங்க, வருவாங்க" என்று உள்ளே இருந்தபடியே அந்த அம்மாள் பதிலளித்தாள். குடும்பத்தில் ஏதாவது சச்சரவா? ஏதாவது விபரீதம்தான் நடந்துவிட்டதா? வீட்டின் களையில்லாத இந்த தோற்றத்துக்கும், சிரித்த முகத்தோடு வரவேற்கும் சுபாவமுள்ள அந்த அம்மாள் வெளியில் தலையைக் காட்டாததற்கும் காரணம் வேறு என்னதான் இருக்கும்? யாரைக் கேட்பது? எப்படி கேட்கிறது? இவ்விதம் யோசித்தபடியே தெருத்திண்ணையில் உட்கார்ந்தேன்.

வெட்டி பக்கிரி வந்தான். கட்டுமஸ்தாக, கம்பீரமாக இருந்த அவன் உடம்பு இப்பொழுது வற்றிப்போயிருந்தது. "என்ன, பக்கிரி, உன் உடம்புக்கு என்ன?" என்றேன். "உடம்புக்கு ஒண்ணுமில்லிங்க, வயித்துக்குப் பத்தாதது தானுங்க" என்றான். "வெட்டி வேலையில் இருக்கிறாயல்லவா?" என்று கேட்டேன். "வேலையில் இருக்கிறேனுங்க. மாசத்துக்கு ஏழு ரூபாய்க் காசு வருது. அதை வச்சிக்கிட்டு இந்தக் காலத்திலே எப்படிங்க வயிறு பிளைக்கிறது?" என்றான் பக்கிரி. வெட்டிக்கு மாதம் ஏழு ரூபாய் சர்க்கார் சம்பளம். கிராமத்திலே ஒரு ஏழைக்கு இதுவே பெரிய சம்பத்து! என்றாலும் வயிற்றுக்குப் போதவில்லை என்கிறான். மேலும் ஆளும் வற்றிப்போயிருக்கிறான். எதனால்? இந்த நுட்பத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆவல் எனக்கு அதிகமாயிற்று. கேள்விக்குமேல் கேள்வியாகக் கேட்டுக்கொண்டே போனேன். அவன் கஷ்டத்தின் காரணமும் எனக்கு விளங்கியது.

பிள்ளை குட்டியுடன் பக்கிரியின் குடும்பத்திலிருப்பவர்கள் ஐந்து பேர்கள். சோற்றுக்காக ஆளுக்கு மாதத்துக்கு ஒரு கலம் நெல் என்பது சர்வசாதாரண தேவை; அதுதான் கணக்கும். அதன்படி பார்த்தால் குறைந்தது பக்கிரி

குடும்பத்துக்கு மாதம் நான்கு கலம் நெல் வேண்டும். கலம் ரூ. 3-8-0 ஆக விற்கிறது. இவன் சம்பளத்தைக்கொண்டு அப்படியே நெல்லாக வாங்கி விடுவதானாலும் இரண்டு கலத்துக்குமேல் ஓர் உழக்கும் வராது. நெல் மாத்திரம் இருந்தால் சோறாகிவிடுமா? சர்க்கார் சேவகன் என்பதற்காக உப்பு, புளி, மிளகாயோ, மானத்தை மறைக்கக் கொஞ்சம் துணிமணியோ சும்மா வந்துவிடாது. காசு கொடுத்தால்தான் இவை கிடைக்கும். இவற்றின் விலைகளும் ஒன்றுக்கு மூன்று, நான்கு மடங்காக ஏறிப்போயிருக்கின்றன. களத்து மேட்டிலோ, நிலமிருப்பவர்கள் வீட்டு வாசலிலோ, வெட்டி, தலையாரி என்று போய் நின்றால், குருணி, பதக்கு நெல் கொடுப்பது வழக்கம். நெல் விலை ஏறிப்போயிருக்கும் இந்தக்காலத்தில் அப்படி கொடுப்பாரும் யாருமில்லை. "விலைக்குக்கூட நெல் எங்கே கிடைக்கும் என்று தேடி அலைய வேண்டியிருக்குங்க. நம்ம அய்யாகூட களத்திலே வித்துடுறாரே. முன்னேயெல்லாம் கட்டுக்கடையிலே வச்சிருப்பாங்க; ஊரிலே விக்கிற விலைக்கு ரெண்டு அணா குறைச்சிக்கூட எனக்குக் கொடுப்பாங்க. அதெல்லாங்கூட இப்போ இல்லிங்க" என்று வருத்தத்தோடு சொன்னான் பக்கிரி. அவனுக்கு உண்டாகியிருக்கும் கஷ்டம் எனக்கு விளங்கிற்று. அவன் இளைத்துச் சோர்ந்து போயிருப்பதன் காரணத்தையும் தெரிந்து கொண்டேன்.

பக்கிரியின் கஷ்ட ஜீவனக் கதையின் பரிசிலனை பூர்த்தியாவதற்கு முன்னாலேயே, வெளியில் போயிருந்த கந்தப் பிள்ளையும் வந்து சேர்ந்தார். அவர் நிலையைக் கண்டதும் திடுக்கிட்டுப் போனேன். தளதள வென்றிருந்த அவர் மேனியின் அழகு எங்கே? முகத்தில் சதாகாலமும் தவழ்ந்து கொண்டிருந்த புன்சிரிப்பைக்கூட காணோம். வழக்கமான அவருடைய உற்சாகமும் இப்பொழுது தென்படவில்லை. யுத்தம் வந்ததன் காரணமாக அவரைத்தேடி வந்த அதிஷ்டத்தின் கதி என்னவாயிற்று? பளிச்சென்றிருக்கும் பரிசுத்தமான வெள்ளை வேஷ்டி கட்டி, மேலே துண்டும் போட்டிருப்பார். அந்த வேஷ்டியும் துண்டுங் கூடவா நைந்து பழுப்பேறிப் போனவைகளாக இப்

பொழுது இருக்கவேண்டும்? அவரைப் பார்த்துப்பார்த்து, இதையெல்லாம் யோசித்து ஒரு க்ஷணத்தில் என் மூளையும் குழம்பிப் போய்விட்டது.

திண்ணைமேலே கந்தப்பிள்ளை என் பக்கத்தில் வந்து உட்கார்ந்தார். என் யோக க்ஷேமங்களை விசாரித்தார். புரியாத ஒரு விஷயத்தில் புத்தி ஈடுபட்டிருந்ததால் அவர் கேட்டதற் கெல்லாம் ஏதோ பதில் சொல்லி வந்தேன். "உங்களுக்கு உடம்புக்கு என்ன?" என்று மெதுவாக கேட்டேன். "எனக்கு உடம்புக்கு ஒன்றுமில்லை. இனி, குடித்தனம் பண்ணி எப்படி வாழப்போகிறோம் என்பது தான் தெரியவில்லை" என்றார். குடித்தனத்தில் மகா கெட்டிக்காரர் என்று பெயரெடுத்த கந்தப்பிள்ளைக்கு, 'எப்படி வாழப் போகிறோம்' என்பது தெரியாத ஒரு நிலைமை வந்திருக்குமானால், அது சாமான்ய சங்கதியாக இருக்க முடியாது. ஆகையால் விவரத்தை கேட்டேன். இரண்டு மணி நேரம்போல் பேசிக்கொண்டிருந்தோம். இந்த மூன்று வருஷங்களில் தமக்கு ஏற்பட்ட கஷ்டங்களையெல்லாம் அவர் விவரமாகச் சொன்னார். இதைச் சொல்லி வரும் போது சில இடங்களில் அவர் கண்களும் கலங்கியதைக் கண்டேன். அவர் நிலைமை எனக்குத் தெரிந்தது. அவருடைய உடல் இளைப்பின் காரணமும், வாழ்க்கையில்கூட வெறுப்புத் தோன்றிவிட்டதன் மர்மமும் எனக்கு தெளிவாயின.

அதிர்ஷ்டத்தின் பலனை அனுபவிக்க புத்திசாலித்தனமான யோசனைகள் சிலவற்றைக் கந்தப்பிள்ளை சிந்தித்து வைத்திருந்தாரல்லவா? அதன்படி நடந்தார். நெல்லை நல்ல விலைக்கு விற்றார். நகைகளையும் விற்று ரொம்பப் பணமாக்கினார். மாட்டு விலையும் தூக்கலாயிற்று. நல்ல விலை மாத்திரமல்ல, லாபங்கூட வரும்போது விற்றுப் பணமாக்காமல் இருப்பது பைத்தியக்காரத்தனம் என்று கருதினார். வண்டி மாடுகளையே யன்றி உழவு மாடுகளையும் விற்றார். அவற்றை இவர் வாங்கின விலை ரூ. 320. ஆனால் விற்றதோ ரூ. 470-க்கு. இரண்டு வருஷம் உழுத பிறகு

மாடுகளை ரூ. 150 லாபத்துக்கும் விற்க முடிந்ததென்றால் இது ஓர் அதிர்ஷ்டமல்லவா ?

சாப்பாட்டுக்கும், விதை, தரிசுக்கூலிக்கும் வேண்டியது போக மிச்சமிருக்கும் நெல்லை எப்படியும் கந்தப்பிள்ளை விற்கவேண்டியவரே. விற்ற அவருக்கு நெல்லை வாங்க வேண்டிய அவசியமில்லை. விற்ற நகைகளுக்குப் பதிலாக வேறு நகைகளை உடனே வாங்கியே தீரவேண்டும் என்ற நிர்ப்பந்தமும் கிடையாது. வந்த பணம் பத்திரமாக இருந்தால் சரி. ஆனால் மாடுகள் விஷயம் வேறு. சாகுபடி நடந்தாக வேண்டும். மாடுகள் இல்லாமல் அது முடியாது. வாங்குவதென்று புறப்பட்டார். இவர் விற்ற சமயத்தில் இருந்ததைவிட மாட்டு விலை அதிகமாக ஏறிப் போய்விட்டது என்பதைக் கண்டார். விற்றதில் வந்த லாபம் போனாலும் சரி, அவ்வளவு பணத்திற்கும் அதே விதமான மாடுகளும் கிடைப்பதாயில்லை. ஆடி வரையில் அல்லாடிப் பார்த்துவிட்டு ரூ. 530-க்குத் தமக்கு வேண்டிய மாடுகளை ஓட்டி வந்தார். படிச்செலவானது உள்பட இவருக்குக் கையை விட்டுப் போனது ரூ. 100. அதோடு முன்பு விற்றவைகளை விட இப்பொழுது வாங்கியவைகள் சப்பை மாடுகள். நல்ல தீனிவைத்துத் தேற்றிவிடலாம் என்பது அவர் துணிவு. ஆனால் பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை விலை ஒன்றுக்கு நாலாகி விட்டதால் இந்த முயற்சியிலும் அவர் கையிலிருந்து பணம் தான் கரைந்தது.

நாலணா போட்டால் முன்பெல்லாம் கலப்பைக்கு நல்ல கொழு கிடைக்கும். இப்பொழுது இரண்டு ரூபாய் போட்டாலே கிடைக்கும். 10 அணா விற்ற மண்வெட்டியின் விலை இன்று மூன்று ரூபாய். அதிக விலை கொடுத்து வாங்கினாலும் இந்த மண்வெட்டி பாதி சாகுபடிக்குக்கூட நிற்பதில்லை. இன்னும் குறைந்த விலையில் வாங்கினால் அதன் உழைப்பைப்பற்றி கேட்கவே வேண்டாம். போதாக் குறைக்கு பென்னடைப்பான் நோய் வந்து கந்தப்பிள்ளையின் இரண்டு ஏர்மாடுகளை கொன்றுவிட்டது. செத்த இந்த மாடுகளை முன்பு என்ன விலைக்கு வாங்கினாரோ அதைவிட இன்னும் கால்மடங்கு அதிகவிலை கொடுத்தே

புது மாடுகளை வாங்கவேண்டியதாயிற்று. உழவுச் செல வின் நிலைமை இது. சொன்ன சொல்லைத் தட்டாமல் கொல் லையில் கீரையாவது பயிரிடப் பிரயோஜனமாயிருந்த கருப் பாயி மகன் இடும்பன் சண்டையில் சேர்ந்துவிட்டான். கந்தப்பிள்ளையின் இன்னுமொரு பண்ணையாளும் அவனோடு போய்விட்டானும். இதனால் சாகுபடிக்கு ஆள் பஞ்சம் வேறு.

கந்தப்பிள்ளையின் வாழ்க்கைச் செலவு நிலைமையைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. அரிசியை அவர் வாங்க வேண்டாம். ஆனால் உப்பு, பருப்பு, மிளகு, மிள காய், எண்ணெய், எல்லாம் வாங்கினால்தான் சாப்பாடு நடக்கும். காப்பிக்கொட்டை, சர்க்கரை வாங்குவதும் தவிர்க்க முடியாத செலவுகள். அத்துடன் ஆணுக்கும், பெண்ணுக்கும் கட்டத் துணிகள் வேண்டும். இவைகளின் விலையெல்லாம் இப்பொழுது ஏறிவிட்டது. இவற்றுக்கு முன்பு கந்தப்பிள்ளையின் குடித்தனத்துக்கு வருஷத்துக்கு ரூ 200 தாராளமென்றால் இப்பொழுது ரூ. 600 இருந்தால் தான் சிக்கனமாகவாவது வாழ முடியும். மாயவரத்தில் படித்துக்கொண்டிருக்கும் அவருடைய இளைய மகன் படிப் புச் செலவும் இப்பொழுது அதிகமாகியிருக்கிறது.

“குடித்தனம் பண்ணி எப்படி வாழப்போகிறோம் என் பதுதான் தெரியவில்லை” என்று கந்தப்பிள்ளை முதலில் சொன்னாரே, அது சும்மா அல்ல. பசுக்களும் எருமையு மாக அவர் வீட்டில் கறவை மாடுகள் எப்பொழுதும் மூன் றுக்கு குறைந்து இருந்தது இல்லை. போன ஐப்பசியில் ஒரு மாடு கோமாரி கண்டு செத்துவிட்டது. ஒரு மாடு சூலாகிவிட்டது. மற்றொரு மாடும் கறப்பது நின்று மூன்று மாதங்களாயின. ஒன்றுக்கு மூன்று விலையானாலும் ஒரு பசுவாவது வாங்கலாம் என்றுதான் முயற்சித்து வரு கிறார். நல்ல மாடு ஒன்று அவருக்கு கிடைத்தபாடில்லை. ஆகையால் பாலும் நெய்யும் தாராளமாகப் புழங்கிய அவர் வீட்டில் இந்த இரண்டுக்குங்கூட இன்று திண்டாட்டம். சவாரி வண்டி சக்கரத்தின் கட்டு விட்டுப்போயிருக்கிறது. வில்லும் முறிந்துவிட்டது. கட்டுப்போட்டு ஒரு வில்லும்

புதிதாக வாங்கிவிடலாம் என்ருல் அவை கிடைப்பதே கிடையாது. தாலுக்கா கச்சேரிக்கும், அங்குமிங்கும் போவ தென்ருல் வண்டி சவாரி செய்துவந்த கந்தப்பிள்ளை, இதனுல் இப்பொழுது பாதசாரியாகி யிருக்கிருர்.

நெல் விலை ஏறியதால் கந்தப்பிள்ளைக்கு அதிகப்பணம் வந்தது என்பது வாஸ்தவம். ஆனுல் அவசியமான மற்றப் பொருள்களின் விலையோ நெல் விலையைவிட இன்னும் அதிகமாக உயர்ந்தது. இதனுல் அவருடைய உழவுச் செல வுக்கும் வாழ்க்கைச் செலவுக்கும் நெல்லை விற்ற பணம் பற் ருதுபோயிற்று. பட்டாமணியத்தில் வரும் சம்பளத் தைப் போட்டும் சமாளிக்க முடியவில்லை. நகையை விற்று வைத்திருந்த பணத்திலும் மெள்ள மெள்ளக் கைவைக்க வேண்டியதாயிற்று. இந்த விவரத்தை யெல்லாம் சொல் லும்போதுகூட அவர் கலங்கவில்லை. ஆனுல் அவர் பெண் மரகதத்தின் கல்யாணம் நடந்த கதையைப்பற்றி சொல் லும்போதே அவர் கண்கள் கலங்கிவிட்டன. போன ஆனி யில் இந்த கல்யாணம். நல்ல இடத்திலேயே மரகதம் வாழ்க்கைப்பட்டாள். கந்தப்பிள்ளை வரதக்ஷிணை கொடுக்க வேண்டிவரவில்லை. ஆனுல் கையைக் கழுத்தை மூடித்தானே கட்டிக் கொடுக்கவேண்டும்? இருந்த நகைகளையோ விற்று விட்டார். இவர் விற்கும்போது பவுன் ரூ. 45 ஆக இருந் தது. வாங்கித் தீரவேண்டிய அவசியம் வந்தபோது பவுன் விலை ரூ. 56. நகைக்குக் கூலி வேறு. மனைவி, மகள் நகைகளை விற்றதால் இவருக்கு கிடைத்தது ரூ. 2,200. உழவு, குடும் பச் செலவுக்காகக் கரைந்ததுபோக இதில் மிச்சம் இருந்தது ரூ. 1700. மகளுக்கு ஆயிரம் ரூபாய்க்கு நகை வாங்கிப் போட்டு மீதியிருந்த ரூ. 700-ஐக் கொண்டு சீர், மாப்பிள் ளைக்கு மரியாதை, மருவீட்டுச் செலவு முதலியவைகளைச் செய்து முடித்தார். ஆனுல், "பெண்ணுக்கு நல்ல சீர் வரிசை யுண்டா? நல்ல நகைதான் 'உண்டா?'' என்று மாப்பிள்ளை வீட்டுப் பெண்டுகள் பேசிக்கொண்டார்களாம். அதைக் கேள்விப்பட்டு, கந்தப்பிள்ளையின் மனைவி மூன்று நாள் அழுது கொண்டிருந்தாளாம். "இவ்வளவு செலவு செய்தும் செண்டிப்பாகச் செய்ய முடியாத காலமாகப்

போச்சே" என்று கூறிக் கந்தப்பிள்ளையும் கண்கலங்குகிறார். மகள் கல்யாண காலத்தில் தம் மனைவி இரவல் நகை போட்டுக் கொண்டிருக்க நேர்ந்ததையும், நகை எதுவுமே இல்லாமல் வெளியில் நடமாட மனம் குன்றித் தம் மனைவி இன்று இருக்கும் நிலைமையையும் நினைக்க நினைக்க இவர் மனமும் குன்றிப் போகிறது.

கோவிந்தக் கோனாருக்குக் கொடுத்திருந்த கடனைப்பற்றியும் கந்தப்பிள்ளை திட்டம் போட்டிருந்தார் அல்லவா? வரவேண்டிய ஆயிரம் ரூபாயுடன் மேற்கொண்டும் ஆயிரமோ இன்னும் கொஞ்சம் அதிகமாகவோ கொடுத்து, கோவிந்தகோனாரின் ஒரு வேலி நிலத்தையும் சாசனம் எழுதி வாங்கிக்கொண்டு விடுவது என்பதே இவர் யோசனை. ஆனால் எல்லாம் விலை ஏறிப்போனதைப்போல நிலவிலையும் ஏறி விட்டது. ரூ. 2500-க்கு மேற்படாமலிருந்த ஒரு வேலி நிலம் ரூ. 5000-க்கும் வந்தது. பக்கத்து ஊர் மன்னார் நாயுடு, கோனாரின் நிலத்தை ஆறாயிரத்துக்குப் பேசக் கிளம்பினார். நாயுடு புதுப் பணக்காரர். ஜில்லா போர்டு ரோடு கண்டிராக்டராக இருந்து எப்படியோ சுமாராகத் தலை தூக்கினார். இப்பொழுது ராணுவ கண்டிராக்டராகி விட்டார். தென் இந்தியாவில் பேர் சொல்லப்படாத ஏதோ ஓர் இடத்தில் நடக்கும் ராணுவ சம்பந்தமான வேலைகளுக்குக் கல்லும் மண்ணும், காய்க்காத பனை மரமும் சப்ளை செய்து பெரும்பணம் படைத்துவிட்டார் என்கிறார் கந்தப்பிள்ளை. எதற்கு எடுத்தாலும் பணத்தை வெற்றுக் கடுதாசி மாதிரி வாரி வீசுகிறாராம் கண்டிராக்டர் நாயுடு. நகையை விற்ற பணத்தையும் கைகழுவி விட்டிருக்கும் கந்தப்பிள்ளை அவருடன் எப்படிப் போட்டி போடமுடியும்? நிலம் வாங்குவதில் மாத்திரமா அவர் போட்டி? இரண்டு மாதங்களுக்கு முன்பு அடுத்த ஊரில் ஒரு பசு இருந்தது. என்ன அதிக விலையானாலும் ரூ. 80-க்கு மேலே பெறுதாம். கந்தப்பிள்ளை ரூ. 100-க்கு அந்த மாட்டைக் கேட்டிருந்தார். கண்டிராக்டர் நாயுடு ரூ. 125 கொடுத்து மாட்டை வாங்கிக் கட்டிவிட்டாராம். இப்படிப் புதுப்பணம் படைத்தவரிடமா கந்தப்பிள்ளையின் போட்டி பலிக்கும்?

இன்னும் ஓர் ஆயிரத்துக்குக் கொஞ்சம் அதிகமாகக் கொடுத்து ஒரு வேலி நிலத்தையே வாங்கிவிடுவதென்று கந்தப்பிள்ளை எண்ணியிருந்தது, நிலவிலை ஏறியதால் ஆகாத காரியமாயிற்று. கண்டிராக்டர் நாயுடுவின் போட்டியால் கொடுத்திருந்த பணத்துக்குக் கால்வேலி நிலம் கிடைப்பதும் துர்லபமாயிற்று. கையில் மடியில் மிஞ்சியிருந்ததும் கைமாற்றும் வாங்கிப்போட்டு வரவேண்டிய ஆயிரத்துடன் இன்னும் ரூ 200ம் சேர்த்துத் தந்து, நான்கு மா நிலத்தைக் கோவிந்தக் கோனரிடமிருந்து சாசனம் வாங்கினார்.

இந்தக் கிராக்கியில் இப்படி நிலம் வாங்குவானேன்? வரவேண்டிய கடனை வசூலித்து வைத்திருந்தால் விலை மலிகிற காலத்தில் வாங்கிக் கொள்ளக்கூடாதா? இப்படி ஏன் செய்திருக்கக்கூடாது என்று கந்தப்பிள்ளையைக் கேட்டேன். அதற்கு அவர் சொன்ன பதில் இதுதான்: "பணமா? அது இந்தக் காலத்தில் என்னத்துக்கு ஆகிறது? கையிலிருந்தால் காற்றாகப் பறக்கும்; காரியத்தில் ஒன்றும் இருப்பதில்லை. நகையை விற்ற பணங் கூடப் பாழாகப்போன கதையைத்தான் சொன்னேனே. வசூலாகும் கடன் தொகைக்கும் அந்தக் கதி வேண்டாம் என்பதற்காகவே அதிக விலையானாலும் கொஞ்சம் நிலமாகவாவது இருந்து போகட்டும் என்று வாங்கினேன்."

கந்தப்பிள்ளையின் கஷ்டம் இதோடு முடிந்து விடவில்லை. சென்னையில் சர்க்கார் ஆபீஸில் இவருடைய மூத்த பிள்ளை கணபதிக்குக் குமாஸ்தா வேலையல்லவா? வேலைக்குப்போனவருஷத்திலேயே கைக்கடிப்பு எதுவும் இல்லாமல் அவனுக்குக் கந்தப்பிள்ளை கல்யாணத்தையும் செய்துவிட்டார். காலாகாலத்தில் கணபதிக்குக் கைக்குழந்தையும் இருக்கிறது. தம்பதிகள் சென்னைப் பட்டணத்திலே குடித்தனம் செய்து வருகிறார்கள். தகப்பனருக்கு எழுதும் கடிதங்களிலெல்லாம், "இங்கே எப்படிக் குடித்தனம் பண்ணுவ தென்பதுதான் தெரியவில்லை" என்று அவன் எழுதிக் கொண்டிருந்தது உண்டாம். ஆனால் முந்திய நாள் அவனிடம் இருந்து வந்த கடிதம்தான் அவருக்குப் பெரிய இடி.

அந்த காகிதத்தையும் கந்தப்பிள்ளை என்னிடம் கொடுத்தார். எட்டுப் பக்கங்கள் எழுதியிருந்தான். வாழ்க்கைக் கஷ்ட வரலாறு அதில் புள்ளி விவரத்துடன் இருந்தது. கணபதிக்கு மாதச் சம்பளம் ரூ. 36-8-0. விலைவாசி ஏற்றத்தை முன்னிட்டு, சர்க்கார் காட்டும் தாராளத்தால் வருவது ரூ. 10. இந்த ரூ. 42-8-0ஐக் கொண்டே அவன் தானும், பெண்டாட்டியும், தந்தையின் கஷ்டத்தை அறிந்து பாலுக்கு அழாமலிருக்கவேண்டுமென்பதைக் கற்றுக்கொள்ளும் பிராயத்தை அடையாத குழந்தையும், குடித்தனத்தை நடத்தியாக வேண்டும். செலவுக்கணக்கையும் எழுதியிருந்தான். வாடகை ரூ. 14; பங்கீட்டில் கிடைக்கும் விறகு போதாமல் வாங்கித் தீரவேண்டிய கரிமூட்டை உள்பட, அடுப்புப் புகைய ஆகும் செலவு ரூ. 8-12-0; குறிப்பிட்ட நேரத்தில் அரிசிக்கும், விறகுக்கும், வாரம் அரைப்புட்டி மண்ணெண்ணெய்க்கும் காத்திருந்து வாங்கிக் கொண்டு வந்து சேர்ப்பதற்கென்றே அமர்த்தப்பட்டிருக்கும் வேலைக்காரி சம்பளம் ரூ. 3. ஆபீஸுக்குப் போய்வர வழிச்செலவில் ரூ. 5; மற்றதெல்லாம் தவறினாலும் மறக்காது வந்து சேரும் மத்தியான டிபன் டயத்தில், அடிவயிற்றையாவது எட்டிப்பார்த்திருக்குமா என்று சந்தேகப்படும் முறையில் தினசரி சாப்பிடும் டிபன் செலவுக்கு மாதம் ரூ 7. இவற்றுக்கு மாத்திரம் மொத்தம் செலவு ரூ. 37-12-0. இன்னம் குழந்தைக்குப் பால் வேண்டும்; தம்பதிகளுக்குக் காலை காப்பியை நிறுத்திவிடும் சாமர்த்தியம் இல்லை. கேவலம் கத்தரிக்காய் வீசை 10 அணாவுக்கும் குறையாமலிருக்கிற சமயத்தில் ஒரு பொரியலும் ஒரு குழம்புடனுமாவது இரண்டு வேளை சாப்பாடும் நடக்கவேண்டும். உபவாசமிருந்துவிடுவதென்று தீர்மானித்தாலும் உடுத்தாமல் இருக்க முடியாத உபத்திரவம் வேறு! ஒரு மாதத்துக்கு முன்னால் இரண்டு நாள் லீவ் எடுத்துக்கொண்டு அடையாற்றுக்கும், அம்பட்டன் வாராவதிக்கும், காலாடிப்பேட்டைக்குமாக விறகைத் தேடி வேட்டைக்குப் போனதில் பஸ், டிராம் செலவு மாத்திரம் ரூ. 2-3-0 ஆன விதத்தையும் கணபதி விவரமாக எழுதி யிருந்தான்.

முடிவாக, தகப்பனுருக்குக் கணபதி தெரிவித்திருந்த விஷயம் இதுதான்: "மாதம் ரூ. முப்பதாவது நீங்கள் அனுப்பிக் கொண்டிருக்க வேண்டும். இல்லாவிட்டால் பெண்டாட்டி பிள்ளையுடன் இங்கு வாழவே என்னுல் முடியாது. உங்கள் பதிலைப் பார்த்துக்கொண்டு வருகிற ஞாயிற்றுக்கிழமை அவளையும் குழந்தையையும் ரயிலேற்றி அங்கு அனுப்பிவிடுகிறேன்." கடிதத்தின் கடைசியில் இன்னுமொன்றும் எழுதியிருந்தான். "கமலத்தின் நகைகளை மார்வாடியிடம் அடகு வைத்திருக்கிறேன். அசல் மாத்திரம் ரூ. 230. வட்டியுடன் ரூ. 280 ஆகும். பணம் அனுப்பினுல் மீட்டு அனுப்புகிறேன். இல்லாவிட்டால் முழுகிப்போய் விடும். பின்னுல் என்பேரில் குற்றஞ் சொல்லக்கூடாது என்பதையும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்."

எங்களூர் பெரிய புள்ளியான கந்தப்பிள்ளையின் நிலைமை இது. பொதுவாக உழுதவன் கணக்கும் இதுதான். இன்னும் சொல்லுவதானுல், இன்று விவசாயிகளின் கதியும் இதுவே. நூறு, ஆயிரம் வேலி மிராசுதார்கள் இருக்கலாம். ஆனுல் எங்கோ சில ஊர்களில் சிலர்தான் உண்டு. கிராமவாசிகளெல்லாம் பெரிய மிராசுதார்களல்ல; எல்லோரும ஜமீன்தார்களுமன்று. எல்லோரும் மன்னுர்நாயுடுவைப் போல ராணுவ கண்டிராக்டர்கள் ஆகிவிடவும் இல்லை. கந்தப்பிள்ளை போன்றவர்கள் அநேகமாக எல்லாக் கிராமங்களிலுமே உண்டு. இவரினும் ஏழைகளும், கஷ்டஜீவிகளுமே ஏராளம். கிராமம் தெரிந்தவர்களுக்கு இது கட்டாயம் புரியும். இந்தியா மந்திரி அமெரியோ, இந்திய விவசாயிகள் சுபிட்சத்தில் மிதக்கிருர்கள் என்கிருர். விளை பொருள்களை விற்க மனமில்லாமல் பதுக்கி வைக்கிருர்கள் என்கிருர். ஆறுயிரம் மைலுக்கு அப்பாலே இருந்துகொண்டு பேசும அமெரியின் அறியாத்தனத்தையாவது ஒருவேளை மன்னிக்கலாம். இந்திய சர்க்காரின் நிதி மெம்பரோ, ரிசர்வ் பாங்க் இப்பொழுது விற்றுவரும் தங்கத்தையெல்லாம் வாங்கிக் குவிப்பவர்கள் விவசாயிகளே என்று சாதிக்கிருர்!

கிராமங்களை அறியாதவர்களுக்கு, கணபதி போன்றவர்களையாவது தெரிந்திருக்கும். பட்டண வாசமென்றால் குபேர சம்பத்தும் கூடவே எல்லோரிடமும் குடிபுகுந்து விடுவதில்லை. பணக்காரர்கள் அங்கும் ஒரு சிலரே. உத்தியோகம் என்றால் எல்லோருக்கும் ஆயிரம் ரூபாய் சம்பளமுமில்லை. கணபதியை ஒத்தவர்களும், அதற்கும் கேடுகெட்ட நிலைமையில் இருப்பவர்களுமே ஏராளம். வயிற்றைக்கழுவ முடியாவிட்டாலும், பல்லைக் கடித்துக்கொண்டாவது பட்டணத்தில் இருந்தே தீருவதைத் தவிர வேறு எக்கதியும் அற்றவர்கள் அநேகர் இருக்கலாம். கணபதியைப்போல எல்லோரும் அதைரியசாலிகள் அல்ல என்பதும் உண்மையாகக்கூடும். என்றாலும் அரைப்பட்டினியும், முழுப்பட்டினியும் மற்றக் கஷ்டங்களும் பெருகிக்கொண்டு போவது மாத்திரம் எல்லாருக்கும பொது. ஆகையால் கிராமங்களிலும, பட்டணங்களிலும் - இந்தியா முழுவதுமே-மக்களுக்குத் துன்பங்களும் துயரங்களும் இன்று சர்வ நிரந்தரம்.

நந்தப்பிள்ளை, நெல்லையும் நகைகளையும் விற்றார். ஆனால் தமக்கு வேண்டியது போக மீதமிருந்த நெல்லையே அவர் விற்றுவிடுகிறார். கையிருப்பில் கொஞ்சம் நெல்லாவது அதிகப் படியாக வைத்திருந்தாரானால், நெல் வாங்கத் தேடி அலைய வேண்டிய தொந்தரவு வெட்டி பக்கிரிக்கு வந்திருக்காது என்பது வாஸ்தவம். ஆனால் வைத்திருக்கக் கந்தப்பிள்ளை விரும்பினாலும் இப்பொழுது முடியாது. ஒவ்வொரு மிராசுதாரும் இவ்வளவு நெல்லை விற்றாக வேண்டும் என்று சர்க்கார் அதிகாரியின் உத்தரவு வந்து விடுகிறது. விற்றுத் தீரவேண்டியது அவர் விதி. விற்றால்தான் வாழ்க்கைச் செலவைக் கடத்தவும் முடியும். ஆகையால் விற்றது தவறு அல்ல. பணப் பேராசைப் பிடித்தே நெல்லை விற்றார் என்று குற்றஞ்சாட்டுவதற்கும் இடம் கிடையாது.

நகையையும் விற்றார். விற்க வேண்டுமென்று யாரும் அவரை நிர்ப்பந்தப்படுத்தவில்லை. பிறகு ஏன் விற்றார்? திடீரென்று அவருக்குப் பணத்தின் பேரில் வந்த ஆசையே இதற்குக் காரணம். பணத்தைக்கொண்டே நகைகளை முதலில் வாங்கினார். பணத்திற்கே இப்பொழுதும் நகைகளை விற்றார். ஆனால், அப்போதைக்கும் இப்பொழுதுக்கும் அவருடைய மனோபாவத்தில் மாத்திரம் ஒரு வித்தியாசமுண்டு. நகையும் ஒரு பண்டம். பணத்தைக் கொடுத்து நகையை அவர் வாங்கிய காலத்தில் பணத்தின் மீதிருந்ததைவிட, பண்டத்தின் பேரிலேயே இவருக்கு அதிக ஆசை இருந்தது. பின்னால் பண்டத்தின்பேரில் இருந்ததைவிடப் பணத்தின் பேரில் அதிக ஆசை வந்ததாலேயே விற்றார். இதுவே அவர் மனோபாவத்தில உண்டான மாறுதல். இதில் மற்றொரு முக்கிய விஷயமும் உண்டு. நகையே இனி கூடாது என்ற துறவு எண்ணத்தோடு அவர் விற்கவில்லை. இப்பொழுது பணத்தைப் பெருக்கிக்கொண்டு பின்னால் அதிக நகைகளை வாங்கலாம் என்பது அவர் எண்ணம். இந்த எண்ணத்தின் பேரிலேயே மாடுகளையும் விற்றார். இந்த எண்ணம் வந்ததிற்கு மூலகாரணம் என்ன? தங்கவிலை

ஏறியதும் மாட்டுவிலை அதிகரித்ததுமேயாகும். ஆகவே லாபம் வரும் என்ற எண்ணம் குற்றமல்ல. விலைவாசிகள் ஏறிப் பணத்தின் மதிப்பு இப்படிப் படுமோசமாகிவிடும் என்பதை அறியாமல் போனதே அவர் செய்த தவறு.

கந்தப்பிள்ளை திரும்பவும் நகைகளையும் மாடுகளையும் வாங்கவே நேர்ந்தது. எண்ணியபடி லாபம் வராமல் போனதுடன் நஷ்டமே அவருக்கு. மேற்கொண்டும் விலை ஏறியதே இவருடைய நஷ்டத்திற்கும் காரணம். உப்பு, பருப்பு முதல் உடுத்தும் துணி வரையில் எல்லாப் பொருள்களின் விலையும் ஏறிவிட்டதாலேயே அவருடைய குடும்பக் கஷ்டங்கள் அதிகரித்தன. நெல் விலை ஏறியதால் வந்த லாபத்தை, மற்றப் பொருள்களின் விலை ஏற்றம் அக்கிரமமாகப் பறித்துக்கொண்டு போய்விட்டது. ஆகையால், பாழும் விலையேற்றமே இந்தத் தொல்லைகளுக்கெல்லாம் மூலகாரணம் என்பது தெளிவாகிறது.

விலைவாசி ஏறியது ஏன்? எல்லாப் பொருள்களுக்குமே நியாயமான விலை என்பது ஒன்றுண்டு. இருக்கும் சரக்கும், அந்தச் சரக்குக்கு ஏற்படும் தேவையும் சமமாக இருக்கும் வரையில் ஒரு பொருளின் விலை நிரந்தரமாக இருக்கும். தேவை குறைந்தால் சரக்கின் விலை மலியும். தேவை அதிகரித்தால் சரக்குக்குக் கிராக்கி அதிகமாகிறது. இதனால் விலை ஏறும். இது பொதுவிதி. ஒரு மார்க்கெட்டுக்குப் பத்துக் கூடை கத்தரிக்காய்தான் எப்பொழுதும் வருவது வழக்கமென்று வைத்துக் கொள்ளுவோம். அதே பத்துக் கூடை தினசரி நிரந்தரமாக வந்து கொண்டிருக்கும் வரையில் கத்தரிக்காயின்விலையும் நிரந்தரமாகஇருககும்.காய்ப்பு அதிகரித்ததினாலோ, வேறு எந்த காரணத்தினாலோ 20 கூடை கத்தரிக்காய் வந்து விடுமானால் நிலைமை என்ன? தேவையைவிட சரக்கு அதிகரித்து விடுகிறது. இதனால் கத்தரிக்காய் விலை மலிகிறது. மற்றொரு நாளைக்கு ஐந்து கூடை மாத்திரமே வருகிறதென்றால், தேவைக்குப் போதுமானது இல்லாததால் விலை ஏறுவதையும் பார்க்கிறோம். கல்யாண தேதி நாட்களில் பூ, காய்கறி, இலை ஆகியவற்றின் விலை ஏறி விடுகிறதென்பது எல்லாருக்கும் அனுபவம்.

ஆனால் இவ்விதம் விலை ஏறுவதில் முக்கியமாக கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்றிருக்கிறது. முதலாவதாக, இந்த சாதாரண விலை யேற்றம் நெடுநாள் நீடிப்பதில்லை. மறு தினம் இல்லாவிட்டாலும் சில நாட்களில் விலை குறைந்து விடும். இதனால் பொதுவாக யாருக்கும் பெரிய கஷ்டம் எதுவும் ஏற்படாது. விலை ஏற்றம் சாஸ்வதமானதாக ஆகாததோடு, அளவுக்கும் மிஞ்சி ஏறிவிடாதிருப்பதுமே கஷ்டம் கடினம் ஆகாததற்கு காரணம். மேலும் உள்ளூரில் ஏதோ ஒரு சமயத்தில் ஏற்பட்ட தேவைமிகுதியானதால் அதிகரித்த விலையே அது.

சென்னை நகரத்தில் விற்பதற்கென்று சுற்றுப்புற கிராமங்களில் ஓர் அளவுக்கு மாத்திரமே கறி காய் பயிரிடு கிறார்கள். இத்தாலியப் போர் முனையிலே எதிரியுடன் யுத்தம் செய்கிறவர்களுக்குத் தீரங்கொடுக்கக் கூடியது சென்னைக் காய்கறிதான் என்று முடிவு செய்து விடுகிறார் கள் என வைத்துக்கொள்வோம். சென்னை வாசிகளின் தேவையைவிட யுத்தத்தின் தேவையே முக்கியமல்லவா? திடீரென்று கறிகாய் கப்பல் ஏறுகிறது. இந்த அவசரத் தேவை வருமென்று எதிர்பார்த்துச் சென்னைக்கு அருகில் அதிகக் கறிகாயை யாரும் பயிரிட்டு வைக்கவில்லை. ஆகை யால் பாதிக் கறிகாய் சதா கப்பலுக்குப் போய்விட்டால், இந்தக் கறிகாயை எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் சென்னை வாசிகளின் தேவைகளுக்கு மிஞ்சுவது மீதமிருக் கும் பாதியே. இதனாலும் விலை ஏறும். ஆனால் வெளித் தேவையால் வந்த கிராக்கி இதுவாகையால் விலை ஏற்றம் அதிகமாகவும் இருக்கும். ராணுவ அவசியம் இருக்கும் போது விலையைப் பற்றியா லட்சியம்? அந்த அதிக விலை கொடுத்தே சென்னை வாசிகளும் வாங்கித் தீர நேரும். வெளித் தேவையால் அபரிமிதமாக விலை ஏறிவிடும் என்ப தற்கு இது ஓர் உதாரணம்.

விலைவாசி ஏறியதற்கு இதுவரையில் இரு காரணங் களைப் பார்த்தோம். இருக்கும் சரக்குக்கு அதிகமாகத் தேவை மிஞ்சிவிடுவதும், தேவைக்கு வேண்டிய சரக்கு கிடைக்காமல் போவதும் முதல காரணம். உள்ளூர்த்

தேவைக்கே போதுமானதாக இருப்பவை வெளியிலும் போய்விடுவது மற்றொரு காரணம். திரும்பவும் கந்தப் பிள்ளையைக் கொஞ்சம் கவனிப்போம். நெல் இருந்தாலும், அவருக்கு மற்றும் அநேக பொருள்கள் தேவை. தேவைப் படும் அந்தப் பொருள்கள் சரியான விலைக்கு கிடைக்காத தாலேயே அவர் திண்டாடுகிறார். ஆனால் அவர் தேவை அதிகரித்தது என்பது இதற்குக் காரணமா? கலப்பைக்கு ஒரு கொழுவு வீதம் அடித்துக் கொண்டிருந்த கந்தப் பிள்ளை, இப்பொழுது கலப்பைக்கு நான்கு கொழுவு அடிக்க முயற்சிக்க வில்லை. ஒரு மண் வெட்டி பிடித்து வயலைக் கொத்திய அவர் பண்ணையாள், இப்பொழுது கைக்கு ஒரு மண்வெட்டி பிடித்து வேலை செய்ய வில்லை. அப்பொழுது நான்கு முழ வேஷ்டி கட்டியவர் இப்பொழுது பதினாறு முழம் கட்டவும் காணோம். அன்றும் இன்றும் அவர் தேவை ஒரே மாதிரிதான் இருக்கிறது. ஆகையால் அவர் தேவை அதிகரித்து அதனால் விலை ஏறவில்லை. அப்படி யானால் விலை ஏற்றம், மற்றொரு காரணமான புதிதாக வந்த வெளித்தேவையாகவே இருக்க முடியும்.

யுத்தம் வந்தது. பொதுவாக ஆளுக்கும் பொருளுக் கும் தேவைகள் அதிகமாயின. இந்தியா விவசாய நாடு. இத்தேசத்தின் விவசாயப் பொருள்கள், இந்தியாவில் அதி கரித்த ராணுவத்திற்கே யன்றி வெளியிலும் அவசிய மாயின. அவற்றை இங்கிருந்து ஏராளமாக வாங்கி வெளியே யனுப்பினார்கள். பொதுவாக விவசாயப் பொருள் களின் விலை ஏறியதற்கு முக்கிய காரணம் இது. நெல் விலை ஏறிவிட்டதைக் கொண்டு தமக்கு அதிர்ஷ்டமே வந்து விட்டதென்று கந்தப்பிள்ளை குதூகலப்பட்டதும் இதனால் தான். இரும்பை ஏற்றுமதி செய்தார்கள்; ஜவுளியை வாங் கிக்கொண்டு போயினர். அவை கந்தப்பிள்ளைக்கோ, மற் றும் இந்தியாவிலிருக்கும் கோடானுகோடி மக்களுக்கோ, அத்தியாவசியமான பொருள்களாயிற்றே என்பதைப்பற்றி ஒருவருக்கும் கவலை இல்லை. நேச தேசத்தினரின் தேவை எது என்பதுதான் முக்கியம்! இதைப் பூர்த்தி செய்வதற் கான பொருள்களெல்லாம் கப்பல் ஏறின. வெள்ளைக்காரத்

துருப்புகள் தின்பதற்கு மாட்டு மாமிசம் தேவையானதால் மாடுகளையும் இங்கு வாங்கினர்கள். இந்தக் காரணங்களாலேயே உழவுக்குப் போதிய மாடு கிடைக்காமலும், கட்டத் துணி போதாமலும், கலப்பை, மண்வெட்டி சுலபமாகக் கிடைக்காமலும் கந்தப்பிள்ளை கஷ்டப்படுகிருர்.

யுத்தத்தின் தேவை முக்கியம்; அதன் தேவையைப் பூர்த்தி செய்யவேண்டியதும் வெற்றிக்கு அவசியம். இதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. வெற்றி ஒன்றே முக்கியம் என்பதற்காக, ஜனங்கள் அனுவசியமானவர்கள் ஆகிவிட முடியாது. ஜனங்களும் பிழைத்திருக்கவேண்டும். இவர்களுடைய அத்தியாவசியத் தேவைக்குச் சங்கடம் இல்லாதிருந்தால் தான் யுத்தத்தில் வெற்றிபெறுவதற்கான பொருள்களையும், பிறவற்றையும் அவர்கள் உற்பத்தி செய்யமுடியும். எதிரியுடன் நடத்தும் போரில் பொதுஜன உற்சாகமும், அப்பொழுதே இருக்கும். ஆகையால் நேச நாட்டினரின் யுத்தத் தேவையைப் பூர்த்தி செய்து, யுத்தகால அவசியமெனச் சொல்லி பொதுஜனத் தலைவர்களைச் சிறையிலடைத்து, சிப்பாய்களை கவாத் பழக்கிவிடுவதோடு மாத்திரம் ஒரு சர்க்காரின் பொறுப்பு தீர்ந்துவிடாது. ராணுவத் தேவைகளினுல் பொதுஜனங்களின் அவசியமான தேவைகளுக்கு ஆபத்து ஏற்பட்டுவிடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டியதும் சர்க்கார் கடமை. ஆனுல் இந்திய சர்க்காரோ, இந்த கடமையை மறந்துவிட்டது. இந்தியாவின் தேவைகளை கவனிக்காமல் நேசதேச வெளித்தேவைகளை மாத்திரம் தங்கு தடையின்றிப் பூர்த்தி செய்யும பேரத்தில் தீவிரமாகச் சர்க்கார் ஈடுபட்டது. கந்தப்பிள்ளையின் கஷ்டத்திற்கேயன்றி, இத்தேசத்தில் பலகோடி மக்கள் இன்று பரிதவிப்பதற்கும் சர்க்காரின் இந்தப் பேரமே மூலகாரணம்.

சர்க்கார் செய்யும் இந்தப் பேரம் என்ன? இதைச் சரியாக தெரிந்துகொள்ளுவதற்கு ஓர் உதாரணம் அவசியம். மலாய்நாடு இன்று எதிரியிடம் பிடிபட்டிருக்கிறது. அது பிடிபடவில்லை என்று கொஞ்ச நேரத்திற்கு எண்ணிக் கொள்ளுவோம். பினுங்கு டிரேடிங் கம்பெனிக்கும் சென்னை ஏக்ஸ்போர்ட் கம்பெனிக்கும் நீண்ட கால வியாபாரம்.

இங்கிருந்து அரிசி, பருப்பு முதலிய அநேக பொருள்களைச் சென்னைக் கம்பெனி ஏற்றுமதி செய்யும். தனக்கு வந்த சரக்குக்குப் பதிலாகப் பினங்கு டிரேடிங் கம்பெனி, பாக்கு, ரப்பர் போன்ற சரக்குகளை அங்கு வாங்கி சென்னை எக்ஸ்போர்ட் கம்பெனிக்கு அனுப்பும். இரு கம்பெனிகளுக்கும் இந்த விதத்தில் கணக்கு நேராகும். திடீரென்று பினங்கு கம்பெனிக்குக் கஷ்டம் வந்தது. சென்னையிலிருந்து வர வேண்டிய சரக்குகளின் தேவை அந்தக் கம்பெனிக்கு அதிகமாயிற்று. ஆனால் வந்த சரக்குக்குப் பதிலாகத் திருப்பிச் சரக்குகளை அனுப்பப் பினங்கு கம்பெனிக்கு வசதியில்லை. அதாவது, தான் ஏற்றுமதி செய்யமுடியாமல் போனதால் சென்னையில் வேண்டிய பொருள்களை வாங்கப் பினங்கு கம்பெனிக்கு வசதி இல்லாது போயிற்று. ஆனால் சென்னை எக்ஸ்போர்ட் கம்பெனி, இந்த வசதியை பினங்கு கம்பெனிக்கு செய்து கொடுக்க சம்மதித்தது.

அதன்படி சென்னையிலிருந்து மாத்திரம் பினங்கு கம்பெனிக்குச் சரக்குகள் போய்க்கொண்டிருந்தன. நியாயமாகப் பார்த்தால் இந்தப் பேரம் ஒழுங்காக நடப்பதற்கு, போன சரக்குகளுக்கு பதிலாகப் பினங்கிலிருந்தும் சரக்குகள் வந்துகொண்டிருக்கவேண்டும். சரக்கு வரவில்லையானால் பினங்கு கம்பெனியிடமிருந்து இந்தச் சரக்குகளை வாங்குவதற்கு பணமாவது வரவேண்டும். ஆனால் சென்னைக் கம்பெனிக்குப் பினங்கு கம்பெனியிடமிருந்து இந்த இரண்டும் வரவில்லை. இந்த இரண்டும் இல்லாமலேயே பேரத்தை தொடர்ந்து நடத்திக் கொண்டிருக்கவேண்டிய வசதியையே சென்னைக் கம்பெனி செய்து கொடுத்தது. சென்னை டிரேடிங் கம்பெனி, பினங்கு கம்பெனிக்குத் தேவையான பொருள்களையெல்லாம் வாங்கி அனுப்பிக்கொண்டே இருந்தது. சென்னைக்கம்பெனி, இதற்கென்று வாங்கிய பொருள்களைப் பணம் கொடுத்து, ரூபாய்க்கு வாங்கியது. பினங்கில் வழங்குவது வெள்ளி (டாலர்) என்ற நாணயம். ஆகையால் தனக்கு வந்த சரக்குகளின் மதிப்பை, வெள்ளியாக பினங்கு கம்பெனி தன் கணக்கில் வரவு வைத்துக்கொண்டது. சென்னை கம்பெனி ரூ. 15,000-க்கு சரக்குகளை அனுப்பினால், நாணய

மாற்று விகிதப்படி, 100 வெள்ளிக்கு ரூ. 150 என்ற கணக்குப் பிரகாரம், பினங்கு கம்பெனியின் கணக்கில் சென்னை டிரேடிங் கம்பெனி பேரில், "10,000 வெள்ளி சரக்கு வரத்தின் மூலம் வரவு" என்று ஏறிற்று. ஆகவே சென்னை கம்பெனிக்கு வரவேண்டிய தொகை பினங்கு கம்பெனியின் கணக்கில் இருப்பாக இருக்கிறது.

இந்தப் பேர விவரம் ஓர் உதாரணம். ஆனால் இதே பேர முறையைத்தான் இந்திய சர்க்கார் இப்பொழுது வாஸ்தவத்தில் கையாண்டு வருகிறது. சென்னையில் சரக்குகளை வாங்கப் பினங்கு கம்பெனிக்கு எந்த வசதி அவசியமாயிற்றோ அந்த வசதியே யுத்தத்தின் காரணமாக பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்தியாவில் அவசியமாயிற்று. பணத்தையோ அல்லது சரக்குக்குப் பதிலாக சரக்கையோ வாங்கிக் கொள்ளாமல் சென்னைக் கம்பெனி, பினங்கு கம்பெனிக்கு எப்படி சரக்குகளை அனுப்பி வந்ததோ அதே போலவே, இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அனுப்பிவருகிறது. பினங்கில் வழங்குவது வெள்ளி என்ற நாணயமாகையால், பினங்கு கம்பெனியில் சென்னைக் கம்பெனியின் பேரில் வெள்ளி இருப்பு இருக்கிறது. இங்கிலாந்தின் நாணயத்திற்கோ ஸ்டர்லிங் (பவுன்) என்று பெயர். ஆகையால் இந்திய சர்க்கார் வாங்கியனுப்பிய சரக்குகளுக்கு வரவேண்டிய தொகை பிரிட்டிஷ் சர்க்கார் கணக்கில் ஸ்டர்லிங் இருப்பாக வைக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவுக்கு இங்கிலாந்தில் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் இருப்பு என்பது இதுதான்.

1944 மார்ச் மாசக் கடைசியில் இந்தியாவின் ஸ்டர்லிங் இருப்பு ரூ. 950 கோடிக்கு இருக்கும் என்று இந்திய சர்க்காரின் நிதி மெம்பர், வரவு செலவுத் திட்டப் பிரசங்கத்தில் சொன்னார். இவ்வளவு பெருந்தொகையும் இந்தியாவிலிருந்து பிரிட்டனுக்குச் சரக்குகளை அனுப்பியதால் மாத்திரம் சேர்ந்ததல்ல. இந்திய சர்க்கார், அமெரிக்காவுக்குத் தேவையான சரக்குகளையும் வாங்கி அனுப்பினார்கள். அமெரிக்காவையும் அந்தச் சரக்குகளுக்குப் பதிலாகப் பணத்தையோ பண்டங்களையோ தரும்படி சர்க்கார்செய்யவில்லை.

ஆகையால் இங்கிருந்து அமெரிக்காவுக்குப் போன பண்டங் களுக்குப் பதிலாக அங்கே அமெரிக்க டாலர் இருப்பாவது இந்தியாவுக்கு இருக்கவேண்டும். ஆனால் அதுவும் கிடை யாது என்பதே இதிலிருக்கும் புதுமை. பிரிட்டிஷ் சர்க்கார் இந்த டாலர் இருப்பைத் தன் சௌகரியத்துக்கு வைத்துக் கொள்ளுகிறது. அதற்குப் பதிலாகவும் ஸ்டார்லிங்கையே இந்தியாவுக்குத் தருகிறது. இவ்விதம் பிரிட்டனில் இந்தியா வுக்கு இருக்கும் ஸ்டார்லிங் இருப்பில், அமெரிக்காவுக்கு விற்ற இந்தியச் சரக்குகளின் விலையும் அடங்கியிருக்கிறது.

பணமாகக் கூடியவை பண்டங்கள் மாத்திரமல்ல. உழைப்பும் சேவையும் பணமாகும். ஒருவன் மற்றொரு வனுக்காக உழைக்கிறான். இந்த உழைப்புக்குப் பதிலாக பணத்தையே பெறுகிறான். இந்திய ராணுவத்தின் சேவை யைப் பிரிட்டிஷ் சர்க்கார் இந்த யுத்தத்தில தன்னுடைய காரியங்களுக்காக உபயோகித்துக் கொள்ளுகிறது. இந்தி யாவின் எல்லைக்கு வெளியில் நடக்கும் யுத்தத்தில் ஈடுபட் டிருக்கும் இந்திய ராணுவச்செலவையெல்லாம் பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்றுக்கொள்ளுகிறது என்றுகூட இந்திய சர்க்காரின் நிதி மெம்பர் சமீபத்தில் கூறினார். இதில் பிரிட்டிஷ் சர்க்காரும் இந்திய சர்க்காரும் யோக்கியமாக நடந்து கொள்ளுகிறார்கள் என்றே வைத்துக்கொள்ளு வோம. ஆனால் இந்திய ராணுவத்திற்கு ஏற்படும் இந்தச் செலவை இப்பொழுது செய்வது இந்திய சர்க்கார்தான். பிரிட்டிஷ் சர்க்கார் ஏய்க்கவில்லை. இதற்காக பிரிட்டிஷ் சர்க்கார் தரவேண்டியிருக்கும் தொகையையும் ஸ்டார்லிங் இருப்பாகச் சேர்த்து கணக்கு வைக்கிறது.

இது இல்லாமல் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இன்னும ஒரு வகையிலும் இந்திய சர்க்கார் பணவசதி செய்து கொடுக்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகள் இருக்கின்றன. இந்தப் படையினர் இங்கே செலவு செய்வதற்கு ரூபாய் வேண்டும். அமெரிக்காவி லிருந்து டாலர் நோட்டுகளும், பிரிட்டனிலிருந்து ஸ்டார்லிங் நோட்டுகளும் இங்கே வந்தாலும் அவை இங்கே செலா வணிக்குப் பிரயோசனமில்லை. ஆகையால் பிரிட்டிஷ்,

அமெரிக்கப் படையினருக்கு இந்தியாவில் செலவழிப்பதற்கு வேண்டிய பணவசதியையும் இந்திய சர்க்கார் செய்து கொடுக்கிறது. எப்படி? இதற்காகப் பிரிட்டனும் அமெரிக்காவும் தங்கத்தையோ பண்டங்களையோ கொடுக்கவில்லை. திரும்பவும் பழைய கதையே. இங்கிலாந்தில் இந்தியாவுக்கு வரவேண்டிய தொகை என்றிருக்கும் ஸ்டர்லிங் இருப்பிலேயே இதுவும் சேர்கிறது.

இதோடு, ஜப்பானுடன் போருக்குப் போவதற்கு இந்தியாவை முக்கியமான தளம் ஆக்கியும் இருக்கிறார்கள். நல்ல ராணுவ தளமாயிருப்பதற்கான வசதிகளையும் விமான நிலையம் போன்றவைகளையும் அமைப்பதற்காக அநேக வேலைகள் இங்கு நடக்கின்றன. வேலை என்றால் அதற்கும் பணம் அவசியம். டாலர் நோட்டுக்களும் ஸ்டர்லிங் நோட்டுக்களும் இதற்கும் பிரயோஜனமில்லை. ஆகவே இந்தச் செலவுகளுக்கு வேண்டிய பண வசதியையும் இந்திய சர்க்கார் செய்து கொடுக்கிறார்கள். இந்தத் தொகையும் ஸ்டர்லிங்காக மாறி இந்தியாவுக்கிருக்கும் ஸ்டர்லிங் இருப்பில் சேர்கிறது. இவ்வகைகளிலெல்லாம் சேர்ந்ததுதான் பிரிட்டனில் மார்ச்சு மாத முடிவுடன் இந்தியாவுக்கு இருப்பதாகக் கூறப்படும் 950 கோடி ஸ்டர்லிங் நிதி.

பினாங்கு டிரேடிங் கம்பெனிக்குச் சென்னை எக்ஸ்போர்ட் கம்பெனி செய்து கொடுத்த வசதியின் உதாரணத்தை முதலில் கவனித்தோம். இந்த வசதியைச் சென்னைக் கம்பெனி செய்ததென்றால் அதைச்செய்வதற்கு வேண்டிய வசதி சென்னைக் கம்பெனிக்கு இருந்திருக்கவேண்டும். அதாவது அனுப்பும் சரக்குகளுக்குப் பதிலாக, சரக்குகளை வாங்கிக் கொள்ளாமல் பேரத்தைத் தொடர்ந்து நடத்திக்கொண்டு போவதற்குப் போதுமான பணம் சென்னைக் கம்பெனிக்கு இருக்கவேண்டும். அதேபோல, பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் பதில் சரக்கை வாங்கிக்கொள்ளாமல் இந்திய சர்க்கார் சரக்குகளை அனுப்பிவருகிறதென்றால் இதற்குப் போதுமான பணம் இந்திய சர்க்காரிடமும் இருக்கவேண்டும். ஏழை நாடு என்று பெயர் எடுத்தது இந்தியா. அவசியமான நல்ல காரியங்களுக்கே பணமில்லை என்ற பஞ்சப்

பாட்டை சொல்லிக்கொண்டிருப்பதுதான் இந்திய சர்க்காரின் பிறவிக்குணம் என்பதும் உலகமறிந்த சங்கதி. அப்படியானால் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்தியப் பண்டங்களை வாங்கவும் பிறவற்றுக்கும் பணவசதி செய்துகொடுக்க இந்திய சர்க்காரிடம் பணம் ஏது? பினுங்கு கம்பெனிக்குச் சரக்குகளை அனுப்ப சென்னைக் கம்பெனியிடம் பணமில்லையானால் அதற்கிருக்கும் வழி கடன்வாங்குவது ஒன்றே. ஆனால் சர்க்காருக்கோ வேறு வழிகளும் இருக்கின்றன. பணத்தை அச்சடிப்பதே சர்க்கார் ஆகையால் இதற்குவேண்டிய பணத்தைச் சர்க்காரே அச்சிட்டுக்கொள்ளலாம். இதைத்தான் இந்திய சர்க்கார் செய்திருக்கிறது. அகாரணமாக, நோட்டுக்களை போட்டு சர்க்கார் விநியோகித்துவிடவில்லை. இங்கிலாந்தில சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதியை இருப்பாக வைத்துக்கொண்டு அதற்குப் பதிலாக நோட்டுப் போட்டிருக்கிறார்கள். 1944 மார்ச் 31-ஆம் தேதியுடன் இந்த நோட்டு வெளியீடு ரூ. 900-கோடிக்கு வரும் என்றும் இந்திய நிதி மெம்பர் சொல்லுகிறார்.

இந்திய சர்க்கார் செய்துவரும் பேரம் இதுதான். இதன் விபரீத விளைவுகளைப் பார்க்கும் முன்பு இரண்டு முக்கியமான விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். பினுங்கு டிரேடிங் கம்பெனி, தான் தருவித்துக் கொள்ளும் சரக்குகளுக்கு பதிலாக வழக்கம்போல் பாக்கு அனுப்பியிருக்குமானால் சென்னை மார்க்கெட்டில் பாக்கு பஞ்சம் இல்லாதிருக்கும். அதே மாதிரி, பிரிட்டனும் அமெரிக்காவும் தாங்கள் வாங்கிக்கொள்ளும் பண்டங்களுக்குப் பதிலாக இந்தியாவுக்கு வழக்கம்போல் தங்கள் சரக்குகளை அனுப்பியிருந்தால் இப்பொழுது ஏற்பட்டிருப்பதுபோல் அநேக சாமான்களுக்குப் பஞ்சம் உண்டாகியிருக்காது. விலைவாசி ஏறுவதற்கு முக்கிய காரணங்களில் சரக்குப் பஞ்சமும் ஒன்று என்பதை முன்னமேயே பார்த்தோம். பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இந்திய சர்க்கார் இங்கிருந்து சரக்குகளை அனுப்புகிறது என்பதையும் இப்பொழுது கவனித்தோம். போகும் சரக்குக்குப் பதிலாக வழக்கம்போல் சரக்குகளோ வருவதில்லை. ஆகையால் இருந்த சரக்குகள்

போய், வரவேண்டியனவும் வராமையால், சரக்குப்பஞ்சம் இங்கு அதிகமாகிறது. ஆனால் வெளியே அனுப்பிய சரக்குகளை, சென்னைக் கம்பெனியைப்போல, இந்திய சர்க்கார் கடனுக்கு வாங்கி அனுப்பவில்லை. அச்சடித்த நோட்டுகளைக் கொடுத்து, அதாவது பணத்தைத் தாராளமாகக் கொடுத்து வாங்கியே அனுப்பினார்கள். எனவே இந்தப் பேரத்தினால் சர்க்கார் சரக்குப் பஞ்சத்தை இத்தேசத்தில் உண்டாக்கினாலும் பணப் பஞ்சத்தை உண்டாக்கவில்லை. வெளிநாட்டுச் சர்க்கார்களுக்கு இத்தேசத்தில் ஆகவேண்டிய செலவுக்கும் பண வசதியைக்கூட இந்திய சர்க்கார் செய்து கொடுத்துப் பணச்செலாவணியின் பெருக்கத்தை அதிகரித்திருக்கிறார்கள். இதையெல்லாம் சர்க்கார் இனாமாகவோ அல்லது தானமாகவோ பிரிட்டிஷ் சர்க்காருக்குச் செய்து விடவில்லை என்பது உண்மை. இங்கிலாந்தில் ஸ்டர்லிங் இருப்பாக வைத்து விட்டே செய்திருக்கின்றனர். ஆகையால் அந்த ஸ்டர்லிங் இருப்பினால் இந்தியாவில் ஏற்பட்டிருக்கும் முக்கிய விளைவுகள் இரண்டு. சரக்குப்பஞ்சமும், அதே சமயத்தில் ஏற்பட்ட பணப் பெருக்கமுமே அந்த இரு விளைவுகள். ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டிய முதல் விஷயம் இதுவே.

பினாங்கு கம்பெனி, தனக்கு வந்த சரக்குகளுக்குப் பதிலாக எதையும் அனுப்பாமல் இத்தனை வெள்ளி வரவு என்று மாத்திரம் கணக்கில் வைத்துக்கொண்டது. சென்னைக் கம்பெனியும், பினாங்கு கம்பெனியிலிருந்து தனக்கு இவ்வளவு வரவேண்டுமென்று கணக்கு வைத்திருக்கிறது. ஆகையால் பினாங்கு கம்பெனி தரவேண்டியிருக்கிறது. சென்னைக் கம்பெனி, வரவேண்டியதை ஓர் இருப்பு என்று எண்ணிக்கொண்டிருக்கலாம். எனினும் என்றைக்கிருந்தாலும் கொடுக்க வேண்டிய தொகையாகையால், கேட்கவும் சென்னைக் கம்பெனிக்கு உரிமையுண்டாகையால், பினாங்கு கம்பெனியைப் பொறுத்த வரையில் இது கடன். இத்தொகை வெள்ளி இருப்பு என்ற பெயரிலிருந்தாலும் இது கடனே என்பது இதிலிருந்து தெளிவாகும். இந்தியாவுக்கு இங்கிலாந்திலிருக்கும் ஸ்டர்லிங் இருப்பும் இப்படிப்பட்டதே.

அதை ஸ்டர்லிங் இருப்பு என்றோ அல்லது ஸ்டர்லிங் நிதி என்றோ சொன்னாலும், இது பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவுக்குத் தரவேண்டிய கடனே.

ஆனால் சாதாரணக் கடனுக்கும் இந்நிதிக்கும் வித்தியாசம் உண்டு. அந்த வித்தியாசமே ஞாபகத்தில் வைக்க வேண்டிய இரண்டாவது முக்கியமான விஷயம். கடனுக்கு வட்டியுண்டு. இந்த நிதிக்கு வட்டி இல்லை. கடன் என்றால், வசூலுக்குத் தவணை இருக்கும். இந்த இருப்புக்கு அதுவும் கிடையாது. இந்த இருப்பில் மற்றொரு சௌகரியமும் உண்டு. கடன் படுவதென்பது கவுரவக் குறைவானது. அதிலும், சூரியனே அஸ்தமித்து அறியாத சாம்ராஜ்யத்தைப் படைத்திருக்கும் பிரிட்டன், தன்னிடம் அடிமைப்பட்டுக் கிடக்கும் இந்தியாவினிடம் கடன் வாங்கியிருக்கிறதென்றால் அது பிரிட்டிஷ் கவுரவத்திற்கு ஒத்துக்கொள்ளுமா? ஆகவே பிரிட்டனில் இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, பிரிட்டன் தரவேண்டியிருக்கும் கடன் அல்லாத ஒரு வகைக் கடன். வட்டி சேர்ந்துவிடுமே என்ற சஞ்சலத்திற்கும் இதில் இடம் கிடையாது. கடன்படுபவன் எல்லை எதுவுமின்றி கடன் வாங்கத் தயாராக இருந்தாலும், கொடுப்பவன் எல்லை ஒன்று வேண்டுமென எண்ணுவான். இதேபோல, கடனென்றால் மற்றும் பல பல சங்கடங்களும் இருக்கின்றன. அத்தகைய தொந்தரவுகள் எவையுமே இல்லாமல் பெருகிக்கொண்டே போகக்கூடியது ஸ்டர்லிங் இருப்பு. தனது தேவைக்கு வேண்டியது போக மிஞ்சியதையே கடனாகக் கொடுக்க எவனும் சம்மதிப்பான். ஆனால் இந்தியரின் அவசியத் தேவைக்கானவைகளையும் பிறருக்குக் கொடுத்து, இந்தியரின் சம்மதத்தையும் பொருட்படுத்தாமல் ரூ. 950 கோடிக்கு வளர்ந்திருப்பதே இந்தக் கடனல்லாத கடன். ஸ்டர்லிங் இருப்பைப்பற்றிய மற்ற முக்கியாம்சங்கள் இவை.

## தாராளத்தின் யோக்யதை

பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் விற்ற பொருள் களும், இவர்களுக்காக இந்தியர் செய்த சேவையும், இவர் களுடைய செலவுக்கு இங்கே சர்க்கார் செய்து கொடுத்த பண வசதியுமே இங்கிலாந்தில் இந்தியாவின் ஸ்டர்லிங் இருப்பாக சேர்ந்திருக்கின்றனவென்பதை கண்டோம். இவ் விஷயத்தில் பிரிட்டிஷ் சர்க்கார், இந்தியாவினிடம் ரொம் பத் தாராளமாக நடந்து கொண்டிருக்கிறது என்கிறார்கள் சிலர். பிரிட்டன் கஷ்டத்தையும் நஷ்டத்தையும் அடைந்து வரும் சமயத்தில் இந்தியா பெரும் நிதியைத் திரட்டி வைத் திருக்கிறது என்றும் சொல்லுகிறார்கள். இந்திய விளை பொருள்களை யெல்லாம் அதிக விலை கொடுத்து, பிரிட்டன் வாங்கிக்கொண்டதனால் இந்தியா பெற்றிருக்கும் கொள்ளை லாபமே இந்த ஸ்டர்லிங் நிதி என்றும் பிரிட்டிஷ் பத்திரி கைகள் பிரசாரம் செய்கின்றன. சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, உண்மையிலேயே இந்தியா அடைந்த கொள்ளை லாபமா? இதுவே இனி ஆராய வேண்டிய விஷயம்.

ஸ்டர்லிங் நிதியைப்பற்றி லண்டன் 'பைனான்ஷியல் டைம்ஸ்' ஒரு கட்டுரையைப் பிரசுரித்திருக்கிறது. "நேர டியான யுத்தத்தினால் பாதிக்கப்படாமலேயே யுத்தத் தின் பொருளாதார பேரத்தில் சரியான லாபத்தை இந்தியா அடைந்திருக்கிறது" என்கிறது இந்த பத்திரிகை. யுத்தத்தினால் லாபமடைந்திருக்கும் சில நாடுகளில் இந்தி யாவும் ஒன்று என்று சொல்லும் இந்தப் பிரிட்டிஷ் பத்திரி கை, "சேர்ந்திருக்கும் ஏராளமான ஸ்டர்லிங் இருப்பு, இந் தியா அனுப்பிய பொருள்களுக்கும் செய்திருக்கும் சேவைக் கும் பதிலாகச் சேர்ந்ததே. என்றாலும் இந்தியப் பாதுகாப் புக்கு நேரடியான ஆபத்தாயிருக்கும் எதிரியிடமிருந்து இந்தியாவைக் காப்பாற்றுவதற்கு ஏற்பட்ட செலவைக் கொண்டே இந்த நிதி சேர முடிந்தது" என்கிறது. இந்தி யாவுக்கு எந்தச் செலவுமே இல்லாமல் பிரிட்டன் அதை எதிரியிடமிருந்து காக்கிறது; ஆனால் அதே சமயத்தில் இந்தியாவோ இதனால் லாபமடித்து ஏராளமான நிதி ஒன் றைத் திரட்டிக்கொண்டிருக்கிறது! விளக்கமாக சொன்

னால் அப்பத்திரிகை செய்யும் பிரசாரத்தின் பொருள் இது தான். ஆனால் இது வாஸ்தவமா ?

இந்த யுத்தத்தினால் பிரிட்டனுக்குக் கஷ்ட நஷ்டங்கள் அதிக முண்டு என்பதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இந்தக் கஷ்ட நஷ்டங்களெல்லாம் இந்தியாவைக் காப் பாற்ற வேண்டுமே என்பதற்காக உண்டானவை அல்ல என்பது மாத்திரம் மறுக்கவே முடியாத உண்மை. இந் தியா, நேரடியாகப் போரில் இறங்கவில்லை. இந்தியாவைப் போரில் இழுத்து வைத்தது பிரிட்டன். ஆனால் இந்தியா நேரடியான போரில் இல்லாமலேயே இருக்கிறதென்று 'பைனான்ஷியல் டைம்ஸ்' சொல்லுவது புளுகு. இதனுடன் இப்போரால் இந்தியா ஏதோ கொள்ளை லாபத்தையும் அடித்து வருகிறதென்பதோ இன்னும் பெரிய புளுகு. இந்தியாவைப் பிரிட்டன் போரில் இழுத்து வைத்தது சரியா, இல்லையா என்பதல்ல இங்கு விவாதிக்க வேண்டிய முக்கிய விஷயம். இப்போரினால் இந்தியாவுக்குக் கஷ்ட நஷ்டமென்பது எதுவும் கிடையாதா ? இந்தியா விஷயத் தில் பிரிட்டன் அவ்வளவு தாராளமாகத்தான் நடந்து கொண்டிருக்கிறதா ? இதுவே இப்பொழுது கேள்வி.

இந்தியா விஷயத்தில் பிரிட்டன் தாராளமாக நடந்து கொண்டிருக்கிறதா என்பதைக் கவனிக்குமுன், நியாய மாகவாவது நடந்துகொள்ள வேண்டும் என்ற யோக்கியப் பொறுப்பு பிரிட்டனுக்கு எந்தக் காலத்திலாவது இருந்தது உண்டா என்பதையாவது பார்ப்போம். பிரிட்டிஷ் சரித்தி ரத்தைப் புரட்டினால், அது நியாயமாக நடந்து கொண்டது உண்டு என்பதற்கு ஆதாரமே காணோம். ஆனால் இந்தியா வின் சரித்திரத்தைப் பார்த்தால், பிரிட்டன் நியாயத்திற்கு விரோதமாகவே நடந்து வந்திருக்கிறது என்பதற்கான ஆதாரங்கள் அநேகம் இருக்கின்றன. ஆதியில் கிழக்கிந்தி யக் கம்பெனி, இந்தியாவைப் பிடித்துக்கொள்ள பல யுத் தங்களை நடத்தியது. இந்த யுத்தங்களுக்காக ஏற்பட்ட செலவையெல்லாம் அந்தக் கம்பெனி ஏற்றுக்கொண்டதா? இல்லை. பின்னால் இந்தியாவைத் தன் சாம்ராஜ்யத்தில் சேர்த்துக்கொண்ட பிரிட்டிஷ் சர்க்காராவது அந்த யுத்தச்

செலவுகளை ஏற்றுக்கொண்டது உண்டா? அதுவும் கிடை யாது. அந்தச் செலவையெல்லாம் இந்தியாவின் பொதுக் கடமைகளே ஆக்கிறார்கள். அதாவது, இந்தியாவை அடி மைப்படுத்த ஆன செலவுகளை இந்தியர் தலையிலேயே பிரிட்டன் சுமத்தியது.

கிழக்கு இந்தியக் கம்பெனியினிடமிருந்து இந்திய ஆட் சியைப் பிரிட்டிஷ் சர்க்கார் வாங்கிக் கொண்டபோது நடந் தது என்ன? அந்தக் கம்பெனியின் பங்குகளுக்கான வட்டி இந்தியாவின் தலையில் சுமத்தப்பட்டது. மேலும் அந்தக் கம்பெனியில் போட்டிருந்த முதலைத் திருப்பித் தரவேண்டி யதும் இந்தியாவின் தலையெழுத்தாயிற்று. 100 பவுன் முதல் என்றால் 200 பவுன் வீதம் திருப்பித் தரவேண்டி யிருந்தது. இந்தியாவின் செலவில், ஏகாதிபத்தியத்துக்காக நாடு பிடிக்கவென்று பெரிய ராணுவம் வைக்கப்பட்டிருந் தது. அக்காலத்தில் பர்மாமீது போருக்குப்போய், பிரிட்ட னுக்காகப் பர்மாவைப் பிடித்ததும் இந்திய ராணுவமே. இதேபோல இந்தியாவுக்கு வெளியில் இன்னும் பல யுத் தங்களிலும் பிரிட்டனுடைய ஏகாதிபத்திய நன்மைக்காக இந்திய ராணுவம் போராடியிருக்கிறது. நன்மையைப் பெற்றது பிரிட்டன். ஆனால் இந்த யுத்தங்களின் செலவு முழுதும் இந்தியாவின் தலையில்தான் விழுந்தது என்பது சரித்திர பூர்வமான உண்மை.

சென்ற மகாயுத்த காலத்தில் என்ன நடந்தது என் பதையும் கொஞ்சம் ஞாபகப்படுத்திக் கொள்ளுவோம். நான்கு வருஷகாலம் நடந்த அந்த உலகயுத்தத்தில், வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்ட இந்தியத் துருப்புகளுக்கான சாதாரணச் செலவுகளையெல்லாம் இந்தியாவே ஏற்றுக் கொண்டது. இது அல்லாமல் இந்தியா 1917-ல் ரூ. 150 கோடியும் 1918-ல் ரூ 22 கோடியும் பிரிட்டிஷ் யுத்த நிதிக்குத் தானம் கொடுத்திருக்கிறது. ஆகையால் இந்தியா விஷயத்தில் யோக்கியமாக நடந்துகொள்ளவேண்டும் என்ற நேர்மை பிரிட்டிஷ் சர்க்காருக்கு அன்றும் இருந்த தில்லை. இந்தியாவுக்குக் கஷ்டமோ அல்லது நஷ்டமோ கூடாது என்று சென்ற மகாயுத்த சமயத்திலும் பிரிட்டன்

தாராளம் காட்டியதும் கிடையாது. அன்றில்லாத தாராளம் இன்று பிரிட்டனுக்குப் பிறந்திருக்கிறது என்பதற்கான ஆதாரத்தையும் இப்பொழுது காணோம்.

ஏராளமான செலவில் இந்தியாவில் பெரிய ராணுவம் என்றுமே இருந்து வருகிறது என்றால், இந்தியப் பாதுகாப்பின் தேவை இதற்கு முக்கிய காரணமல்ல. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் பாதுகாப்பே இதன் முக்கிய நோக்கம். இந்த உண்மையை மறைப்பது சிறிது காலம் பிரிட்டிஷ் சர்க்காருக்குச் சாத்தியமாக இருந்திருக்கலாம். இந்தியரிடையே தேசிய உணர்ச்சியும் விழிப்பும் அதிகரித்துவிட்ட பிறகு இதை ஒளிப்பது முடியாது போயிற்று. சாட்பீல்டு கமிஷனின் முடிவுகளும் இதைத் தெளிவாக ஒப்புக்கொண்டன. இந்திய ராணுவத்தில் யந்திர சாதன உபயோகத்தை அதிகரிக்க வேண்டும் என்று கூறிய அந்தக் கமிஷன், இதற்கான செலவில் பெரும் பகுதியைப் பிரிட்டிஷ் சர்க்காரே ஏற்றுக்கொள்ளவேண்டும் என்றும் சொல்லியது. இவ்விதம் அந்தக் கமிஷன் சொன்னது இந்தியாவினிடம் கொண்ட கருணையால் அல்ல. பிரிட்டிஷ் நன்மைக்கே இந்திய ராணுவம் இருக்கிறதென்பதை மறைக்க முடியாததால், அந்த ராணுவத்தை அபிவிருத்தி செய்வதில் பிரிட்டிஷ் சர்க்காரும் செலவு செய்திருக்கிறதென்பதை உலகத்திற்குக் காட்ட வேண்டுமென்பதற்காகவே சாட்பீல்டு கமிஷன் இவ்விதம் சிபார்சு செய்தது.

அதன்படி இந்திய ராணுவத்தில் யந்திர சாதன அபிவிருத்திக்காகப் பிரிட்டிஷ் சர்க்கார் 255 லட்சம் பவுன் கொடுத்தார்கள். மேலும் 85 லட்சம் பவுன் வட்டியில்லாமல் கடனாகவும் கொடுத்தனர். இதை எப்பொழுது கொடுத்தார்கள் என்பதைக் கவனித்தால் இந்தச் செலவுக்குப் பிரிட்டிஷ் சர்க்கார் சம்மதத்தின் நோக்கம் நன்கு விளங்கும். சாட்பீல்டு கமிஷன் சிபார்சுகள் வெளிவந்ததும் பிரிட்டிஷ் சர்க்கார் இச்செலவைச் செய்ய முன்வரவில்லை. ஹிட்லரின் கை ஐரோப்பாவில் அளவுக்கு மிஞ்சி ஓங்கி, சீக்கிரத்தில் யுத்தம் ஆரம்பமாவது நிச்சயம் என்பது தெரிந்து, போருக்கு வேண்டிய ஆயத்தங்களைச் செய்துகொள்ள

பிரிட்டன் பிரயத்தனப்பட்ட சமயத்திலேயே, இந்திய ராணுவத்தைச் சீர்ப்படுத்த, பிரிட்டிஷ் சர்க்கார் பணம் கொடுத்தார்கள். இந்திய ராணுவத்தை அபிவிருத்தி செய்வதாகவே இருந்தாலும், அது தனது நன்மைக்கு எப்பொழுது அவசியமென்று பிரிட்டன் கருதுகிறதோ அப்பொழுது தான் இது செய்யப்படுகிறது என்பதற்கு இதைவிட வேறு உதாரணம் அவசியமில்லை.

பிரிட்டனின் நன்மைக்காக இருப்பதுடன் பிரிட்டன் அவசியத்திற்கு உபயோகப் படுவதே இந்திய ராணுவத்தின் முக்கிய வேலையாக இருந்து வருவதை மேலே கண்டோம். இந்த யுத்தத்தில் கிழக்கில் மலேயா, ஜாவாவிலிருந்து, மேற்கில் வடக்கு ஆப்ரிக்கா, இதாலி வரையில் இந்தியப் படைகள் யுத்தத்தில் ஈடுபடுத்தப்பட்டதையும், இன்றும் கடுமையாக யுத்தஞ்செய்துவருவதையும் பார்க்கிறோம். இந்தியராணுவம் யுத்தத்தில் எடுத்துக்கொண்டிருக்கும் பங்கை இந்தியா மந்திரி அமெரி பாராட்டியிருக்கிறார்; சர்ச்சில் புகழ்ந்திருக்கிறார். ஆப்ரிக்கப் போர் அரங்கத்திலே இந்திய சிப்பாய்களின் வீரமே நேசதேசத்தினரின் மானத்தைக் காத்து, வெற்றியைத் தந்து இப்போரின் போக்கிலேயே பெரிய மாறுதலையும் உண்டாக்கியது என்பதை நேசதேச ராணுவத் தலைவர்களும் ஒப்புகொள்ளுகிறார்கள். "15 லட்சம் பேரைக் கொண்ட படையை இந்தியா திரட்டி யிருக்கிறது. மத்திய கிழக்குப் பகுதிகளில் நடந்த மிகக் கடுமையான யுத்தங்களில் தாங்கள் யாருக்கும் சளைத்தவர்களல்ல என்பதை இந்திய ராணுவத்தினர் காட்டிக் கொண்டிருக்கிறார்கள். மத்திய கிழக்குப் போர் அரங்கங்களுக்கு இந்தியா முக்கிய சப்ளை தளமாக இருந்திருப்பதோடு, சீனாவை மீட்டு, ஜப்பானைத் தரைமட்டமாக்கித் தோற்கடிப்பதற்கு வேண்டிய படைகளையும் சப்ளைகளையும் தருவதற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் இந்தியா செய்து வருகிறது" என்று அமெரி 1943 மார்ச் 2-ஆம்தேதி சொல்லியிருக்கிறார். "ஆப்ரிக்காவிலும், கீழ்க்கோடியிலும், இந்தியாவிலும் இந்திய ராணுவத்தினர் செய்திருக்கும் சிறந்த காரியங்களுக்கு எங்களுடைய பாராட்டுதலையும நன்றியையும் இச்சமயத்தில் தெரிவித்துக்கொள்ளுகிறேன்" என்று சர்ச்சில்,

வைசிராய்க்கு அனுப்பிய ஒரு செய்தியில் குறிப்பிட்டிருக்கிறார். டூனிஸியா யுத்தம் முடிந்ததும், அப்பொழுது வைசிராயாக இருந்தலார்டு லின்லித்கோ, இந்தியப்படைகளின் வீரத்தைப் பாராட்டிவிட்டுச் சொன்னதாவது: "நம ஆப்ரிக்க யுத்தங்களுக்கு இந்தியா ஒரு பெரிய தளமாக இருந்தது. இந்தத் தளத்திலிருந்து முதலில் நமது தற்காப்பைப் பலப்படுத்திக்கொள்ளுவதற்கு வேண்டிய சப்ளைகள் ஏராளமாக அனுப்பப்பட்டன. பிறகு அதிகப் பலத்துடன் எதிரியை நசுக்குவதற்கு வேண்டிய சப்ளைகளையும அனுப்பினேம்."

இப்பொழுது வைசிராயாக இருக்கும் லார்டு வேவலும் இந்தியா இந்த யுத்தத்தில் எடுத்துக்கொண்டிருக்கும் பெரும் பங்கைப் பாராட்டியிருக்கின்றார். அமெரியும் சர்ச்சிலும், வைசிராய்களும் இந்தியாவைப் பாராட்டியிருப்பதைக் கேட்டு இந்தியர் பெருமைப்படவேண்டும் என்பதற்காக இதையெல்லாம் இங்கே பிரஸ்தாபிக்கவில்லை. ஆனல் இந்தியா நேரடியாகப் போரில் ஈடுபடாமலேயே யுத்தத்தின காரணமாக லாபத்தையும் அடைந்துவருகிறதென்று பிரிட்டனில் நடந்துவரும் பிரசாரம் எத்தகைய பித்தலாட்டம் என்பதை விளக்கவே இவற்றைக் குறிப்பிட வேண்டியது அவசியமாயிற்று. பர்மா, இந்திய எல்லை. ஆனாலும் ஜாவாவும், சிங்கப்பூரும், வடக்கு ஆப்ரிக்காவும் இந்திய எல்லைகளென்று யாரும் சாதிக்கமுடியாது. அங்கு நடந்த யுத்தங்களெல்லாம் இந்தியப் பாதுகாப்புக்கும் அல்ல. என்ருலும் இந்திய ராணுவம் அங்கெல்லாம் போராட நேர்ந்திருக்கிறது. அப்போர்க் களங்களிலே எதிரி வீசியது பூச்செண்டுகளும் மன்மத பாணங்களும் அல்ல. கொடிய போர் முறைகளினல் கடுமையான யுத்தங்களில், இந்தியர் பட்டிருக்கும் கஷ்டமும் சிந்தியிருக்கும் ரத்தமுமே அதிகம்.

ஆகையால் இந்தியாவுக்கும் இந்தியருக்கும் கஷ்டமில்லை என்று சொல்லுவது பொய் என்ருல், நஷ்டமில்லை, லாபந்தான் உண்டு என்பதும் முழுப்பொய். யுத்தம் ஆரம்பமானதிலிருந்து வருஷத்துக்கு வருஷம் ஏறிக்கொண்டேபோகும் இந்திய சர்க்காரின் யுத்தச் செலவு ஒன்றே

இதற்குப் போதிய எடுத்துக்காட்டு.1939-ஆம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் யுத்தம் ஆரம்பமாயிற்று. இந்தியாவின் பாதுகாப்புத் தேவைக்குத் அதிகமான ராணுவத்தின் செலவே எப்பொழுதுமே இந்தியாவின் தலைமீது சுமததப் பட்டிருக்கிறது என்பதை முன்னல் குறிப்பிட்டோம். அப்படியிருந்தும் இந்தியாவின் ராணுவச் செலவு 1938-39-ல் ரூ. 46-கோடிதான். ஆனல் இந்தச் செலவு வளர்ந்து கொண்டே போய் இப்பொழுது என்ன நிலைமைக்கு வந்திருக்கிறதென்பதை இனி பார்ப்போம்:—

| வருஷம் | கோடி, லட்சம் |
|---|---|
| 1938 - 39 | 46 - 18 |
| 1939 - 40 | 49 - 54 |
| 1940 - 41 | 73 - 81 |
| 1941 - 42 | 103 - 94 |
| 1942 - 43 | 233 - 89 |
| 1943 - 44 | 262 - 64 |
| 1944 - 45 | 276 - 61 |

1938-39-ஆம் வருஷத்தில் யுத்தமில்லை. அந்த வருஷத்தில் இந்திய சர்க்காரின் ராணுவச் செலவு ரூ 46 கோடியே 18 லட்சம். யுத்தம் ஆரம்பமான அடுத்த வருஷத்திலிருந்து ராணுவச் செலவு விஷம்போல் ஏறிக்கொண்டு வந்திருக்கிறது. இந்த யுத்தம் 1945 மார்ச் 31-ஆந் தேதியுடன் முடிந்து விடுகிறதென்று வைத்துக்கொண்டாலும், இந்த யுத்தவருஷங்களில் இந்தியாயுத்தத்திற்கும்ராணுவத்திற்கும் மொத்தம் ஆயிரம் கோடி ரூபாய் செலவு செய்திருக்கிறது என்ருகிறது. யுத்தம் இல்லாமலிருந்தாலும் இந்திய சர்க்காருக்கு ராணுவச் செலவு என்பது இருந்தே இருக்கும். நியாயமாக வருஷா வருஷம் ஆகக்கூடிய ராணுவச் செலவு ரூ 46 கோடி என்று வைத்துக்கொண்டாலும 1945-மார்ச் முடிய இந்த ராணுவச்செலவு மொத்தம ரூ 276 கோடியே ஆகிறது. ஆனல் அதே காலத்தில் இந்திய சர்க்கார் செலவழித்திருப்பதோ ரூ. 1000 கோடி 42 லட்சம ஆகையால் யுத்தத்தின் காரணமாக இந்திய சர்க்கார் அதிகப்படியாக ரூ. 724 கோடியே 42 லட்சம் செலவு செய்ததாகிறது. யுத்

தத்தினால் இந்தியாவுக்கு ஏற்பட்டிருக்கும் நஷ்டம் இந்த ரூ. 724 கோடி என்பதை விளக்கி வைக்க வேண்டியதில்லை.

ராணுவச் செலவு அதிகரித்ததோடு யுத்தச்செலவு முடிந்துவிடாது. யுத்தத்தின் காரணமாகச் சர்க்காரின் மற்ற சிவில் இலாகாக்களிலெல்லாம் செலவுகள் அதிகரித்தன. விலைவாசிகள் உயர்ந்ததையால் பென்ஷன்திகளுக்கு அதிகப்படி தரவேண்டியதும் அவசியமாயிற்று. இதற்குவேண்டிய பணத்தையும் தேடித் தீரவேண்டிய நிர்ப்பந்தம் சர்க்காருக்கு உண்டாயிற்று. சர்க்காருக்குச் செலவு அதிகரித்துவிட்டதே என்பதற்காக வேண்டிய பணமெல்லாம் ஆகாசத்திலிருந்து விழுந்து விடாது. வரியை உயர்த்துவதும், கடன் வாங்குவதுமே செலவைச் சரிக்கட்ட, சர்க்காருக்குள்ள வழிகள். போட்ட வரிகளை யெல்லாம் கொடுத்துத் தீர வேண்டிய இந்தியர், கற்பக விருக்ஷங்கள் அல்ல. இந்தியர், சாதாரண காலத்திலேயே சர்க்காரின் வரிச்சுமையைத் தாங்க முடியாமல் தத்தளித்துக்கொண்டிருந்தவர்கள. ஒரு வேளைகூட வயிறாரத் தின்று அறியாதவர்கள் இந்தியரில் கோடானுகோடி. மானத்தை மறைக்க முழத்துண்டுக்கும் கதியற்றுக் கலங்குகிறவர்களும கோடிக் கணக்கிலிருக்கின்றனர். இத்தகைய இந்தியர் தலைமீதே இவ்வளவு யுத்தச் செலவுகளும் புது வரிகளாகச் சுமந்திருக்கின்றன. இந்த வருஷத்தில் ரயில்வே கட்டணங்களைக் கூட உயர்த்தச் சர்க்கார் கச்சை கட்டிக்கொண்டு கிளம்பியது உண்டு. 1944-45-ஆம் வருஷ வரவுசெலவுத் திட்டத்தில் வருமானத்தைவிடச் செலவு ரூ. 54 கோடி 71 லட்சம அதிகமாக இருக்கிறது. இதைச் சரிக்கட்ட, அதிக வருமான வரி உள்பட, பல வரிகள் உயர்த்தப் பட்டிருப்பதுடன் புகையிலைக்கும் பாக்குக்குங்கூட அதிக வரி போட்டிருக்கின்றனர். பசியை மறக்க ஏழைகள் போட்டு வரும் பாக்குக்கும புகையிலைக்குமகூட இதனால அவதி யுண்டாகும் நிலைமையும் இப்போது வந்திருக்கிறது.

யுத்தத்தின் காரணமாக, பிரிட்டனிலும் பிறநாடுகளிலும் வரிகள் உயர்ந்திருக்கின்றன என்பது உண்மை. ஆனால் ஏழைகளையும் பாதிக்கும் வரிகள் இந்தியாவில் உயர்ந்ததைப்போல் எந்த நாட்டிலும் இல்லை. இவைகளெல்லாம்

யுத்தத்தினுல் இந்தியாவுக்கு ஏற்பட்ட கஷ்டங்களும் நஷ்டங்களும் அல்லவா? ஆம் என்பதில் அணுவளவும் சந்தேகம் கிடையாது. அப்படியானுல், கஷ்டத்தையும் நஷ்டத்தையும் அடைவது பிரிட்டனே என்றும், இந்தியாவுக்கு இவை ஏதுமே கிடையாது என்றும் பிரசாரம் செய்வது எப்படி சாத்தியமாகிறது? யோக்கியப் பொறுப்பை மறந்துவிடுகிறவனுக்கு எல்லாம் சாத்தியம். இந்தியப் பாதுகாப்புக்கான போரின் செலவைத் தவிர மற்றவைகளை யெல்லாம் பிரிட்டிஷ் சர்க்காரே ஏற்றுக்கொள்ளுகிறது என்று இந்திய சர்க்காரின் நிதி மெம்பர் வருஷம் தவருமல் தமது வரவு செலவுத் திட்டப் பிரசங்கத்தில் சொல்லி வருவதும் அந்தப் பிரசாரம் சாத்தியமாவதற்கு இடங் கொடுக்கிறது. வாஸ்தவத்திலேயே பிரிட்டிஷ் சர்க்கார் தாராளமாகவும் நியாயமாகவும் நடந்து கொள்ளுகிறதா? இந்தியாவின் எல்லேக்கு வெளியில் நடக்கும் செலவுகள் உண்மையில் இந்தியரின் தலையில் விழாமல் இருக்கின்றனவா? இதையும் இனி கவனிப்போம்.

இந்தியாவும் பிரிட்டனும் இந்த யுத்தத்தில் சேர்ந்தே ஈடுபட்டிருக்கின்றன. இந்தியாவைப் பாதுகாக்கும் உரிமை தனக்கே இருக்கிறதென்று சாதிக்கும் சௌகரியமும் பிரிட்டனுக்கு உண்டு. எதிரிகளுடன் போரை நடத்தப் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இந்தியா ஏற்ற தளம். ஆகவே, அமெரிக்கப் படைகளும் பிரிட்டிஷ் படைகளும் இந்தியாவில் இருக்கின்றன. இந்தியப் படைகளை வெளிநாடுகளுக்கும் கொண்டுபோய்த் தனக்காகப் போராடும்படியும் பிரிட்டிஷ் சர்க்கார் செய்கிறது. இந்தியாவுக்கும் எதிரியின் அபாயம் உண்டென்று சொல்லுகிருர்கள். அபாயம் உண்டென்ருல், அதிலிருந்து தன்னைக் காத்துக்கொள்வதற்கும் இந்தியாவில் படைகள் இருக்கவேண்டியதும் முக்கியம். ஆனுல், இந்திய பாதுகாப்புக்கு தேவையான படைப் பலம் எவ்வளவு? இந்தியப் படைகள் பிரிட்டனுக்கும் சேவை செய்வதால் இந்திய ராணுவச்செலவில் பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்றுக்கொள்ளும் பங்கு என்ன? இதை நிர்ணயிப்பது சுலபமல்ல. மேலும் இது ரொம்பச் சிக்கலான

விஷயம். என்றாலும் இந்திய சர்க்காரும் பிரிட்டிஷ் சர்க்காரும் இதன் சம்பந்தமாக ஒரு நிதி ஏற்பாட்டுக்கு வந்திருக்கிறார்கள்.

இந்த 'நிதி ஏற்பாடு' இந்தியாவுக்குச் சாதகமானது; பிரிட்டிஷ் சர்க்கார் தாராளமாக விட்டுக்கொடுத்திருக்கிறது என்பதே பிரிட்டிஷ் பிரசாரம். உண்மையில் இந்த ஏற்பாடு இந்தியாவுக்குச் சாதகமானதாகவே இருக்கிறதா? இதை ஆராயும் முன்பு ஒரு முக்கிய விஷயத்தை நாம ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். சாதகம் யாருக்கானாலும், இந்தியாவில் பிரிட்டிஷ ராணுவத்திற்குக்கூட முதலில் பண வசதி செய்து கொடுப்பது இந்திய சர்க்கார்தான் என்பதே விஷயம். இந்திய சர்க்காருக்கும், பிரிட்டிஷ் சர்க்காருக்கும் இருக்கும் யுத்தச் செலவு நிதி ஏற்பாட்டின் படி இந்தியா ஏற்றுக்கொள்ள வேண்டிய யுத்தச் செலவு பின்வருமாறு:

(1) சமாதான காலத்தில் இந்திய ராணுவத்திற்கு எவ்வளவு செலவாகி வந்ததோ அந்தச் செலவை ஆதாரமாகக்கொண்டு நிர்ணயிக்கப்பட்ட ஒரு தொகை. (2) விலைவாசி ஏற்றத்தை உத்தேசித்து அனுமதிக்கப்படும் அதிகத் தொகை. (3) இந்தியா தன் நன்மைக்கென்று நடத்தும் யுத்தங்களுக்கு ஆகும் செலவு, இந்தியாவின் செலவு என்று கருதப்படும். (4) இந்தியாவின் வெளிநாட்டுப் பாதுகாப்புக்கென்று வெளியில் உள்ள படைகளின் செலவுக்காக மொத்தமாகக் கொடுக்கப்படும் ஒரு கோடி ரூபாய். ஆகவே இந்தியா ஏற்றுக்கொள்ள வேண்டியது இந்தச் செலவுகளை மாத்திரமே என்பது அந்த ஏற்பாடு.

இந்தியாவில் புதிதாகப் படைகளைத் திரட்டிப் பயிற்சியும் அளிக்கப்படுகிறது. அதற்காகும் செலவுகள் சம்பந்தமாகவும் கீழ்க்கண்ட ஏற்பாடுகள் இருக்கின்றன:

இந்தியாவில் திரட்டப்படும் தரைப்படைக்கு அதைத்திரட்டுவது, பயிற்சியளிப்பது, அதற்கு வேண்டிய தளவாடங்களைக் கொடுப்பது ஆகியவற்றிற்கு ஆகும் செலவை இந்தியாவே தரவேண்டும். இப்படைகள் இந்

தியாவிலிருக்கும் வரையில் அவற்றின் பராமரிப்புக்கான செலவு இந்தியாவினுடையது. தன் சொந்தப் பாதுகாப்புக்கு இந்தியா இப்படைகளை உபயோகித்துக்கொள்ளலாம. இந்தப் படைகள் வெளிநாடுகளுக்கு அனுப்பப்படுமானல், இப்படைகளைத் திரட்டுவதற்கும், பயிற்சியளிக்கவும், வேண்டிய தளவாடங்களைக் கொடுக்கவும் ஏற்பட்ட செலவுகளையெல்லாம பிரிட்டனே ஏற்றுக்கொண்டுவிடும். இவ்வித படைப் பெருக்கத்திற்கு, (பிரிட்டன் தவிர மற்ற இடங்களிலிருந்து வரும் மோட்டார்கள், பீரங்கி மோட்டார்கள் தவிர) மற்ற எல்லா இடங்களிலிருந்தும் வரும் தளவாடஙகள், சப்ளைகள் முதலியவைகளை யெல்லாம் பிரிட்டிஷ் சர்க்காரே கொடுக்கும்.

வெளித்தோற்றத்தில் இந்த ஏற்பாடு இந்தியாவுக்குச் சாதகமானதாகவே காணும். கொஞ்சம் ஊன்றிக் கவனித்தால் இதிலுள்ள ஏமாற்றம் நன்கு விளங்கும். இந்தியாவின் பாதுகாப்புக்கு ஆகும் செலவை இந்தியா ஏற்றுக்கொள்ளவேண்டியது நியாயம். தனது நன்மைக்கென்று இந்தியா நடத்தும போரின் செலவுகளைப் பிரிட்டன் தலையில் போட்டுவிடக்கூடாது என்பதும் ரொம்ப சரி. ஆனல் இந்தியாவின் பாதுகாப்பு என்பது என்ன? இந்தியா, தனது நன்மைக்கென்று நடத்தும யுத்தம் எது? இந்தியா ஏற்றுக்கொள்ளும செலவு நியாயமானதா என்பதை நிர்ணயிக்க வேண்டுமானல், முதலில் இந்தக் கேள்விகளுக்கு பதில் அவசியமாகிறது. பாதுகாப்பு என்பது எல்லோருக்கும புரியும் ஒரு வார்த்தை. ஆனல் பாதுகாப்பின் எல்லையும் அளவும் அவ்வளவு சுலபமாக நிர்ணயித்துச் சொல்லிவிடக்கூடிய விஷயங்களல்ல.

முதலில் பாதுகாப்பு எல்லை என்பது என்ன என்பதைப் பார்ப்போம். இந்தியாவின் கிழக்கு எல்லையான பர்மாவில் இன்று எதிரி உட்கார்ந்திருக்கிருன். பர்மாவுக்குள் இவன் நுழையவே முடியாதபடி செய்திருந்தால் இந்தியாவின் தலையாட்டில் இந்த ஆபத்து வந்திருக்காது. ஆகையால் பர்மாவின் கிழக்கு எல்லையே இந்தியாவின் சரியான எல்லை என்றும் சொல்லிவிடலாம். இந்தியாவின் பாதுகாப்பு எல்லை

கிழக்கில் ஜாவாவும், மேற்கில் லிபியாவும் என்று 1941-ல் கூறப்பட்டு வந்ததையும் யாரும் மறந்திருக்கமாட்டார்கள். இவ்வருஷம மார்ச் 7-ஆந்தேதி இந்தியசட்டசபையில் பேசிய நிதி மெம்பர், இந்த எல்லை-சந்தேகத்தைத் தெளிவுபடுத்தியிருக்கிறார். "இந்திய எல்லைக்கு வெளியில் நடக்கும யுத்தச் செலவு, இந்தியாவுக்குப் பாத்தியமில்லை" என்றார். "பர்மாவில் இப்பொழுது இங்கியப்படைகளும் பிரிட்டிஷ் படைகளும் நடத்தும போரின் செலவை பிரிட்டிஷ் சர்க்காரும், அமெரிக்கப் படைகளிருந்தால் அந்தச் செலவை அமெரிக்காவும் ஏற்றுக் கொள்ளுகின்றன" என்றும் சொன்னார்.

எல்லை தெளிவாயிற்று. ஆனால் இந்தியப் பாதுகாப்புக்கு அவசியமான ராணுவ அளவும், அதற்காகும் செலவும் என்ன? இந்தியப் பாதுகாப்புக்கு இப்பொழுது செய்யப்படும் இவ்வளவு செலவும் நியாயமா என்பதே இனித் தெரியவேண்டியது. 1944-45-ஆம் வருஷ இந்திய வரவு செலவுத் திட்டப் பிரசங்கத்தில் நிதி மெம்பர் இதைப்பற்றியும் சொல்லியிருக்கிறார். இந்தியாவின் சொந்தப் பாதுகாப்புக்கு வேண்டிய படைப்பலத்தின் அளவு இவ்வளவுதான் தேவை என்பதை, வேவல் இந்திய தளபதியாக இருக்கும் போதே நிர்ணயித்திருக்கிறாராம். தரைப் படைக்கு மாத்திரமன்றி விமானபபடைக்கும் இந்த அளவு உண்டாம். நிர்ணயித்திருக்கும் இந்த அளவு என்ன? அதை நிதிமந்திரி சொல்லவில்லை. சொன்னால் ராணுவ ரகசியம் எதிரிக்குத் தெரிந்துவிடும் என்றும் சொல்லலாம். ஆனால் இப்படைப் பல அளவு நிர்ணயத்திருப்பதில் இருக்கும் காரணத்தை இந்தியர் யூகித்துக்கொள்வது முடியும.

இந்தியாவின் பாதுகாப்புக்கென்று நிர்ணயித்திருக்கும் ராணுவ பலத்தின் அளவு நிரந்தரமானது அல்ல என்றும் நிதி மெம்பர் சொன்னார். இந்தியாவின் பாதுகாப்புக்கு ஆபத்து அதிகரிபபதற்குக் தகுந்தபடி இந்த ராணுவப் பல அளவும ஏறுமாம். இங்கியாவின் தரைப்படையைப் பொறுத்தவரையில் அது இன்னும் நிர்ணயித்த அளவுக்கு வரவில்லையாம். விமானப்படை மாத்திரம் அந்த அளவுக்கு அதிகமாகியிருககிறதாம். ஆகவே இதற்கென்று

ஆகியிருககும் செலவில் குறிப்பிட்ட அளவுபோக மீதி யுள்ள தொகையைப் பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்புக்கொண் டிருக்கிறது என்றும் நிதி மெம்பர் சொன்ஞர். இந்தியத் தரைப்படை, இந்தியாவின் பாதுகாப்புக்கு இருக்கவேண் டிய அளவை இன்னும் அடையவில்லை யென்ருல், இப் பொழுதிருக்கும தரைப்படையின் செலவு முழுதும் இந்தி யாவின் செலவே என்பது நிச்சயமாகிறது.

இந்தியாவுக்கு இருப்பதாகச் சொல்லப்படும் இரு எதி ரிகள் ஜப்பானும ஜெர்மனியும். ஜெர்மனி படுதோலவிகளை அடைந்துவருகிறது. ஜப்பானின் நிலைமையும் அதுதான்என் கிருர்கள் இவ்விரு எதிரிகளும் இனி தற்காப்பிலிருப்பதைத் தவிர எதிர்த்துப் படையெடுக்கும் நிலைமையில் இல்லை என்று நேசதேசத் தலைவர்கள் எல்லோரும் சொல்லுகிருர் கள். இந்தியாவுக்கு எதிரியின் படையெடுப்பு அபாயம் என்பதே இனி இல்லை என்று இந்திய தளபதி, வைசிராய் முதல், ஜில்லா கலெக்டர்கள் தாசிலதார்கள்வரை எல்லோ ரும் சொல்லிவந்தார்கள். ஆகையால் இந்தியா செய்துவரும் ஏராளமான ராணுவச் செலவு,உண்மையிலே இந்தியாவின் பாதுகாப்பு என்பதற்கு மாத்திரம் செலவிடப்பட்டிருக்கு மாஞல், அந்தச்செலவு இப்பொழுது இருக்கவேண்டிய நிலை மை என்ன படையெடுப்பு அபாயம் இருந்த காலத்திலிருந் ததைவிடப்படையெடுப்பு அபாயமில்லாத இச் சமயத்தில் ராணுவச் செலவு குறைந்திருக்கவேண்டும். ஆனால், குறையவில்லை. போன வருஷ ராணுவச் செலவை விட இந்த வருஷம் செலவு அதிகரித்திருக்கிறது. அப் படியாஞல் ஒன்றே ஒன்றுதான் இதற்குக் காரணமாக இருக்கமுடியும். இந்தியாவுக்குப் படையெடுப்பு அபாயம் இனி இல்லை என்று கூறப்படுவது தவருக இருக்கவெண் டும். அது தவறல்ல என்ருல், இந்தியாவின் சொந்தப் பாதுகாப்புக்காகத்தான் இவ்வளவு செலவும் ஆகிறது என்பதிலாவது ஏதோ மாருட்டம் இருக்கவேண்டும். நிஜம் எதுவானுலும் இருந்து தொலையட்டும். ஒன்று மாத்திரம் யாருமே மறுக்க முடியாத உண்மை. இந்த யுத்தத்தால் இந்தியாவுக்கும நஷ்ட முண்டு என்பதே அந்த உண்மை.

பிரிட்டனுக்கு மாத்திரமல்ல இந்தியாவுக்கு அதிக ராணுவச்செலவு குவிந்திருக்கிறது.

இந்தியாவைவிட அமெரிக்காவும் பிரிட்டனும் ஏராளமாக செலவிடுகின்றன என்பது நிஜம். அதற்காக இந்தியா தலையிலும் அதிக பளு இருப்பது அவசியமல்ல. இரவல்-குத்தகையில் சரக்குகளையும் தளவாடங்களையும் அனுப்புவதென்ற ஏற்பாடு 1943-ஆம் வருஷத்தில் எவ்விதம் நடந்திருக்கிறது என்பதைப்பற்றிப் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட், அமெரிக்க காங்கிரஸுக்கு ஒரு அறிக்கையை மார்ச் 13-ஆந் தேதி அனுப்பினார். அதில் இந்தியாவில் அமெரிக்காவின் நோக்கத்தைப்பற்றி ரூஸ்வெல்ட் சொல்லுவதாவது :

" ஜபபானுக்கு எதிராக நாம் நடத்தும் போரில் இந்தியா முக்கியமான சபளை இடமாக இருக்கிறது. சீனுவுக்கு விமானத்தின் மூலம் சப்ளை செய்யும் பாதை இந்தியாவிலிருந்துதான் போகிறது. மேலும் பர்மாவில் இருக்கும ஜப்பானியர்மீது போரை நடத்த இந்தியா ஒரு ராணுவதளம். இந்தியாவிலிருக்கும புரிட்டிஷ் இந்திய ராணுவத்திற்கும கடற்படைக்கும, பீரங்கிகள், தோட்டா, குண்டுகள் மற்ற தளவாடங்கள் முதலிய வகையில் 5,540 லட்சம டாலருக்கு அனுப்பி இருக்கிறோம். அமெரிக்கா, இரவல் - குத்தகை ஏற்பாட்டின் படி அனுப்பி யிருக்கும எல்லாத் தளவாடங்களின் மூலம் இந்தியா பெரிய ராணுவதளமாகி யிருக்கிறது."

ஜப்பானுடன் போரை நடத்துவதற்கு இந்தியா முக்கிய ராணுவ தளம் ஆக்கப்பட்டிருப்பதை யாரும் ஆட்சேபிக்கவில்லை. ஜப்பானை தோற்கடித்து விடுவது அவசியம் என்றிருக்கும் பிரிட்டனுக்குக்கூட இந்தியா நல்ல தளமாகியிருக்கிறது. இதற்காக பிரிட்டனும் அமெரிக்காவும் இந்தியாவுக்கு நன்றி பாராட்டா விட்டாலும், தளமானதற்காக அனாவசியமாக அதிகச் செலவை ஏழை இந்தியா மீது சுமத்தாமலாவது இருக்கவேண்டுமென இந்தியர் எதிர்பார்ப்பது நியாயமற்றது ஆகாது. எந்தப் பகுதியானாலும் செலவில்லாமல் சும்மா நல்ல தளமாகிவிடாது. சென்ற சில வருஷங்களில் அமெரிக்கா பஸிபிக்கிலும் அட்லாண்டிக்கிலும் பல இடங்களில் ராணுவ, கடற்படை தளவசதி

களைச் செய்திருக்கிறது. இதற்காக ஏராளமான தொகையையும் செலவிட்டிருக்கிறது. ரூஸ்வெல்ட் மேலே சொன்னதைப்போல, ஜப்பானுடன் போரை நடத்த இந்தியா சரியான தளமென்றால், நல்ல தளத்திற்கு வேண்டிய விமான நிலையங்கள் போன்றவை அவசியம். தளம் யாருக்கு அவசியமோ அவற்றை அமைத்துக்கொள்ள வேண்டியதும் அவர்கள் பொறுப்பு. இதற்காகும் செலவை பிரிட்டனும் பணக்கார அமெரிக்காவும் ஏற்றுக்கொள்ளவேண்டியதுதான் நியாயம்.

இந்தியாவின் ராணுவச் செலவில் ஒருபகுதி மூலதனச் செலவு என்ற வகையில் செலவிடப்படுகிறது. மூலதனச் செலவு என்பதன் பொருளைத் தெரிந்துகொண்டால் இச் செலவிலிருக்கும் விசித்திரம் விளங்கும். சர்க்கார் சில ரயில் பாதைகளைப் போடுவதுண்டு. சில தொழிற்சாலைகளையும் சர்க்கார் ஆரம்பிக்கலாம். ரயில்வேயிலும் தொழிற்சாலைகளிலும் லாபம் வரும். ஆகையால் இத்தகைய லாபகரமான தொழிலில் சர்க்கார் மூலதனத்தைப் போடுவதனாலேயே இதற்கு மூலதனச்செலவு என்று பெயர். ஆனால், இப்பொழுது இந்திய சர்க்கார் தனது ராணுவச் செலவில் ஒரு பகுதியை விமான நிலையங்களை அமைப்பதிலும் யுத்த சம்பந்தமான தொழிற்சாலைகளை அமைப்பதிலும் செலவிடுகிறது. அந்த செலவை மூலதனச் செலவு என்றும் சொல்லிக்கொள்ளுகிறது. விமான நிலையங்களில் இப்பொழுது லாபம் வருவது ஒன்றுமே இல்லை என்பது நிச்சயம். யுத்தத்திற்குப் பின்னால் சிவில் விமானப் போக்குவரத்துக்கு அந்த நிலையங்கள் பயன்பட்டு அதனால் லாபம் வருமா என்பதும் பின்னால் ஏற்படும் நிலைமையையும், நிலையத்தின் தகுதியையும் பொறுத்த சங்கதி. சர்க்கார் தொழிற்சாலைகளை ஆரம்பித்திருக்கிறதென்றால், மோட்டார், ஆகாய விமானங்களை செய்யும் தொழிற்சாலைகளை ஆரம்பித்துவிடவில்லை. யுத்தத்தின் சில்லரைத் தேவைகளைப பூர்த்திசெய்வதற்குவேண்டிய தொழிற்சாலைகளே இவை. யுத்தத்திற்குப 'பிறகு இவை ஒன்றுக்கும் உதவப்போவதில்லை என்பதும நிச்சயம். என்றாலும் இந்தியாவை தங்கள் போருக்கு தளமாகக் கொண்டிருப்பவர்களுக்கு வேணடியவைகளே இவைகள்.

எனவே விமான நிலையங்கள் அமைப்புப் போன்ற செலவு களை பிரிட்டனும் அமெரிக்காவும் ஏற்றுக்கொள்ளுவது தான் நியாயம். ஆனால் இந்தியாவின் பாதுகாப்புக்கு எவ்வளவு விமானபலம் அவசியமென்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறதோ அதற்கு வேண்டிய விமான நிலையங்களே புதிதாக அமைக்கப்பட்டிருப்பதால் இந்தச் செலவும் இந்தியா ஏற்கவேண்டிய செலவே என்று நிதி மெம்பர் சொல்லி விட்டார்.

இந்தியாவின் ராணுவச் செலவைப்பற்றி இதுவரை கவனித்த விவரங்களிலிருந்து சில உண்மைகள் தெளிவாகின்றன. இந்தியாவின் ராணுவச்செலவு ஏராளமாகியிருக்கிறதென்றால், இந்தியாவின் பாதுகாப்புத் தேவை என்பது மாத்திரம் இதற்கு காரணமல்ல. ஏகாதிபத்திய ராணுவத்திற்கு, கிழக்கிற்கும் மேற்கிற்கும் இந்தியா முக்கிய தளம் ஆக்கப்பட்டிருப்பதே இதற்கு முக்கியகாரணம். இவ்விதம் அதிகரித்திருக்கும் ராணுவச்செலவைச் சமாளிக்க, வரிகள் அதிகரித்துக்கொண்டே போகின்றன. அதனால் இந்திய மக்களின் கஷ்டங்களோ பெருகிவிட்டன. மேலும் இந்திய ராணுவம் சும்மா இருக்கவில்லை. வெளி நாடுகளுக்குச் சென்று ரத்தத்தைச் சிந்தி, பிரிட்டன் திண்டாடிய சமயத்தில் பல போர்முனைகளில் வெற்றியையும் பெற்றிருக்கிறது. இந்த ராணுவத்தின் செலவைப் பிரிட்டன் ஏற்றுக்கொண்டிருக்கலாம. ஆனால், அதே சமயத்தில் இந்தியாவுக்குப் பிரிட்டிஷ் படைகள் அனுப்பப்படுகின்றன. இப்படைளுக்கு ஆகும் செலவை இந்தியா செய்யவேண்டியதாகிறது. இந்தியத் துருப்புகளுக்கு ஆகும் செலவைவிட, பிரிட்டிஷ் சிப்பாய்களுக்கு ஆகும செலவு இரட்டிப்பு. ஆகையால் வாஸ்தவத்தில் இதிலும் நஷ்டப்படுவது இந்தியாவே. ஆகையால் பிரிட்டனில் பிரசாரம நடபபதைப்போல, இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, பிரிட்டனின் தாராளத்தால், இலவசத்தில் சேர்ந்தது ஆகாது.

## யாருக்கு லாபம் ?

பிரிட்டிஷ் தாராளத்திலுலோ, அல்லது யுத்தத்திஞல் இந்தியாவுக்குக் கஷ்டமும் இல்லாததாலேயோ, சேர்ந்தது அல்ல ஸ்டார்லிங் நிதி என்பதைப் பார்த்தோம். இந்தியா அனுப்பிய சரக்குகளுக்கும், செய்த சேவைக்கும், பிரிட்டிஷ்-அமெரிக்கருக்கு இங்கே செய்துகொடுத்திருக்கும் பண வசதிக்கும் ஆக லண்டனில் சேர்ந்திருப்பதே ஸ்டார்லிங் நிதி என்பதையும் கவனித்தோம். பிரிட்டனுக்கும அமெரிக்காவுக்கும், சரக்குகளின் தேவை அதிகரித்து; இந்தியர் அதிக விலைக்கு விற்றுக் கொள்ளேலாபம் அடித்தன் பலனைக் குவிந்ததே இந்த ஸ்டார்லிங் நிதி என்பது பிரிட்டனில் நடக்கும் மற்ருெரு பிரசாரம். ஆனல் உண்மையில் இதனல் யாருக்கு லாபம்?

நெல்விலை ஏறியதைக்கண்டு கந்தப்பிள்ளை குதூகலப் பட்டார் என்பது வாஸ்தவம். இனி லாபமுண்டு என்றும் எண்ணினுர். கலம் ஒன்றரை ரூபாய்க்கு வாங்குவார் இல்லாதிருந்த நெல். ரூ. 3-8-0-க்கு விற்றது நல்ல விலை என்பது கந்தப்பிள்ளையின் எண்ணம்.நெல் விலை மாத்திரமல்ல, மற்ற விளைபொருள்களின் விலைகளும் ஏறியதுண்டு. ஆனல் இந்த நல்லவிலை, என்றுமே விற்காத விலை அல்ல. 1931-ஆம் வருஷத்திற்குப்பிறகு,திடீரென்று விவசாயப் பொருள்களின் விலையெல்லாம் இறங்க ஆரம்பித்த காலத்திற்கு முன்னல் இந்த விலைதான் இருந்தது என்பதை யாரும் மறந்துவிடக்கூடாது. ஆகையால் விளைபொருள்களின் இந்த விலை ஏற்றம், கந்தப்பிள்ளை போன்ற விவசாயிகளுக்குக் கொள்ளை லாபமல்ல. இந்திய சர்க்கார், பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இந்த விலைக்கு வாங்கியனுப்பியதால் இந்தியாவுக்கு க்ஷாமம் உண்டானதைத் தவிர எவ்வித க்ஷேமமும் உண்டாகவில்லை. உள்ள நிலைமையைப் பரிசீலனை செய்தால் இந்த விஷயம் நன்கு விளங்கும்.

விதை வாசிக்கும் வீட்டுக்கும் வேண்டியதுபோகக் கொஞ்சம் நெல்லை எப்பொழுதும் இருப்பிலும் வைத்திருக்கும் கந்தப்பிள்ளை, இருப்பு எதுவுமே இல்லாமல் விற்றது

ஏன்? நெல் விலை அதிகமாயிருந்தது இதற்கு ஒரு காரணம். நல்லவிலை வந்திருக்காவிட்டால் எல்லா நெல்லையும் அவசரப்பட்டு அவர் விற்றிருக்கமாட்டார். ஆகையால் நல்லவிலை, விற்பவருக்கு லாபமென்றாலும் வாங்குபவர்களுக்கும் அதனால் ஒரு சௌகரியமுண்டு. சரக்குகள் தாராளமாகக் கிடைக்க இது ஒரு நல்ல வழி. இந்திய விவசாயப் பொருள்கள் வேண்டியிருந்த பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இது அனுகூலம். இத்தேசத்தில் விவசாயிகளைத்தவிர உணவுப் பொருள்களை வாங்கித்தின்ன வேண்டியவர்களான மற்றவர்கள் இதனால் அடைந்த பலன் என்ன? வெட்டி பக்கிரி, நெல் எங்கே கிடைக்குமென்று தேடி அலைந்தான். தேடியாவது அவனுக்குக் கிடைத்தது அவன் அதிர்ஷ்டம். அதுவும் கிடைக்காததால் அரைப்பட்டினி, முழுபட்டினியானவர்கள் இந்நாட்டில் கோடிக்கணக்கிலுண்டு. பட்டினியாலும், போதிய உணவில்லாததால் பரவிய நோயாலும் மாண்டவர்கள் பல லட்சத்தினர்.

தேவைக்கு மிஞ்சியதை விற்பது லாபம். தேவையுள்ளதையே விற்று விடுவதால் ஏற்படுவதோ திண்டாட்டம். ஆகையால் விளைபொருள்களை விற்ற இந்தியா, அடைந்தது லாபமா, திண்டாட்டமா? உள்நாட்டுத் தேவைக்கு வேண்டியதுபோக மீதமிருப்பதை இந்தியா சாதாரண காலத்திலும் ஏற்றுமதி செய்து வந்திருக்கிறது. யுத்தத்தின் காரணமாக உண்டான பிரிட்டிஷ், அமெரிக்கத் தேவையை பூர்த்தி செய்யும் பேரத்தில் இறங்கிய இந்திய சர்க்கார், இந்த நியாயமான முறையைக் கையாண்டதா? மற்றெல்லாவற்றையும் விட ஒரு நாட்டுக்கு உணவு முக்கியம். இந்த முக்கியத்தை அறிந்தாவது சர்க்கார் பேரம் செய்திருக்கிறதா என்பதையும் பார்ப்போம்.

இந்திய சர்க்காரின் சத்துணவு ஆராய்ச்சி சாலை டைரக்டரான டாக்டர் அக்ராயிட், "சரியான சாப்பாடு எது என்ற பரிசீலனைக்கு முன்னால், போதுமான சாப்பாடு இருப்பது முக்கியம்" என்கிறார். இயற்கை வளத்துக்கு இந்தியாவில் குறைச்சல் இல்லை. இந்திய ஜனத்தொகையில் முக்கால் வாசிக்கு மேற்பட்டவர்கள் விவசாயத்தையே முக்கியத்

தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். எனினும் இந்திய ருள் மூன்றில் ஒரு பகுதியினர், வழக்கமாகவே போதுமான சாப்பாடு இல்லாமலேயே இருக்கிறார்கள். இந்த உண்மையை, அமெரிக்காவில் ஹாட்ஸ்பிரிங் என்ற இடத்தில் சில மாதங்களுக்கு முன்பு நடந்த ஒரு மகாநாட்டில் இந்திய சர்க்காரின் பிரதிநிதியே ஒப்புக்கொண்டிருக்கிறார். இத் தேசத்தில் எல்லோருக்கும் சரியான சாப்பாடு இல்லாவிட்டாலும் போதுமான உணவு இருப்பதற்கு மொத்தம் எவ்வளவு உணவுப் பொருள்கள் தேவை? இதில் சிரத்தை யில்லாத சர்க்காரிடம சரியான புள்ளி விவரமும் கிடையாது. ஆனல் இந்தியாவில் 610 லட்சம் டன் தானிய வகைகளும், 85 லட்சம டன் பருப்பு வகைகளும் உற்பத்தி யாகின்றன என்கிறார்கள். ஆக மொத்தம் 695 லட்சம் டன் ஆகிறது. இதில் விதைககாக 70 லட்சம் டன் போய்விட்டால், மீதமிருப்பது 625 லட்சம் டன். சத்துணவு ஆராய்ச்சி நிபுணர்களின் கருத்துப்படி, ஒரு ராத்தல் தானியமும் அரை ராத்தல் பருப்பு வகையும் ஒவ்வோர் ஆளுக்கும் தினசரி வேண்டும். குழந்தைகளை ஒதுக்கிவிட்டுப் பார்த்தால இந்நாட்டிலிருக்கும் 30 கோடி பேருக்கும் 730 லட்சம டன் தேவையாகிறது. இந்தியாவிலிருப்பதோ 625 லட்சம் டன்தான், ஆகையால் 105 லட்சம் டன் பற்றுக்குறையாகிறது. சாதாரணமாகவே, இத்தேச மக்களுக்குப் போதுமான உணவுப்பொருள்கள் இந்நாட்டில் இல்லை. போதாக்குறைக்கு, இத்தேசத்திற்குத் தேவைப்படும் அரிசியில் 5 சத வீதம் பர்மாவிலிருந்தும் சாயாமிலிருந்தும் வந்து கொண்டிருந்ததும் நின்றுவிட்டது. ஆகவே உணவுப் பொருள்கள் போதாத நிலைமையே இந்நாட்டில் என்பது சர்க்காருக்கும் தெரியும்.

போதாமலிருக்கும் உணவுக்கு மேற்கொண்டும் வழி செய்வதே ஒரு நல்ல சர்க்காரின் கடமை. ஆனல் போதாமலிருக்கும நிலைமையைப்பற்றிச் சர்க்கார் கவலைப்படுவதற்கு பதிலாக வெளியாரின் தேவையை பூர்த்திசெய்ய, இங்கிருந்து வாங்கி அனுப்புவதை இந்தியசர்க்கார் முக்கியவேலையாகக்கொண்டது. உணவுப்பொருள்களை, முக்கியமாகக் கோதுமையை, ஈரான் இராக்குக்கும் மத்திய கிழக்குப் பிர

தேசத்துக்கும் 1940 முதல் 1 943 முன்பாதி வரையில் இங்கிருந்து ஏற்றுமதி செய்து கொண்டே யிருந்தது. சர்க்கார் அனுப்பியதோடு மாத்திரம் நிற்கவில்லை. தனிப்பட்ட வர்த்தகர்கள் ஏற்றுமதி செய்யவும் அனுமதித்தது. இவ்விதம் வர்த்தகர்கள் ஏற்றுமதி செய்த ஜவுளியும் உணவுப் பொருள்களும், 1942 செப்டம்பர் வரையில் எவ்வளவு என்பதைக் கீழேயுள்ள புள்ளி விவரங்களிலிருந்து காணலாம்:

| | (லட்சம் ரூபாய்) | |
|---|---|---|
| | உணவுப்பொருள் | —ஜவுளி |
| 1939 | 6,79 | 5,07 |
| 1940-41 | 19,40 | 6,17 |
| 1941-42 | 34,80 | 31 20 |
| 1642 ஏப்ரல் முதல் செப்டம்பர் வரை | 19,14, | 22,65 |

1942 செப்டம்பர் வரையில் தனிப்பட்ட வர்த்தகர்கள் மாத்திரம் ரூ. 80 கோடிக்கு உணவுப்பொருள்களையும் ரூ. 65 கோடிக்கு ஜவுளியையும், இவற்றில் இறக்குமதி யானதைவிட அதிகமாக, ஏற்றுமதி செய்திருக்கிறார்கள். அதற்குப்பிறகும அனுப்பியிருக்கிறார்கள். இது அல்லாமல் சர்க்கார் வாங்கி யனுப்பிருப்பதோ இன்னும ஏராளம். இதற்குச் சரியான புள்ளி விவரம் கிடைக்கவில்லை. என்றாலும், சர்க்கார் செய்த இந்தக் காரியம், ஏற்கனவே போதாக்குறையாக இருந்த உணவுக்கும் துணிக்கும் பஞ்சத்தைப் பெருக்கிவிட்டது.

உணவுப்பொருள்களில் பாலும் ஒன்று. இது எல்லோருக்கும் அத்தியாவசியமான ஆகாரமுங்கூட. ஆனால் இந்தியாவிலோ, பால் பணக்காரர்களுக்கு மாத்திரமே ஏற்ற ஆடம்பர வஸ்துவாக இருக்கிறது! கால்நடைகளுக்கு இந்த தேசத்தில் பஞ்சமில்லை. 20 கோடி கால்நடைகளிருக்கின்றன. இரண்டு இந்தியருக்கு ஒரு காலநடை என்ற விதமாகிறது. உலகத்தின் மொத்தக் கால்நடைகளின் தொகையில் $28\frac{1}{2}$ சத விகிதம் இந்தியாவில் இருக்கிறது. ஆனால் கிடைப்பது மாத்திரம் 12 சத விகித பாலே. 3 கோடி கால்நடைகளைக்கொண்ட ஜெர்மனிக்கு எவ்வளவு பால் கிடைக்கிறதோ அவ்வளவுதான் 28 கோடி கால்நடை

களைக் கொண்ட இந்தியாவிலும் கிடைக்கிறது. பாலும் தேனும் ஆறாகப்பெருகி ஓடும் பாக்கியம் பெற்ற நாடு என்ற புராதனப் புகழ்ச்சிக்கு ஆளான இந்தியாவின் இக்கால கதி இது. இன்றைய நிலைமையோ இன்னும் மோசம்.

பாலுக்கு மட்டுமன்றி உழவுக்கும் கால்நடை முக்கியம். யுத்தத்துக்கு முன்னால் உழவு மாடு ஜோடி ரூ. 40 என்றால் அதே மாடு இப்பொழுது ஜோடி ரூ. 120. இந்த விலை ஏற்றத்தால் கந்தப்பிள்ளை கஷ்டப்படுவதை ஆரம்பத்தில் பார்த்தோம். கறவை மாடு கிடைக்காததால் அவர் காப்பிக்கு வழியற்றிருக்கிறார். தாராளமாகப் போட்டுத் தின்ற நெய்யும் இன்று கிடைக்காததால் உடம்பு இளைத்துப்போயிருக்கிறார். யுத்தத்தில் வெற்றி ஒன்றையே முக்கிய குறியாக சர்க்கார் கொண்டிருக்கும் இந்த சமயத்தில், கந்தப்பிள்ளையின் இந்தக்கஷ்டம் பெரிதல்ல! போர்க்களத்துக்குப் போக இருக்கும் சிப்பாய்க்குப் பாலும் மாமிசமும் அவசியம். இந்தத் தேவையைப் பூர்த்தி செய்வதில் கால்நடைகள் போய் விடுவதால், மற்றவர்களுக்குப் போதுமான கால்நடை வசதி இல்லாத கஷ்டம் வந்தது.

மிஞ்சிய கால்நடைகளின் நிலைமையாவது என்ன? கேவலம் மாடு என்றாலும் அதற்கும் தீனி அவசியம். நல்ல தீனி போட்டால்தான் நல்ல கறவையையும் எதிர்பார்க்கலாம். யுத்தத்துக்கு முன்பு கலம் 3 அணுவுக்கு விற்ற தவிடு இப்பொழுது ரூ. 1-4-0 விலை. மணங்கு ஒரு ரூபாயாக இருந்த பருத்திக்கொட்டை விலை இன்று ரூ. 3-8-0. மணங்கு 8 அணுவாக இருந்த பிண்ணாக்கு இப்பொழுது ரூ. 2-க்கு விற்கிறது. ரொம்பப் பணமிருப்பவர்களுக்குப் பால் தான் முக்கியமே யன்றி இந்த விலை ஏற்றம பிரமாதம் அல்ல. ஆனால் வயிற்றுச் சோற்றுக்கே வழியில்லாதவனுக்கு மாட்டுக்குத் தீனிபோட வகை ஏது? மாடு இளைக்கிறது; கறக்கும் பால் குறைகிறது. மற்ற உணவுப் பொருள்களுக்குப் பஞ்சம் வந்ததைப்போல மற்றோர் உணவுப் பொருளான பாலுக்கும் இவ்விதம் பஞ்சமாகிறது.

இவ்வாறு உணவுப்பொருள்கள் குறைந்ததால் உண்டான நிலைமை என்ன? நாடெங்கும் அரைப்பட்டினி,

முழுப்பட்டினி அதிகமாயிற்று. முழுப்பட்டினி கிடந்தவர்கள் மாண்டார்கள். அரைப்பட்டினியால் அவதிப்பட்டவர்கள் வலுவற்றுப் போனதால் தொத்துநோய்களுக்கு ஆயிரக்கணககில் பலியாகிருர்கள். முக்கியமாக வங்காளத்தில் ஏற்பட்ட 'பட்டினிச் சாவு' பரிதாபத்தை இந்தியர் என்றென்றும் மறந்துவிடவே முடியாது. "பட்டினியாலும், அதனுல் வந்த தொத்து நோய்களாலும் வங்காளத்தில் சாகிறவர்கள் வாரத்துக்கு ஆயிரம் அல்லது இரண்டாயிரம் பேரே" என்று இந்திய மந்திரி அமெரி முதலில் சொன்ஞர், பின்னுல், "பட்டினியால் செத்தவர்கள் 10-லட்சத்திற்கு அதிகம் இருக்காது" என்று கூறிப் பெருமைப்பட்டார். நிலைமையை நேரில் பரிசீலனை செய்த பண்டித குன்ஸ்ருவோ, வங்காளத்தில் மாத்திரம் வயிற்றுக்கு இல்லாததால் வாரத்துக்குச் சுமார் லட்சம் பேர் வீதம் மடிகிருர்கள் என்கிருர். கல்கத்தா சர்வகலாசாலையார் செய்திருக்கும் பரிசீலனை இன்னும் முக்கியமானது. "மொத்த ஜனத்தொகையில மூன்றில் இரு பகுதியினராவது இந்தப் பஞ்சத்திஞல் பாதிக்கப்பட்டிருக்கிருர்கள் என்று கூறுவது, குறைத்துச் சொல்லுவதாகவே இருக்கும்......அநேகமாக ஆறுமாத காலத்தில், சாதாரணமாக இருக்கும் சாவுகளைத் தவிர, பட்டினியால் 35 லட்சம் பேருக்கு அதிகமாகவே இறந்திருப்பார்கள்" என்று சர்வகலாசாலை இலாகாவின் பரிசீலனை கூறுகிறது.

உணவுப் பொருள்களை சர்க்கார் விலைகொடுத்து வாங்கியே அனுப்பிஞர்கள் என்பது நிஜம். இருந்த உணவுப் பொருள்களில் ஒரு பகுதி வெளியேபோய், உள்நாட்டில் ராணுவத் தேவைக்கும் அதிகமாக வேண்டியிருந்ததனு லேயே பொதுஜனங்களுக்குப் போதிய உணவு இல்லாமல் பல லட்சமபேர் பட்டினிக்குப் பலியாக நேர்ந்தது என்பதை சர்க்காரும் மறுக்கமுடியாது. போன அந்த உணவுப் பொருள்களுக்கும் பணமாக இருப்பதுதான் ஸ்டர்லிங் நிதி. ஆகையால், லட்சக்கணக்கானவர்கள் பட்டினிக்குப் பலியாகப் பாத்திரமாயிருந்தது இந்த ஸ்டர்லிங் இருப்பேயன்றி, மிஞ்சியபொருள்களை விற்றதனுல் வந்தலாபத்தில்

சேர்ந்தது அல்ல. செட்டிநாட்டுக் குமார ராஜா சர். முத்தையா செட்டியார், சர்க்காருக்கு வேண்டாதவர் அல்லர். இந்திய வர்த்தக சம்மேளனத்தில் சமீபத்திலே அவர் பேசியபோது, ஸ்டர்லிங் நிதியைப்பற்றி அவர் சொன்னது இங்கு ஞாபகப்படுத்தத் தக்கதாகும். "மக்களின் உழைப்பும், அதனுல் சிந்திய வியர்வையும், லட்சக்கணக்கான நம் தேசத்தவரின் ரத்தமும் கண்ணீருமே ஸ்டர்லிங் நிதி" என்ருர் அவர். ஆகையால் பிரிட்டனுடைய தேவையை அநியாய முறையில் தனக்குச் சாதகமாக இந்தியா உபயோகித்துக்கொண்டு விட்டதால் சேர்ந்ததே ஸ்டர்லிங் நிதி என்று பிரிட்டிஷ் பத்திரிகைகள் கூறுவது அட்டூழிய பிரசாரம்.

இந்தியரின் தேவை இன்னது என்பதைக்கூடப்பொருட்படுத்தாமல், மற்ற நேசநாடுகளின் தேவையை முன்னிட்டு இந்திய சர்க்கார் பல பொருள்களை ஏற்றி அனுப்பினர்கள். இவ்விதம் விற்க நேர்ந்த இந்தியருக்குப் பெரிய பண லாபமாவது ஏதாவது உண்டா? கந்தப்பிள்ளையின் நெல்லுக்கு இப்பொழுது கிடைக்கும் விலை, 1931-ஆம் வருஷத்துக்கு முந்தியிருந்த நல்ல விலைக்கு அதிகமாக எதுவுமே இல்லை என்பதை முன்பே கவனித்தோம். பொதுவாக முக்கிய விளைபொருள்களின் நிலைமையும் இதுதான். தேயிலை, சணல், இரும்பு, மைக்கா, மாங்கனீஸ், தோல்கள், பூட்ஸ் முதலியவைகளையும் ஜவுளியையும் இந்திய சர்க்கார் வாங்கி பிரிட்டனுக்கு அனுப்பியிருக்கிறது. இப்பொருள்களுக்குத் தேவை அதிகரிப்பதற்கு ஏற்றபடி விலையும் ஏறிக்கொண்டே போகட்டுமென்று சர்க்கார் சும்மா இருந்து விடவில்லை. இப்பொருள்களின் அதிகப்பட்ச விலை இன்னதுதான் இருக்கவேண்டும் என்பதையும் இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி சர்க்கார் நிர்ணயித்திருக்கிறது.

சர்க்காருக்கும் நேச தேசங்களுக்கும் தேவைப்படும் பொருள்களை, நிர்ணயித்த விலைக்கே சர்க்கார் வாங்குகிறது. கடவுளுக்கு சர்வவல்லமையுண்டு என்பதில் சந்தேகமிருக்கிறவர்களும் இருக்கலாம். ஆனுல் இந்திய சர்க்காரின் பாதுகாப்பு விதிகளுக்கு இருக்கும் சர்வவல்லமையில் எவருக்கு

மே சந்தேகம் கிடையாது. ஆகையால், நிர்ணயித்த விலையில் எங்கிருந்தாவது சர்க்காருக்குச் சரக்குகள் கிடைத்துவிடும். நிர்ணயித்த விலை கொஞ்சமாயிருக்கிறதே என்று விற்க மறுக்கும் தைரியம் யாருக்குமே வராது. உண்மை இவ்வித மிருக்க, கொள்ளை லாபத்திற்கு விற்று இந்தியர் லண்டனில் ஸ்டர்லிங் நிதியைச் சேர்த்துவைத்திருக்கிறார்கள் என்பது பெரும் அபாண்டமல்லவா?

நிர்ணயித்த விலைக்குச் சர்க்காருக்குப் பண்டங்கள் கிடைக்க வசதியிருப்பதைப்போல பொது ஜனங்களுக்கும் கிடைக்கிறதா என்றால் அதுதான் இல்லை. பாதுகாப்புச் சட்ட விதிகள் பொது ஜனங்கள் கையிலும் இல்லை என்பது, பொருள்களை விற்பவர்களுக்குத் தெரியும். எனவே விலை நிர்ணயம் என்றதுமே, கடைகளில் இருக்கும் சரக்கு திடீரென்று காணாமல் போய்விடும்! கொஞ்ச காலத்திற்கு முன்பு, சென்னையில் அடுப்புக்கரியின் விலையைச் சர்க்கார் நிர்ணயித்தார்கள். விறகு இல்லாத காலத்தில் கடையிலிருந்த கரியும் ஒளிந்துவிட்டதால் நிர்ணயித்த விலையைச் சர்க்கார் உடனே நீக்கவேண்டியிருந்தது என்பதை அநேகர் மறந்திருக்க மாட்டார்கள். இந்த விலை நிர்ணயம் நீடித்து இருந்திருக்குமானால், கந்தப்பிள்ளையின் மகன் கணபதியே யன்றி, சென்னை வாசிகளில் இன்னும் ஏராளமானவர்கள், மூன்று மாதங்களுக்கு முன்னாலேயே தங்கள் குடும்பங்களை ரயில் ஏற்றிவிட நேர்ந்திருக்கும்.

நிர்ணயித்த விலையில் சர்க்காருக்கு இரும்பு கிடைக்கும். ஆனால் 10 அணாவுக்கு முன்னால் விற்ற மண்வெட்டி கந்தப் பிள்ளைக்கு இப்பொழுது ரூ. 3-க்குத்தான் கிடைக்கும். ஒரு ரூபாய்க்கு முன்பு கிடைத்த மரக்கலப்பை ரூ. 5 கொடுத்தால்தான் இப்பொழுது அகப்படும். ஆகையால் விலை நிர்ணயத்தால் சர்க்காருக்கும் பிரிட்டனுக்கும் சௌகரியமே யன்றிப் பொதுஜனங்களுக்கு எதுவும் கிடையாது. ஜனங்களின் அவசியத் தேவைக்கு வேண்டிய பொருள்கள் கிடைக்கும்படிச் செய்யவேண்டுமே என்பதிலும் சர்க்காருக்கு லட்சியம் கிடையாது. இந்தியாவுக்கு ஏராளமாக விஸ்கி அனுப்பக் கப்பல் வசதியுண்டு; பட்டினிகிடந்து சாகி

றவர்களுக்கு உணவு அனுப்பக் கப்பல் வசதி கிடைக்க வில்லை என்று இந்தியா மந்திரி வெட்க மில்லாமல் சொன்னது இதற்கு ஒரு உதாரணம். இவ்விஷயத்தில் சர்க்காரின போக்கைப்பற்றி சர். முத்தையா செட்டியார் கூறுவதாவது:—

"வாஸ்தவத்தில் யுத்தத்தின் ஆரம்ப வருஷங்களில் இந்திய சர்ககார் மேற்கொண்டிருந்த போக்கு ஒன்றே ஒன்றுதான். பொதுஜனங்கள் தங்களுக்கு வேண்டிய ஒரு சாமானுக்கு என்ன விலை கொடுக்க வேண்டியிருக்கிறது, அந்த சாமானை உறபத்தி செய்கிறவர்கள் வாங்குபவர்களிடம் எவ்வளவு அதிக விலை கேட்கிறார்கள் என்பவை யெல்லாம்பற்றி சர்க்காருக்கு கவலையே கிடையாது. தனது தேவைக்கும், பிரிட்டிஷ் சர்க்காரின் தேவைக்கும், நேச நாட்டுத் தேவைக்கும் வேண்டியஅந்தச் சாமான்கள் குறைந்த விலைக்குக் கிடைக்கவேண்டும் என்பது ஒன்றே இந்திய சர்க்காரின் கவலை. தன்னிடம் வாங்கும் வெளி நாட்டவருக்குக் குறைந்த விலைக்குக் கொடுத்து, அதே பொருள்களைத் தம் சொந்த நாட்டு ஜனங்களுக்கு அதிக விலைக்கு விற்ற தேசம் இந்தியாவைத் தவிர, நேச நாடுகளில் வேறு ஏதாவது இருக்க முடியுமா என்று ஆச்சரியப்படுகிறேன். இந்த நிலைமையில்தான், மற்ற நேச தேசங்களின் தேவையைத் தனக்குச் சாதகமாக்கிக்கொண்டு இந்தியா லாபமடித்து ஏராளமான ஸ்டர்லிங் இருப்பைச் சேர்த்துவிட்டது என்று அசட்டையாகவும் குறும்பாகவும் இந்தியாமீது குற்றஞ் சாட்டப்படுகிறது."

இவ்விதம் சர்க்கார் செய்த பேரத்தின் விளைவு விபரீதமாயிற்றென்றால், இதற்கு வேண்டிய பணத்துக்குச்சர்க்கார் அனுஷ்டித்திருக்கும் முறை அதிக ஆபத்தானதாகி யிருக்கிறது. பிரிட்டிஷ் சர்க்காருக்கு யுத்தச் செலவு சம்பந்தமாக இந்தியாவில் பணவசதி வேண்டுமானால் அதற்கு நியாயமான வழிகள் மூன்றே உண்டு. இந்தியர்மீது அதிக வரிகளை விதித்து, வருமான வரிகளைப் பெருக்கி, அப்பணத்தை உபயோகிப்பது முதல் வழி. ஆனால் அவ்வளவு செலவுக்கும் போதுமான பணத்துக்கு வேண்டிய வரி விதிக்கக்கூடிய செல்வமுள்ள நாடு அல்ல இது. ஆகையால் இந்த வழி முழு

துக்கும் பலிக்காது. இரண்டாவது வழி, இந்தியாவிலிருந்து தான் வாங்கிக்கொள்ளும் சரக்குக்கும், பெறும் சேவைக்கும் பிரிட்டனே இங்கே பணம் கொடுக்கும்படிச் செய்வது. துருக்கி விஷயத்தில் பிரிட்டன் இப்படித்தான் நடந்து கொண்டிருக்கிறது. சுவீடன், சுவிட்ஜர்லாந்து போன்ற நாடுகளிடமிருந்து சரக்குகளைப் பெறும் ஜெர்மனியும் இதைத்தான் செய்து வருகிறது. சரக்குகளையும் சேவையையும் தரும் இந்தியா விஷயத்திலும் யோக்கியமாக நடந்து கொள்ளுவதாக இருந்தால், இந்தியத் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய யந்திரங்களையும், பொதுஜனங்களுக்குத் தேவையான பொருள்களையும் பதிலுக்குப் பிரிட்டன் அனுப்பி இருக்கலாம். இப்படி அனுப்ப பிரிட்டனுக்கு வசதியில்லாது போனால் வாங்கிய பொருளுக்கும் சேவைக்கும் பதிலாக தங்கமாகத் தந்திருக்கலாம். ஆனால் பிரிட்டன் தங்கத்தையும் தரவில்லை.

இப்பொழுது பிரிட்டனிலிருந்தும் அமெரிக்காவிலிருந்தும் இந்தியாவுக்கு தங்கம் வருகிறது. இந்தியரிடம் வாங்கிய பொருளுக்கு விலையாக இந்தத் தங்கம் வரவில்லை. இந்தியரை ஏய்த்துக் கொள்ளை லாபம் அடிப்பதற்காக வந்திருப்பதே இந்தத் தங்கம். அமெரிக்காவிலும் பிரிட்டனிலும் தங்கம் தோலா ரூ. 45 ஆக விற்கிறது. அதே தங்கத்தை இந்தியாவில் ரிசர்வ் பாங்க் மூலம் தோலா ரூ. 71 வீதம் விற்கிறார்கள். எனவே ஒரு தோலாவுக்குக் குறைந்தது ரூ. 26 லாபம். தங்கத்தைக் கொடுத்து இந்தியப் பொருள்களை வாங்கும் பொருட்டு நடப்பது அல்ல இந்தத் தங்க விற்பனை. இந்தியரிடம் தங்கத்தை அதிக விலைக்கு விற்று அதிலிருந்து கிடைக்கும் கொள்ளை லாபத்தைக் கொண்டே இந்தியப் பொருள்களை வாங்கிக்கொண்டு போய்விட நடக்கும் சூது இது. பச்சையாகச் சொல்லுவதானால், இந்தியர் கையைக் கொண்டே இந்தியர் கண்ணைக் குத்தும் தந்திரம் என்றே இதைச் சொல்லலாம். தங்கத்தையோ, பொருளுக்குப் பதில் பொருளையோ வாங்கிக்கொள்ளாமல் இந்தியச் சரக்குகளைத் தாராளமாகக் கப்பலேற்றி வரும் இந்திய சர்க்கார், இப்பொழுது நடக்கும் தங்க விற்பனைத் 'தில்லுமல்லு'க்கும் உடந்தையாகவே இருக்கிறது.

பிரிட்டிஷ் யுத்தச் செலவுக்கு இந்தியாவில் வேண்டிய பணத்தைப்பெற இருக்கும் மூன்றாவது நியாயமான வழி, இன்னும் சுலபமானது. இந்தியாவில் பிரிட்டிஷ் முதல் போட்டுள்ள தொழிற்சாலைகள், ரயில்கள், கம்பெனிகள் முதலியன பல இருக்கின்றன. அவற்றை இந்தியருக்கு மாற்றிவிட்டு இதில் வரும் பணத்தைப் பிரிட்டிஷ் சர்க்கார் செலவிடலாம். இல்லாவிட்டால் பிரிட்டிஷ் சர்க்காரே இந்தியரிடம் நேரில் கடன் வாங்கலாம். இந்தியா சுதந்தர நாடாக இருந்திருந்தால் இந்த இரண்டு உபாயங்களைத் தவிர பிரிட்டிஷ் சர்க்காருக்கு வேறு வழி இருந்திருக்காது. ஆனால், இந்தியா தன்னிடம அடிமைப்பட்ட நாடே யாகையால் நியாயமான முறையை விட்டுவிட்டு, இந்தியரின் கஷ்டங்களை மலைபோல் பெருக்கி விடும் ஒரு முறையைக் கையாண்டு வருகின்றது. ஸ்டர்லிங் இருப்பை இங்கிலாந்தில் வைத்துவிட்டு, பண நோட்டுக்கள் அச்சிடிக்கும் யந்திரத்தை இங்கு முடுக்கிவிட்டு பணத்தைப் பெருக்கியிருப்பதே சர்க்கார் கையாண்டிருக்கும் விசித்திர முறை.

இந்தியாவில் இருக்கும் உணவுப் பொருள்களேயன்றி மற்ற பல சரக்குகளுமே இந்தியரின் தேவைக்குப் போதாதவை; அதிலும் ஒரு பகுதி கப்பலேறி விட்டது; போனதற்குப் பதிலாகப் பண்டமோ பிற பொருளோ வருவதுமில்லை என்பதையும் கவனித்தோம். ஆகையால், பண்டங்கள் அதிகமாகக் குறைந்தன. சர்க்கார் வாங்கிய சரக்கின்விலைக்கேயல்லாமல் செலவுக்கு வேண்டிய பணத்துக்கும் நோட்டுக்களை அச்சிட்டுச் சர்க்கார் அதிகப் பணத்தைச் செலாவணிக்கு விட்டிருப்பதையும் காண்கிறோம். போதுமான சரக்கில்லாத சமயத்தில், சர்க்கார் பெருக்கி யிருக்கும் பணமே இந்தியருக்கு இன்று விளைந்திருக்கும் தீராத் தொல்லை.

இந்தத் தொல்லையைத் தெரிந்து கொள்ளுவதற்கு, பணத்தின் தன்மை இன்னதென்பதையும் கொஞ்சம் விளக்க வேண்டியது அவசியமாகிறது. பணத்தைக்கொண்டு பண்டங்களை வாங்குகிறோம். பண்டத்தைக் கொடுத்து இன்னொரு பண்டத்தை வாங்கவும் முடியும். கிராமங்களில் ஓர் அளவுக்கு இந்த வழக்கம் இன்றும் இருந்து வருகிறது.

ஆகையால் இன்னொன்றை வாங்க ஒரு பண்டத்துக்கு இல்லாத ஒரு புதிய சக்தி பணத்துக்கு மாத்திரம் இருந்துவிடவில்லை என்பது இதிலிருந்து தெரிகிறதல்லவா? எனவே மற்றப் பண்டங்களைப் போன்றதே பணமும். ஆனல் பண்டத்தைப் பண்டத்தால் வாங்குவதிலிருக்கும் பல சிரமங்களைப் போக்கும் ஒரு சௌகரியமாக வந்ததே பணம். பண்டத்துக்கும் பணம் ஒருதேவை; பணம் நிலைத்திருக்கப் பண்டமும் தேவை. ஆகையால் பண்டமும் பணமும் ஒன்றுக்கொன்று சமமானநிலையிலிருக்கும வரையில் விலைவாசி நிரந்தரமாய் இருக்கும். இதில் எது குறைந்து, எது பெருகினாலும் விலைவாசியில் ஏற்றத்தாழ்வு தொல்லை இருந்தே தீரும. தேவைக்கு அதிகமான கத்தரிக்காய் மார்க்கட்டுக்கு வந்தால் கத்தரிக்காய் மலிந்து மதிப்பை இழந்துவிடும்.பணத்தின் சங்கதியும் அப்படித்தான். கத்தரிக்காய் மலிந்தால் வீசை ஒரு அணுவாக இருந்த கத்தரிக்காயின் மதிப்பு முக்கால் அணு, அரையணுவுக்கும் குறைந்துவிடும். பணம் பெருத்து மலிந்தாலும் அதன்மதிப்பும் ஒரு ரூபாய், முக்கால் அல்லது அரை ரூபாய் மதிப்பையே அடையும். ஒரு ரூபாய்க்கு 4 படி என்றிருந்த பருப்பு, ரூபாய்க்கு ஒரு படி என்று ஆகியிருப்பது ரூபாயின் மதிப்பு, அதற்கு இருந்த வாங்கும் சக்தி குறைந்திருப்பதைக் காட்டுவதற்கு ஓர் உதாரணம்.

ரூபாய் மதிப்பிழந்தது ஏன்? இருக்கிற பண்டங்களுக்கு ஏற்றபடியல்லாமல், அதாவது தேவைக்கு அதிகமாக, பணத்தை அச்சிட்டுச் சர்க்கார் வெளியிட்டுவிட்டதே இதற்குக் காரணம். ரூ. 850 கோடிக்கு இதுவரையில் நோட்டுக்களைப்போட்டுச் செலாவணிக்கு வெளியிட்டிருக்கிறர்கள். (இது சம்பந்தமான புள்ளி விவரங்களைக் கடைசிப் பக்கத்தில் பார்க்கவும்). சர்க்கார் செய்திருக்கும் இந்தப் பணப்பெருக்கம் ரூபாயின் மதிப்பைக் குறைத்தது. அநேகருடைய குடியையும் கெடுக்கிறது. இதனல் ரூபாய், எவ்வளவு தூரம் தன் மதிப்பை இழந்திருக்கிறது? வாழ்க்கைச் செலவு இன்றிருக்கும் நிலைமை ஒன்றே இதை அளந்து பார்க்க ஏற்ற கருவி. பம்பாயில் ரூ. 100-ல் வாழ்ந்தவனுடைய வாழ்க்கைச் செலவு இப்பொழுது ரூ. 238-க்கு உயர்ந்

திருக்கிறது. அதாவது, நூறு ரூபாய்க்கு இருக்கவேண்டிய மதிப்பே இப்பொழுது ரூ. 238-க்கு இருக்கிறது என்பதாகிறது. அதன்படி, யுத்தத்துக்கு முந்தியிருந்த ரூபாயின் மதிப்போடு ஒப்பிட்டால் 6 அணு 8 பை மதிப்பே இன்று ஒரு ரூபாய்க்கு இருக்கிறது.

இதன் பலாபலன் என்ன? ரூ. 36 சம்பளத்தைக் கொண்டு குடித்தனம் பண்ணலாமென்று மெதுவாக உத்தியோகத்துக்கு வந்தான் கணபதி. அவனுக்குக் கிடைக்கும் ரூ. 36க்கு ரூ 15-ன் மதிப்பே இருப்பதால் வாழ முடியாது தத்தளிக்கிறுன். இதைக்கேட்டுக் கந்தப்பிள்ளை கலங்குகிறுர். கோவிந்தக்கோனுருக்கு இவர் கடன் கொடுத்தபோது ரூபாய்க்கு முழு மதிப்பும் இருந்தது. அரை வேலி நிலத்தை வாங்கக்கூடியது அப்பொழுது அதற்கிருந்த மதிப்பு. ஆனுல் அதே பணத்துக்கு இப்பொழுது கால் வேலி கிடைப்பதுகூடத் துர்பலமானது கந்தப்பிள்ளையின் துக்கம்.

பணம் பெருகியதால் ரூபாய் தன் மதிப்பை இழந்ததேயல்லாமல், குறைந்திருக்கும் பண்டங்களின் மதிப்போ குறையவில்லை. பண்டங்களின் மதிப்பு அதிகமாகத்தான் ஆகியிருக்கிறது. ஆகையால் ஒரு ரூபாய்க்கு வாங்கிய பண்டத்தை 2 அல்லது 3 ரூபாய் கொடுத்தால்தான் இப்பொழுது வாங்க முடிகிறது. எனவே பணப் பெருக்கம் இருப்பவனுக்குப் பண்டம் கிடைக்கும். அது இல்லாதவர்களுக்கு எதுவுமே கிடைக்காது. பணப் பெருக்கமோ ஒரு சில பணக்காரர்களிடமும், அந்தக் கண்டிராக்டரான மன்னூர் நாயுடு போன்றவர்களிடமும் தான் இருக்கிறது. ஆகையால் இத்தகையவர்கள் நிலத்தையோ மாட்டையோ, உணவுப் பொருள்களையோ, போட்டிபோட்டு வாங்கி குவித்துக்கொள்ளுவார்கள். உணவுப் பொருள்களையாவது வாங்கியே தீர வேண்டிய ஏழைகளுக்கும் நடுத்தர வகுப்பினருக்கும் வாங்கப் பொருள் கிட்டாது. கிட்டினுலும் போட்டியிலே தரப் போதிய பணம் கிடையாது. ஆகையால் இதன் விளைவு என்ன? பொருள் கப்பலேறியதால் வங்காளத்தில் லக்ஷக்கணக்கில் பட்டினிச் சாவு; போன பொருளுக்கு பதிலாகச் சர்க்கார் பெருக்கிய பணத்தினுல் இந்தியா முழு

மைக்குமே அநேகருக்கு பசியும் பரிதவிப்பும். இதுவே இந்தியர் கண்ட லாபம்!

ஒவ்வொரு ரூபாயும் அதில் 9 அணு 4 தம்பிடி மதிப்பை இழந்துவிட்டது என்று சொன்னேம். இழந்த இந்த மதிப்பு என்னவாயிற்று என்று கேட்கலாம். ஒவ்வொரு ரூபாயும் பறிகொடுத்திருக்கும் இந்த மதிப்பே, இந்தியாவில் நடக்கும யுத்த சம்பந்தமான செலவுக்கும், பிரிட்டனுக்குச் சரக்குகளை வாங்கியனுப்புவதற்கும், பிரிட்டிஷ் சர்க்காருக்காக இங்கிருந்து சேவை செய்தவர்களுக்குக் கொடுப்பதற்கும் செலவழித்திருக்கிறது என்பதே அந்தக் கேள்விக்குப் பதில். இதற்குப் பதிலாக இங்கிலாந்தில் ஸ்டர்லிங் இருப்பு இருக்கிறதல்லவா என்று சர்க்கார் தீரமாகக் காட்டலாம். ஆறுயிரம் மைலுக்கு அப்பால் இருப்பு இருககும். ஆனல், இதனல் இங்கிருக்கும் துயரம் சொல்ல முடியாதது ஆகி இருப்பது சர்க்காருக்கும், இந்தியா லாபமடிக்கிறதென்று சொல்லும் பிரிட்டிஷாருக்கும் தெரிந்திருக்கட்டும்.

"பரலோக ராஜ்யத்தில் தன் ஊழியக்காரரிடத்தில் கணக்குப் பார்க்கவேண்டுமென்றிருந்த ஒரு ராஜா கணக்குப் பார்க்கத்தொடங்கினபோது, பதினுயிரம் தாலந்து கடன்பட்டவன் ஒருவனை அவனுக்கு முன் பாகக்கொண்டு வந்தார்கள். கடனைத் தீர்க்க அவனுக்கு நிர்வாகம் இல்லாதபடியால், அவனுடைய ஆண்டவன் அவனையும் அவன் பெண்ஜாதி பிள்ளைகளையும், அவ னுக்கு உண்டான எல்லாவற்றையும் விற்று, கடனைத் தீர்க்கும்படிக் கட்டளையிட்டான். அப்பொழுது, அந்த ஊழியக்காரன் தாழ விழுந்து வணங்கி, "ஆண்டவ னே! என்னிடத்தில் பொறுமையாயிரும். எல்லாவற் றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன்" என்ருன். அந்த ஊழியக்காரனுடைய ஆண்டவன் மனசு இரங்கி, அவனை விடுதலை பண்ணி, கடனையும் அவனுக்கு மன் னித்து விட்டான்.

"அப்படியிருக்க, அந்த ஊழியக்காரன் புறப்பட்டுப் போகையில், தன்னிடத்தில் நூறு வெள்ளிப்பணம் கடன் பட்டிருந்தவனுகிய தன் உடன் வேலைக்காரரில் ஒருவனைக் கண்டு, அவனைப் பிடித்து, தொண்டையை நெறித்து, "நீ பட்ட கடனை எனக்குக் கொடுத்துத் தீர்க்கவேண்டும்" என்ருன். அப்பொழுது அவனுடைய உடன் வேலைக்காரன் அவன் காலிலே விழுந்து, "என் னிடத்தில் பொறுமையாயிரும். எல்லாவற்றையும் உமக்குக் கொடுத்துத் தீர்க்கிறேன்" என்று, அவனை வேண்டிக்கொண்டான். அவனே சம்மதியாமல், பட்ட கடனைக் கொடுத்துத் தீர்க்குமளவும் அவனைக் காவலில் போடுவித்தான் நடந்ததை அவனுடைய உடன் வேலைக் காரர் கண்டு, மிகவும் துக்கப்பட்டு ஆண்டவனிடத்தில் வந்து அறிவித்தார்கள். அப்பொழுது அவனுடைய ஆண்டவன் அவனை அழைப்பித்து, "பொல்லாத ஊழி யக்காரனே! நீ என்னை வேண்டிக்கொண்டபடியினுல் அந்தக் கடன் முழுவதையும் உனக்கு மன்னித்துவிட் டேன். நான் உனக்கு இரங்கினது போல, நீயும் உன் உடன் வேலைக்காரனுக்கு இரங்கவேண்டாமோ'

என்று சொல்லி, கோபமடைந்து, அவன் பட்ட கடனை யெல்லாம் தனக்குக் கொடுத்துத் தீர்க்குமளவும் உபா திக்கிறவர்களிடத்தில் அவனை ஒப்புக்கொடுத்தான்.''

—மத்தேயு எழுதின சுவிசேஷம் (அத் - 23 - 35)

மேலே இருப்பது ஏசுநாதர் தம் சிஷ்யர்களுக்குச் சொன்னது. பிரிட்டன் போன்ற ஐரோப்பிய நாடுகளும் அமெரிக்காவும் கிறிஸ்தவ நாடுகள். சென்ற மகா யுத்தத் திற்குப் பிறகு இந்த நாடுகளெல்லாம் கடனுல் கலங்கின. இந்தியாவின் தலையிலும் ஏராளமாக கடன் சுமந்திருந்தது. அதன் விவரத்தைக் கவனிக்கு முன்பு ஏசுநாதர் சொன்ன மேலே கண்ட விஷயத்தை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும.

யுத்தச் செலவுக்குப் பணம் வேண்டும். போன யுத்தத் தின் ஆரம்ப நாட்களில் பிரிட்டனும் பிரான்ஸுமே தங்க ளுடனிருந்த சிறிய நேச நாடுகளுக்கு வேண்டிய பண வசதி களைச் செய்து வந்தன. பிறகு பிரான்ஸிடம் இதற்குப் போதிய பணமில்லாது போயிற்று. அதற்குமேல் அது கடன் கொடுக்கவில்லை. இங்கிலாந்து தொடர்ந்து கடன் கொடுத்துக்கொண்டு வந்தது. பின்னுல் இங்கிலாந்துக்கும் பணக்கஷ்டம் வந்ததால் கடன்கொடுக்கும் வசதி அதற்கும் இல்லாது போயிற்று. கடன் கொடுக்கக்கூடிய சக்தியில் இருந்தது அமெரிக்கா ஒன்றுதான். இங்கிலாந்துக்கும் பிரான்ஸுக்கும் மற்ற நேச நாடுகளுக்கும் அமெரிக்கா தாராளமாகக் கடன் கொடுத்தது. அதனுல் அமெரிக்கா லாபத்தையும் அடைந்தது. இவ்விதம் ஒவ்வொரு நாடும் கடன் பட்டும் கடன் கொடுத்தும் இருந்ததால் யுத்தத்திற் குப்பிறகு இருந்த நிலைமை இதுதான்: சில நாடுகள் பிரான் ஸுக்குக் கடனை திருப்பித்தரவேண்டியிருந்தது. பல நாடு கள் பிரிட்டனிடம் கடன்பட்டிருந்தன. பிரிட்டன், பிரான்ஸ் உள்பட எல்லா நேச நாடுகளும் அமெரிக்காவி னிடம் ஏராளமாகக், கடன்பட்டிருந்தன. அந்த யுத்தத்திற்கு முன்னுல் அமெரிக்கா மற்றத் தேசங்களிடம் கடன்பட்ட நாடாக இருந்தது. மற்ற நாடுகளுக்கு அது தரவேண்டி யிருந்த தொகை 300 கோடி டாலர். ஆனல் யுத்த முடி விற்குள் அமெரிக்கா, தான் பட்டிருந்த கடனைத் தீர்த்து

விட்டதல்லாமல் 1926-ஆம் வருஷத்திற்குள் 2,500 கோடி டாலர் வெளிநாடுகளுக்குக் கடன் கொடுத்திருந்தது.

1918-ல் ஜெர்மனி தோற்ற பிறகு வார்சேல்ஸ் ஒப்பந்தம் செய்யப்பட்டது. அந்த யுத்தத்தை ஆரம்பித்தது ஜெர்மனியல்லவா? இதனால் அல்லவா மற்றத் தேசங்களுக்குக்கஷ்ட நஷ்டங்களும் கடன்களுங்கூட ஏற்பட்டன. ஆகையால் யுத்தத்தை ஆரம்பித்த குற்றத்திற்காக ஜெர்மனி, நேச தேசத்தினருக்கு நஷ்ட ஈடும் தரவேண்டும் என்ற முடிவையும் வார்சேல்ஸ் ஒப்பந்தத்தில் செய்தார்கள். நஷ்ட ஈடாக ஜெர்மனி இவ்வளவு தொகை தரவேண்டும் என்பது அந்த ஒப்பந்தத்தில் இல்லை என்றாலும், பின்னால் மகாநாடுகளைக் கூட்டி 660 கோடி ஸ்டர்லிங் பவுன் ஜெர்மனி தரவேண்டுமென்று முடிவு செய்தார்கள். இந்த ஏற்பாட்டில் நேச தேசத்தினருக்குத் திருப்தி. இந்த நாடுகளோ, அமெரிக்காவினிடம் கடன்பட்டிருக்கின்றன. ஜெர்மனியோ இவர்களுக்கு நஷ்ட ஈட்டுத்தொகை தரவேண்டும். அதை வாங்கி அமெரிக்காவுக்குக் கடன் கொடுத்துவிட்டால் கஷ்டம் தீர்ந்துவிடும் என்பது நேச நாடுகள் அப்பொழுது கொண்ட குதூகலத்திற்குக் காரணம்.

யுத்தத்தை ஆரம்பித்த பாவத்தை ஜெர்மனி செய்திருக்கலாம். ஆனால் யுத்தத்தின் காரணமாக மற்றத் தேசங்களை விட அதிகக் கஷ்ட நஷ்டங்களை மாத்திரமேயன்றித் தோல்வியால் ஏற்பட்ட அவமானத்தையும் ஜெர்மனி அடைந்திருந்தது என்பதை யாரும் மறுக்கமுடியாது. அந்த நிலைமையில், மற்ற தேசங்களுக்கு நஷ்ட ஈட்டுத் தொகையையும் வேறு ஜெர்மனி தரவேண்டும் என்று தீர்மானித்தது சரியா என்பதைப் பற்றிய சர்ச்சை இங்கு அநாவசியம். ஆனால் விதித்த நஷ்ட ஈட்டுத்தொகையைச் செலுத்த ஜெர்மனியால் முடிந்ததா என்பதைக் கவனிக்கவேண்டியதே முக்கிய விஷயம்.

இது அல்லாமல் ஜெர்மனிக்கு உள் நாட்டிலும் கடன் ஏராளமாக இருந்தது. பிரிட்டிஷ் சர்க்காரின் யுத்தச் செலவுகளுக்கு இந்தியாவில் பண வசதி செய்துகொடுக்க இந்திய சர்க்கார் இந்த யுத்தத்தில் என்ன உபாயத்தைக்

கையாண்டு வருகிறார்களோ அதையே ஜெர்மன் சர்க்காரும் இதைவிட இன்னும் ரொம்பத் தீவிரமாகச்செய்ய ஆரம்பித்தது. நோட்டுப் பணத்தைப் பெருக்கிக்கொண்டு போகும் டில்லி சர்க்கார், லண்டனிலிருக்கும் ஸ்டர்லிங் இருப்பையாவது அதற்குப் பதில் என்று காட்டுகிறது. ஜெர்மன் சர்க்கார், அதுகூட இல்லாமல், காகிதப் பணத்தை ஓயாது அச்சிட்டுக் கொடுத்துக்கொண்டே வந்தது. சர்க்கார்போட்ட நோட்டு செல்லாது என்று அந்தச்சர்க்காரின் கீழ் இருக்கும் ஜனங்கள் சொல்லமுடியாது. எனவே இந்த நோட்டுகளைக்கொண்டு ஜெர்மன் சர்க்கார் உள்நாட்டுக் கடனை யெல்லாம் கொடுத்துவிட்டது. இந்தக் கடன்கள் தீர்ந்தன. ஆனால் இவ்விதம் காகிதப் பணம் பெருகியதால் ஏற்பட்ட நிலைமை என்ன? இந்தியாவில் இன்று ரூபாய் மதிப்பை இழந்திருக்கும் நிலைமை எவ்வளவோ பரவாயில்லை என்று சொல்லலாம். ஜெர்மன் மார்க்கின் மதிப்பு அவ்வளவு படுமோசமான நிலைமையை அடைந்தது. ஒரு தபால் ஸ்டாம்பு வாங்குவதானால் லட்சம் மார்க் கொடுத்தால்தான் கிடைக்கும். 1923-ல் ஜெர்மனியில் ஒரு ரொட்டித் துண்டின் விலை 42,800 மார்க். 20,500 மார்க் கொடுத்தால்தான் படிக்க ஒரு தினசரி பத்திரிகையை ஒருவன் வாங்க முடியும். இந்த நிலைமையால், மாதா மாதம் குறிப்பிட்ட தொகையைச் சம்பளமாக வாங்கிப் பிழைத்தவர்கள் பட்டினி கிடக்கவேண்டியதாயிற்று. ஜெர்மனி முழுதும் இதனால் மக்களின் துயரங்கள் அதிகரித்தன.

ஜெர்மன் சர்க்கார் பணத்தைப் பெருக்கியதால் ஜனங்கள் தாங்கமுடியாத கஷ்டத்திற்கு ஆளானார்கள் என்பது உண்மை. எனினும் இப்படிச் செய்ததனாலேயே உள்நாட்டுக் கடன்களை அந்தச் சர்க்கார் சுலபத்தில் தீர்க்க முடிந்தது. ஆனால் இந்த வித்தையால் ஜெர்மனி, வெளிநாட்டுக் கடனை தீர்த்துவிட முடியாது. கொடுக்கவேண்டிய நஷ்டஈட்டுத் தொகைக்கு ஜெர்மன் நோட்டுகளை கொடுத்தால் யாரும் வாங்கிக்கொள்ளமாட்டார்கள். ஒரு நாட்டுச் சர்க்கார் போடும் பணம் அந்த நாட்டில்தான் செல்லும்.

ஜெர்மனி நஷ்ட ஈட்டுத் தொகையைக் கொடுத்துத் தீர்க்கவோ, மற்ற தேசங்கள் தாங்கள்பட்டிருந்த கடன்களைத் தீர்க்கவோ முடியாது போனதிலுள்ள நுட்பமெல்லாம் இதிலேயே அடங்கியிருக்கிறது.

ஜெர்மனியால் நஷ்ட ஈட்டுத் தொகையைச் செலுத்த முடியவில்லை. வசூலாகும் இந்தத் தொகையைக்கொண்டு அமெரிக்கக் கடனைத் தீர்ப்பதென்ற நம்பிக்கையிலிருந்த மற்ற தேசங்கள் என்ன செய்யும்? ஐரோப்பாவில் பொருளாதார நெருக்கடி முற்றி தன் கடன் வசூலுக்கு ஆபத்து வந்துவிடுமோ என்பது அமெரிக்காவின் பயம். ஆகையால் ஜெர்மனிக்கு அமெரிக்கா கடன் கொடுத்தது. கடன் வாங்கிய இந்தப் பணத்தை, தான் தரவேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகைக்காக நேசநாடுகளுக்கு ஜெர்மனி கொடுத்தது. நேசநாடுகள் அமெரிக்காவினிடம் வாங்கியிருந்த யுத்தக்கடனைத் தீர்ப்பதற்கு அந்த தொகையைக் கொடுத்தார்கள். ஜெர்மனிக்குக் கடன்கொடுத்த அமெரிக்கா, வாஸ்தவத்தில் பணத்தையோ, பொருளையோ தரவில்லை. அமெரிக்கா, தன் கணக்கில் ஜெர்மனிமீது பற்று எழுதிக் கொண்டது. ஜெர்மனியோ, அந்தத் தொகையைத் தன் கணக்கில் வரவு வைத்துக்கொண்டு, தான் நஷ்ட ஈடு தரவேண்டிய நாடுகளின் கணக்கில் பற்று எழுதியது. அந்த அந்த நாடுகள், அமெரிக்காவுக்குக் கடனைக் கொடுத்ததாகக் கணக்கு எழுதின. இவ்விதம் நஷ்ட ஈட்டுத் தொகை தருவதும், கடன் கொடுப்பதும் காகிதத்தில் சுலபமாகக் கொஞ்ச காலம் நடந்து வந்தது

1929-க்கு மேல் இந்தச் சுலபமான முறை பலிப்பதாக இல்லை. வார்சேல்ஸ் ஒப்பந்தம், ஜெர்மனிக்குச் செய்யப்பட்ட பெரிய அநீதி என்ற ஆத்திரம் அந்த நாட்டு மக்களிடையே அதிகரித்தது. யுத்த நஷ்ட ஈடு தருவதற்குச் சம்மதிப்பதோ, கொடுத்துக்கொண்டிருப்பதோ அவமானம் என்ற கிளர்ச்சி கிளம்பியது. இதல்லாமல் ஜெர்மனியில் மாத்திரமேயன்றி எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்காவிலும் புதிய கஷ்டம் ஒன்று தோன்றியது. தொழிற்சாலைகள் மிகுந்து சரக்குகளின் உற்பத்தி அதிகரித்தது. ஆனால் வாங்குவாரோ இல்லை. வாங்குவோர் குறைந்த

தால் சரக்குத் தேங்கி அதனுல் உற்பத்தியும் தானே குறைந்தது. ஆகவே தொழிற்சாலைகளில் வேலை குறைந்து வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியது. எங்கும் பணக்கஷ்டம்; பொருளாதார நெருக்கடி. அமெரிக்காவிலும் அதே கதிதான். ஆகையால் ஜெர்மனிக்கு இனியும் அமெரிக்கா கடன் கொடுத்துக் கொண்டே போக முடியாத நிலைமை வந்தது. கடன் கொடுப்பதை அமெரிக்கா நிறுத்திவிட்டது. ஜெர்மனியோ, நஷ்ட ஈட்டுத் தொகை தருவதையும் நிறுத்திவிட்டது.

நஷ்ட ஈட்டுத் தொகை வசூல் ஆகாததனுல் நேச நாடுகளால் அமெரிக்காவுக்குக் கடனை தர முடியவில்லை. அமெரிக்காவோ, தன்னிடம் வாங்கிய கடனை ஐரோப்பிய நாடுகள் கொடுத்துத் தீரவேண்டுமென வற்புறுத்தியது. 'நஷ்ட ஈட்டுத் தொகையையும் யுத்தக் கடனையும் ஒன்ருகவைத்தே வசூலைப்பற்றிக் கவனிக்கவேண்டும்; நஷ்ட ஈட்டுத் தொகை வரவில்லையானுல் கடனைக் கொடுப்பதும் இல்லை.' இதுதான் அமெரிக்காவினிடம் கடன்பட்டிருந்த ஐரோப்பிய நாடுகளின் கட்சி. இதற்கு அமெரிக்கா சம்மதிக்கவில்லை. உடனே எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் அமெரிக்கா மீது ஆத்திரமான கூக்குரல்கள் எழுந்தன. நக்ஷத்திரையன் கிட்டி கட்டிக் கடனை வசூலிக்க முயன்ற முறையில் அமெரிக்கா அக்கிரமமாக நடக்கிறது என்ருர்கள். கடனை மறுக்க, பிரான்ஸ் மற்ெருரு காரணத்தையும் சொல்லிற்று. 'வாங்கிய கடன் யுத்தத்திற்காகச்செலவிடப்பட்டிருக்கிறது; யுத்தமோ எல்லோருடைய பொதுவான நன்மையையும் உத்தேசித்து நடந்த காரியம்; ஆகையால் சாதாரணக் கடனைப்போல யுத்தக்கடனை மதிப்பது தப்பு' என்பதே பிரான்ஸின் வாதம்.

கடனை செலுத்தியே ஆகவேண்டும் என வற்புறுத்திய அமெரிக்கா, ஒரு முக்கிய வாதத்தை கூறியது. 'பிரிட்டன், பிரான்ஸ், இதாலி ஆகிய நாடுகள் யுத்த தளவாடங்களை அதிகரித்துக்கொள்ளுவதற்கு ஏராளமான தொகையைச் செலவிடுகின்றன; இந்தச் செலவு அடுத்த யுத்தத்திற்கு ஆயத்தமாகிறது; இச்செலவை நிறுத்தி அப் பணத்தைக்

கொடுத்தால் கடன் தானே தீரும், யுத்தமும் வராது; எனவே கடனை வசூலிக்கவேண்டியது அவசியம்' என்பது அமெரிக்காவின் கட்சி. இவ்விதம் தகராறு முற்றிக்கொண்டே வந்தது. 1931-ல் அமெரிக்க பிரஸிடென்ட் ஹூவர், கடன் வசூல் தவணையை நிறுத்தி ஒரு வருஷத்திற்குத் தள்ளிவைத்தார். அடுத்த வருஷம் லாஸேனில ஒரு மகாநாட்டைக் கூட்டி, ஜெர்மனி தரவேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகையைக் குறைத்தார்கள். இப்படிச் செய்தால், அமெரிக்காவும் தனக்குச் சேரவேண்டிய கடன் தொகையைக் குறைக்கும் என்பது கடன்பட்ட நாடுகளின் எண்ணம். ஆனல் அது பலிக்கவில்லை. அமெரிக்கா குறைக்க மறுத்துவிட்டது. பிரான்ஸ் முதலிய பல நாடுகள் கடனைக்கொடுகக மறுத்துவிட்டன. பிரிட்டன் மாத்திரம், அதிக ஆட்சேபனைகளுக்குப் பிறகு, "இதுதான் கடைசி" என்று சொல்லி ஒரு தவணையைச் செலுத்தியது. 1933 ஜூனில் தனது நல்லெண்ணத்திற்கு அறிகுறியாக சொற்பத் தொகையை மாத்திரமே பிரிட்டன், அமெரிக்காவுக்கு கொடுத்தது. பிறகு எதுவும் செலுத்தவில்லை. கடனும் காலாவதியான மாதிரிதான்.

இந்தக் கடன் விவகாரத்தில் நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டிய விஷயங்கள் இரண்டு. ஜெர்மனியிடம் ஜயித்த நாடுகள் வசூலிக்க முயன்றது நஷ்ட ஈட்டுத் தொகையேயன்றி, பட்ட கடனையல்ல. ஜெர்மனி தோற்றதாலேயே நஷ்ட ஈடு கேட்க இந்த நாடுகளுக்கு முடிந்தது. ஜெர்மனி ஜயித்திருந்தால் நஷ்ட ஈடு என்ற பேச்சு எழுந்திருககாது. ஆனல் அமெரிக்கா வசூலிக்க விரும்பிய தொகையின் விஷயம் முற்றிலும் வேறு. நேச நாடுகள் தங்கள் யுத்தச் செலவுக்காக அமெரிக்காவினிடம் கடன் வாங்கின. அந்தச் சமயத்தில் அமெரிக்கா கடன் தர மறுத்திருந்தால் நேச நாடுகள் திண்டாடியிருக்கும். ஜெர்மனியைத் தோற்கடிப்பது சாத்தியமா என்பதும் சந்தேகம் ஆனதாகி யிருக்கலாம். ஆகையால் தான் கொடுத்த கடனைத் திருப்பித் தரும்படியே அமெரிக்கா கேட்டது. தந்த கடனைத் கேட்பது குற்றம ஆகாது. ஆனல் பிரிட்டன் உள்பட எல்லா ஐரோப்பிய நாடுகளும் கடனைத் தர மறுத்தன. "இங்கி

லீஸ்காரன் வாய்ச்சொல் பிராமசரி நோட்டுக்குச் சமம்" என்று பிரிட்டிஷார் பெருமையாகச் சொல்லிக்கொள்ளுவது உண்டு. ஆனால் அப்படிப்பட்ட பிரிட்டிஷாரும் வாங்கிய கடனைத் தர மறுத்திருக்கிறார்கள் என்பது கவனத்தில் வைக்கவேண்டிய முதல் விஷயம்.

கடனைச் செலுத்திவிடுவது என்ற நல்லெண்ணம் இருந்திருந்தாலும் அது சாத்தியமா என்ற நிலைமையும் அச்சமயம் இருந்தது உண்டு. அது ஏன்? இதுவே கவனிக்க வேண்டிய இரண்டாவது விஷயம். கோவிந்தக் கோனார், கந்தப்பிள்ளையிடம் கடன்பட்டிருந்தார் அல்லவா? அக் கடனைத் தீர்க்க அவருக்கு இருந்த வழிகள் இரண்டு. கடன் தொகைக்குப் போதிய நிலத்தையோ பிற பொருளையோ கந்தப்பிள்ளைக்குக் கொடுத்துவிடுவது முதல் வழி. மற்றோர் மார்க்கம், நிலத்தையோ, இருந்தால் நகை நட்டுகளையோ பிறரிடம் விற்றுக் கடனைத் தீர்ப்பது. கந்தப்பிள்ளையிடம் கடன்பட்டிருந்த கோவிந்தக் கோனாருக்கு மாத்திரமல்ல, கடன்பட்டிருந்த ஐரோப்பிய நாடுகளுக்கும் நியாயமாக இருக்கும் வழிகள் இவையே.

நஷ்ட ஈட்டுத் தொகையைப் பொருளாக வாங்கிக் கொள்ள நேச தேசத்தினர் சம்மதித்திருப்பார்களானால் ஜெர்மனி ஒரு வேளை அந்த தொகையைக் கொடுத்துத் தீர்த்திருக்கும். கொடுத்த கடனைப் பொருளாகத் திருப்பி வாங்கிக்கொள்ள அமெரிக்கா தயாராயிருந்திருந்தால், கடன்பட்ட ஐரோப்பிய நாடுகள் கடனைக் கொடுத் திருக்கக்கூடும். ஆனால், வரவேண்டிய தொகைக்குப் பொருளாக வாங்கிக் கொள்ள யாரும தயாராயில்லை. ஏன்? ஜெர்மனியும் பிரிட்டன் போன்ற ஐரோப்பிய நாடுகளேயன்றி அமெரிக்காவும் தங்களுடைய தேவைக்கு அதிகமான பொருள்களையே அப்போது உற்பத்தி செய்து வந்தன. தேவைக்கு அதிகமாகப் பொருள்கள் மிகுந்தால் விலைவாசி குறைகிறது என்பதை முன்பே கவனித்திருக் கிறோம். ஆகவே விலைவாசி குறையாதபடி தடுப்பதற்குப் பொருள்கள் பெருகுவதையும தடுக்கலானார்கள். அதா

வது உற்பத்தியைக் குறைத்தார்கள். உற்பத்தி குறைந்த தால் தொழிற் சாலைகளில் வேலை குறைந்தது. இதனால் அநேகருக்கு வேலையில்லாத திண்டாட்டம் வந்தது. வேலை யற்றவர்களுக்குக் கையில் காசு இருக்காது. இவர்களால் எந்தப் பொருளையும் வாங்கவும் முடியாது. திரும்பவும் இதனாலே பொருள்களின் தேவை குறைகிறது. ஆகையால் இந்த நிலைமையைச் சமாளிக்க, வெளி நாடுகளிலிருந்து வரும் சரக்குகளுக்கும் தடை வரிபோட்டுத் தடுத்தார்கள். எல்லா நாடுகளும் இந்த முறையைத் தீவிரமாகக் கையாண் டன. வரவேண்டிய கடனுக்கு மாத்திரம் பிறநாட்டுப் பொருளை வாங்கிக் கொள்ளுவதாக இருந்தால் என்ன நேரும்? உள் நாட்டில் இருந்த உற்பத்தியும் குறையும். இதனால் வேலையில்லாத் திண்டாட்டம் இன்னும் அதிகரிக் கும். ஆகவே கடன்வசூலை முன்னிட்டுக்கூடப் பொருளாக வாங்கிக்கொள்ள எல்லா நாடுகளும் மறுத்தன.

பொருளைக் கொடுத்துக் கடனைத் தீர்க்க முடியவில்லை யென்றால் பணமாகத்தான் கொடுக்க வேண்டும். பணமா கத் தருவதானால் அந்தப் பணம் கடன்கொடுத்தவர் உபயோ கிக்கக்கூடியதாக இருக்கவேண்டும். ஒரு நாட்டுப் பணம் மற்றொரு நாட்டில் செல்லாது அல்லவா? பிரிட்டன், கட னைத் தீர்க்க அமெரிக்காவுக்குத் தனது ஸ்டர்லிங் பணத் தைக் கொடுக்கிறதுஎன்று வைத்துக்கொள்ளுவோம். அதை அமெரிக்கா வாங்கிக்கொள்ளாது. வாங்கினாலும் அமெரிக் காவுக்கு இதனால் பிரயோஜனமில்லை. பிரிட்டிஷ் பணத்தை அமெரிக்கா வாங்கிக்கொள்ளுகிறது என்றால் அதை உப யோகிக்க அமெரிக்காவுக்கு இருக்கிற வழி ஒன்றே ஒன்று தான். அப்பணத்தைப் பிரிட்டனுக்குக் கொண்டுபோய் அங்கே பிரிட்டிஷ் சரக்குகளை வாங்கிக்கொண்டு வரலாம். இது மறுபடியும் அமெரிக்காவில் வேலையில்லாத் திண் டாட்டத்தையே வளர்க்கும். ஆகையால் இந்த முறையும் நடக்காத காரியம்.

கடனைத் தீர்க்க அமெரிக்கப் பணமாகவே சம்பாதித்து அமெரிக்காவிடம் பிரிட்டன் கொடுத்து விடலாமல்லவா?

அப்படிக் கொடுத்தால் அமெரிக்கா ஆட்சேபிக்காது. ஆனல் பிரிட்டனுக்கு அமெரிக்கப் பணம் எப்படி கிடைக்கும்? பிரிட்டிஷ்பொருள்களை அமெரிககாவுக்குக் கொண்டுபோய் விற்ருல் அமெரிக்கப் பணம் தானே கிடைத்து விடுகிறது. இது சுலபம். ஆனல் வெளி நாட்டுச் சரக்கு வந்து விற்க முடியாதபடி அமெரிக்கா தடை போட்டிருக்கும்போது பிரிட்டிஷ் சரக்கை அமெரிக்காவுக்குள் கொண்டு போகவேமுடியாத சங்கடந்தான் மீண்டும் குறுக்கிடுகிறது. இதைச் சமாளிக்க மற்றொரு முறையுண்டு. அமெரிக்கா உள்பட எல்லா தேசங்களிலுமே செலாவணியாகக் கூடிய ஒரு வகைப் பணத்தை அமெரிக்காவுக்குக் கொண்டு போய் அதை அமெரிக்கப் பணத்துக்கு விற்றுக் கடனைக் கொடுக்கலாம். இப்படிப்பட்ட சர்வதேசச் செலாவணி உள்ளது தங்கம் ஒன்றே. சில கடன் தவணைகளைத் தர, பிரிட்டிஷ் சர்க்கார் தன்னிடமிருந்த தங்கத்தையே உபயோகித்தது. இதனல் பிரிட்டனின் தங்க இருப்பில் 2 கோடி பவுன் தங்கம் அச்சமயம் குறைந்தது. கடனைத் தீர்க்கப் பிரிட்டன் அமெரிக்காவுக்குத் தங்கத்தைக் கொண்டுபோக வேண்டியிருந்ததே யன்றி இன்று இந்தியாவில் நடப்பதைப்போல் கொள்ளை லாபமடிப்பது அந்த விற்பனையில் பலித்தது இல்லை என்பதும் ஞாபகத்தில் வைகக வேண்டியதாகும்.

தங்கத்தை விற்றே ஐரோப்பிய நாடுகள் கடனைத் தீர்த்திருக்கலாம். ஆனல் அதற்கு வேண்டிய தங்கத்துக்கு எங்கே போகிறது? மற்ற பொருள்களைப்போலவே தங்கத்தையும் வெளியே வாங்கலாம். பண்டங்களை விற்ருல் தானே தங்கத்தை வாங்க முடியும்? பண்டங்களைப் பிற நாடுகளில் விற்க முடியாமலிருக்கும் சங்கடம் இதற்கும் இடையூருகிறது. ஆகையால் கடனைச் செலுத்துவதில் இவ்விதக் கஷ்டங்கள் தோன்றி அமெரிக்கா கொடுத்த கடன்கள் வசூலாகாது போய்விட்டன.

இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கிறிஸ்தவ வேதத்திலிருந்து எடுத்துக்காட்டியிருக்கும் உபமானத்தை இனி

கவனிப்போம். பதினுயிரம் தாலந்து கடன் பட்டிருந்த ஊழியன்மீது மனம் இரங்கி ஒரு ராஜா, அவனை விடுதலை செய்து கடனை மன்னித்து விட்டான். இவ்விதம் மன்னிப்புப் பெற்ற ஊழியன் வெளியே வந்ததும், தன்னிடம் நூறு வெள்ளிப்பணம் கடன்பட்டிருந்த ஒரு சகோதர ஊழியனைக் கடனைத் தந்து விடும்படி கேட்டுக் கழுத்தை நெறித்தான். இதே ஏசுநாதர் சொன்ன உதாரணம.

அமெரிக்காவிடம் பிரிட்டன் மனமாரக் கடன் வாங்கியது. பிரிட்டனுக்கு ஆபத்திருந்த சமயத்தில் அமெரிக்கா கொடுத்து உதவியதே இந்தக கடன். ஆனுல் நியாயமான இந்தக் கடனை மன்னித்து விடும்படியே அமெரிக்காவிடம பிரிட்டன் மன்ருடியது; முடிவில் அமெரிக்காவும் விட்டுக் கொடுத்தது. இந்தியாவும பிரிட்டனுக்குக் கடன் தரவேண்டியிருந்தது. இது நியாயமான கடன் என்று நேர்மையானவர்கள் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆகையால் அனுவசியமாகத் தன் தலையில் சுமத்தியிருக்கும் அந்த நியாயமில்லாக் கடனைப் பிரிட்டன் ரத்து செய்துவிட வேண்டுமென்று இந்தியர் கோரினர். பிரிட்டன் மறுத்தது மாத்திரமல்ல, இதைக் கோருவதே குற்றமென்றது!

இந்தியாவினிடமிருந்து வசூலித்தே தீருவதென்று பிரிட்டன் திடசங்கல்பம் செய்து கொண்ட கடன் என்ன? இந்தியாவுக்கு இந்தக் கடன்பளு வந்ததே பிரிட்டிஷ் சர்க்காரால். அதை விடமுடியாது என்றதும் அந்த பிரிட்டிஷ் சர்க்காரே. இதுதான் இக கடனிலுள்ள பெரிய விசேஷம். வர்த்தகத்தையும் லாபத்தையும தேடி இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி, இங்கிருந்து சுரண்டிக் கப்பலேற்றிய செல்வம் சாமான்யமல்ல என்பதற்குச் சரித்திரமே போதிய சாட்சியம். அது போதாதென்று நாடு பிடிக்கும் வேட்டையில் அந்தக் கம்பெனி இளபபி இந்தியாவை அடிமைப்படுத்தியது. அத்துடன் வெளி நாடுகளைப் பிடிக்கச்செய்த செலவுள்பட இந்தியாவின் தலையில் பெருங் கடனையும் வைத்தது. கம்பெனி வைத்த கடன் விவரம் வருமாறு:

| | பவுன் |
|---|---|
| முதல் ஆப்கன் யுத்தச் செலவு | 1,50,00,000 |
| 2 பர்மிய யுத்தச் செலவுகள் | 1,40,00,000 |
| சீனு, பாரசீகத்தின்மீது படையெடுப்புச் செலவுகள் | 60,00,000 |
| கம்பெனியின் மூலதனம், லாபம், பங்கு முதலியன | 3,72,00,000 |
| சிப்பாய்க் கலகத்தை அடக்க ஆன செலவு | 4,00,00,000 |
| ஆக மொத்தம் பவுன் | 11,22,00,000 |

வெள்ளைக்கார் அல்லாத மக்களை ஆளும் பாரத்தைச் சுமக்கும் பெரும் பொறுப்பை, ஆண்டவன் வெள்ளைக்காரர் தலையில் வைத்திருக்கிறுன் என்று பிரிட்டிஷார் சொல்லிக்கொள்ளுவதுண்டு. பிரிட்டிஷ் கிழக்கிந்தியக் கம்பெனி இந்தப் பொறுப்பை நிறைவேற்றி வைப்பதற்காக இந்தியாவுக்கு ஆரம்பத்தில வரவில்லை. வியாபாரம் செய்து லாபம் சமபாதிக்க வந்தது. ஆனுல் அந்தச் சமயத்தில் இந்தியா, கைத்தொழில் வளர்ச்சியோ, நாகரிக முதிர்ச்சியோ இல்லாத ஏழை, காட்டுமிராண்டி நாடாக இல்லை. வங்காளத்தில் பலாஸோர் என்ற இடத்தின் நிலைமையைப் பற்றி இங்கியாவிலிருந்த கிழக்கிந்தியக் கமபெனி நிர்வாகி 1670 டிசம்பர் 10-ஆந் தேதி, லண்டனிலுள்ள டைரக்டர்கள் கோர்ட்டுக்கு ஒரு கடிதம் எழுதினுர்கள். அறிஞர் ஸ்ரீ ராதா குமுத முகர்ஜி அக்கடிதத்தைத் தமது நூலொன்றில் குறிப்பிட்டிருக்கிறுர். அதன் விவரம் வருமாறு :

"பல ஆங்கிலேய வர்த்தகர்களும் மற்றவர்களும் இங்கு வருஷந்தோறும தங்களுக்கு வேண்டிய கப்பல்களைக் கட்டிக்கொள்ளுகின்றனர். இங்கே சிறந்த தேக்கு மரங்கள் ஏராளமாகக கிடைக்கின்றன. கடலோரததில் நல்ல இரும்பும அதிகமாகக் கிடைக்கிறது. இருமபு வேலை எதுவாக இருநதாலும் சரி, சக்கரம் முதல் பெரிய ஆணிகள், திருகுகள் முதலியவற்றை யெல்லாம் இங்கிருக்கும் சுதேசிகள் ரொமபச் சாயர்த்தியமாகச் செய்

கிறார்கள். கப்பல் கட்டுவதில் மகா சாமர்த்தியசாலிகளானவர்கள் பலர் இங்கிருக்கின்றனர். இவர்களைப் போல சாமர்த்தியமாகக் கப்பல்களைக் கட்டுகிறவர்களை உலகத்தின் வேறு எந்தப் பாகத்திலும் நான் கண்டதில்லை.''

1802-ஆம் வருஷத்தில்கூட, இங்கிலாந்துக்கு வேண்டிய யுத்தக் கப்பல்களெல்லாம் இந்தியாவிலேயே கட்டப்பட்டன என்பதுடன், கப்பல் கட்டுவது எப்படி என்ற மாதிரியையும் பிற விவரங்களையும் இந்தியாவினிடமிருந்தே இங்கிலாந்து கடன் வாங்கிக்கொண்டு போயிற்று என்றும் ஸ்ரீ ராதா குமுத முகர்ஜி ஆதாரங்களுடன் எடுத்துக் காட்டியிருக்கிறார். கைத்தொழிலிலும், செழிப்பிலும் இந்தியா அக்காலத்தில் பெற்றிருந்த மேன்மைக்கு இதைவிட வேறு உதாரணம் அவசியமில்லை. அத்தகைய இந்தியாவின் கைத்தொழில்களைக் கொண்டு இங்கிலாந்து லாபம்பெறக் கிழக்கிந்தியாக் கம்பெனி வழி செய்தது. அதே சமயத்தில் இங்கிலாந்தின் லாபத்திற்காக இந்தியக் கைத்தொழில்களையும் அழித்தது. இது அல்லாமல் இந்தியாவின் செல்வம் சூறையாடப்பட்டிருக்கிறது என்பதற்கும் சரித்திர சாட்சியங்கள் ஏராளமாக உண்டு. இவ்வளவும் செய்த கிழக்கிந்தியக் கம்பெனியின் மூலதனம், லாபம், வட்டியெல்லாம், இந்தியா பிரிட்டிஷ் சர்க்காரின் ஆட்சியின் கீழ் வந்ததும், இந்தியாவின் தலையிலேயே கடனாகச் சுமந்தது.

நாட்டை அடிமைப்படுத்திய அந்தக் கம்பெனியின் ஆட்சியிலிருந்து விடுபட நடந்த சுதந்தரக் கிளர்ச்சியை அடக்குவதற்கான செலவையும் இந்தியாவின் தலைமீதே கடனாகச் சுமத்தினார்கள். போதாக்குறைக்கு, இங்கிலாந்திற்காக நாடு பிடிக்க நடத்திய வெளிநாட்டு யுத்தச் செலவுகளையும் இந்தியாவின்மீதே போட்டார்கள். இது எவ்வளவு தூரம் நியாயமற்றது என்பதற்கு, சர். ஜார்ஜ் வான்கேட் சொன்னதே போதும். அவர் கூறியதாவது :—

''நமது ஏகாதிபத்திய எல்லைக்கு வெளியிலிருக்கும் நாடுகளுடன் ஆசியாவில் நாம நடத்திய யுத்தங்களெல்லாம், இந்திய சர்க்காரின் ராணுவ, பண சகாயத்தைக் கொண்டே நடத்தியிருக்கிறோம. இந்த யுத்தங்களின்

நோக்கம், சிலவற்றில் முற்றிலும் பிரிட்டிஷ் நன்மையையே கருத்தாகக் கொண்டது. மற்றவைகளிலோ இந்தியாவின் நன்மை என்பது மிகச் சொற்பம். பிரிட்டிஷ் சர்க்காரின் கட்டளையின் பேரிலேயே இந்திய சர்க்கார் இந்த யுத்தங்களில் ஈடுபட்டது. ஆகவே இதற்கெல்லாம் பிரிட்டிஷ் மக்களே பொறுப்பாளிகள். இத்தகைய யுத்தங்களில் குறிப்பிடத்தக்கது ஆப்கன் போர். கிழக்கிந்தியக் கம்பெனி டைரக்டர்களைக் கலந்து கொள்ளாமலேயே பிரிட்டிஷ் சர்க்கார இந்த யுத்தத்தில் இறங்கியது. கம்பெனி டைரக்டர்களின் ஆட்சேபணையைப் பொருட்படுத்தாமலேயே இந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் ஈடுபட்டது. எனவே உண்மையில் அந்த யுத்தம் முற்றிலும் பிரிட்டிஷ் யுத்தம். இந்தப் போரின் செலவு முழுவதும் இந்தியாவின் கணக்கில் சேர்க்கப்படக்கூடாது என்று கிழக்கிந்தியக் கம்பெனி சொந்தக்காரர்கள் தீர்மானம் செய்திருந்தும் பிரிட்டிஷ் மந்திரிகள் செலவை இந்தியாவின் பேரிலேயே போட்டார்கள். இந்த அநீதியால் இந்தியாவுக்கு இன்னும் ஒருகோடி அதிகக்கடன் ஆயிற்று. இந்தியாவுக்குக் கொஞ்சங்கூடச் சம்பந்தமில்லாத பாரஸீக யுத்தத்தை பிரிட்டிஷ் சர்க்காரே பிரகடனம் செய்தது. எனினும் இந்திய பணத்தையும பளைகளையும் கொண்டே இந்த யுத்தம் நடத்தப்பட்டது. கடைசியாக இந்த யுத்தச் செலவில் பாதியை மாத்திரமே பிரிட்டன் ஏற்றுக்கொள்ளுவது என்று முடிவு செய்தார்கள். வாஸ்தவத்தில் நமது ஆசிய யுத்தங்களுக்கெல்லாம் பணத்தையும் ஆட்களையும இந்தியாவே தர வேண்டியிருந்தபோதிலும, இந்தியா செய்த உதவிக்குச் சரியான தொகை ஒரு சமயத்திலகூட கொடுக்கபபட்டதில்லை. நமது இந்தியக் கொள்கை ஒரு தலைப்பட்சமானதாகவும் சுயநலமானதாகவுமே இருந்திருக்கிறது என்பதற்கு இவைகளே அசைக்க முடியாத ஆதாரங்கள்.''

இவ்விதம் கிழக்கிந்தியக் கம்பெனி காலத்திய நிர்வாகத்தின் பலனாக இந்தியாமீது 11 கோடி 22 லட்சம் ஸ்டர்லிங் பவுன் கடன் சுமத்தப்பட்டது. அதற்குப் பிறகு, பிரிட்டிஷ் சர்க்காரின் ஆட்சியின்கீழ், கீழ்க்கண்ட மற்றக் கடன்களும் சுமத்தப்பட்டன :

| | | |
|---|---|---|
| வெளி நாட்டு யுத்தங்கள் | ரூ. 37 | கோடி |
| சென்ற மகா யுத்தத்தில் "சம்மானம்" | ரூ. 189 | ,, |
| யுத்தச் செலவு | ரூ. 171 | ,, |
| சில்லறை இனங்கள் | ரூ. 20 | ,, |
| பர்மா சம்பந்தமாக | ரூ 82 | ,, |
| *ரிவர்ஸ் கவுன்ஸில் நஷ்டங்கள் | ரூ. 35 | ,, |
| ரயில்வேக்கள் | ரூ. 83 | ,, |
| மொத்தம் | 617 ரூ. | கோடி |

இந்தியாவில் ரயில்வேக்களைப் போட ரூ. 83 கோடி இந்தியாவின் பேரில் கடன் சுமத்தப்பட்டிருந்தது. இது, மூலதனச் செலவு என்றும், இந்தியாவின் ரயில்வேபோக்குவரத்து வசதியை அதிகபபடுத்தச் செய்யப்பட்ட லாபகரமான செலவு என்றும் சொல்லப்படலாம். ஆனால் ரயில்வேக்கள் யார் நன்மைக்காகச் போடப்பட்டன? 'இந்தியாவின் அழிவு' என்ற நூலில் வில்லியம் டிக்பி இதற்கு சரியான பதில் கூறியிருக்கிறார்:

"விளை பொருள்களைத் தேசத்தின் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குக் கொண்டுபோக ரயில்வேக்கள் உதவியாக இருந்தன. ஆனால் விளைவை ரயில்வேக்கள் அதிகரிக்கவல்லை. விளைந்தவைகளைத் தேசத்திற்கு வெளியே கொண்டுபோய்விட்டன......இதில் கிடைத்த லாபத்தில் மிகச் சொற்பப் பகுதியே இந்தியருக்குப் போயிற்று. ஆனால் பெரும் பகுதி லாபம் இந்தியாவுக்குத் தீம்பாயிற்று. இங்கிலாந்தில் மேலும் மேலும் ஏற்பட்டுவந்த மாறுதல்களுக்கு, அதிகப்படியான விளைபொருள்களும் உற்பத்திச் சாமான்களும்

* இந்தியாவுக்கு இங்கிலாந்திருக்கும் வர்த்தகர் முதலியவர்கள் பணம் அனுப்ப வேண்டியிருந்தால் ஸ்டாலிங்கை இந்தியா மந்திரி காரியாலயத்தில் கொடுத்து அப்பொழுதிருக்கும் நாணய மாற்று விகிதப்படி ரூபாய்க்கு உண்டியலை வாங்கி அனுப்புவார்கள். இந்த உண்டியல்களுக்கு கவுன்ஸில் பில்ஸ் என்று பெயர். இங்கிருந்து இங்கிலாந்துக்கு பணம் அனுப்பவேண்டியவர்கள் இந்திய சர்க்காரிடம் ரூபாயைக்கட்டி ஸ்டர்லிங்குக்கு உண்டியலை வாங்கி அனுப்புவது உண்டு. இதற்கே ரிவர்ஸ் கவுன்ஸில்ஸ் என்பது. இந்த நாணய மாற்று உண்டியில் தருவதில ஏற்பட்ட நஷ்டங்கள்.

தேவைப்பட்டு வந்தன. இதில் ஒருபகுதி ரயில்வேக்கும் தேவையாயிற்று. அதே ரயில்வேக்களே இந்தியாவின் நாசத்துக்கும் க்ஷாமத்திற்கும் காரணமாயிருந்து விளை பொருள்களையெல்லாம் வெளியில் கொண்டுபோய்விட உதவியாக இருந்தன."

இந்தியாவின்மீது சுமத்தப்பட்ட கடன்பளுவின் காதகக் கதையைப்பற்றிய அதிக விவரம் இங்கு அவசியமில்லை. காராச்சி காங்கிரஸில் காரியக் கமிட்டி இந்த "தேசீய கடனைப்" பரிசீலனை செய்ய நியமித்த கமிட்டியார், அப்பொழுதிருந்த கடன் 1,100 கோடிக்கு அதிகமென கண்டனர். இதில் பெரும் பகுதி அக்கிரமமாக சுமத்தப்பட்டதால் அதைப் பிரிட்டன் ரத்துசெய்ய வேண்டுமென்றும் சிபார்சு செய்தார்கள்.

போன மகா யுத்தத்தில் அமெரிக்காவினிடம் நியாயமாகப் பெற்ற கடனைப் பிரிட்டனுள்பட பல ஐரோப்பிய நாடுகள் கொடுக்க மறுத்துவிட்ட வரலாற்றை இந்த அத்தியாயத்தின் முற்பகுதியில் கவனித்தோம். ஆனல் அதே பிரிட்டன், அநியாயமாக இந்தியாவின்மீது சுமத்தப்பட்டிருந்த கடனை ரத்துசெய்ய மறுத்தது. கடனைத் தள்ளித் தரவேண்டுமென்று கேட்பது ராஜத்துரோகம என்று கூறவும் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளின் வாய் கூசவில்லை. நியாயத்தைக் கேட்க அடிமை நாட்டுக்கு உரிமை ஏது? இந்தியா, வட்டியும் முதலுமாகக் கொடுத்துக்கொண்டே வந்தது. கொடுத்தது எல்லாம் போக, பிரிட்டனுக்குத் தரவேண்டியது என்பதாக இந்தியாவுக்கு இந்த யுத்தத்தின் ஆரம்ப காலத்தில் ரூ. 469 கோடி இருந்தது. இந்தியாவுக்கு லண்டனில் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் மூலதனத்தைக் கொண்டு இக்கடனை அநேகமாகத் தீர்த்திருக்கிறோம்.

இந்தக் கடனைத் தீர்க்கும் விஷயத்திலும் இந்தியா அதிக லாபம் எதையோ அடைந்துவிட்டதென்றும் பிரிட்டிஷார் பிரசாரம் செய்கிறார்கள். சேர்ந்த ஸ்டர்லிங் மூலதனத்தைக்கொண்டு இந்தியாவுகிருந்த ஸ்டர்லிங் கடனைத் தீர்த்திருக்கிறோம. இதற்குப் பதிலாக இந்தியாவிலேயே ரூபாய்க் கடனைச் சர்க்கார் வாங்கியிருக்கிறது. இக் கடனுக்கு

வட்டி வகையில் போகும் பணம் இனி இந்தியாவில் மிஞ்சும். இவ்வகையில் இது இந்தியாவுக்கு ஒரு லாபமே என்பதில் சந்தேகமில்லை. ஆனால் லாபப் புரளி செய்கிறவர்கள், இந்தக் காரணத்தை சொல்லவில்லை. பிரிட்டனுக்குத் தன் சரக்குகளை இந்தியா அதிக விலைக்குவிற்று அதன மூலம் கடனைக் கழித்திருக்கிறது என்கிறார்கள். இந்த பிரசாரமே சகிக்க முடியாதது.

இந்தியா, பிரிட்டனுக்குத் தன் சரக்குகளை அதிக விலைக்கு விற்கிறது என்பது கட்டுக்கதை என்பதை முன்னாலேயே எடுத்துக் காட்டியிருக்கிறோம். அப்படியே அதிக விலைக்கு விற்றது என்றே வைத்துக்கொள்ளுவோம். இதில் என்ன தப்பு? இந்தியச் சரக்குகளை அதிக விலைக்கு வாங்கியே தீரவேண்டுமென்று இந்தியர், படையைத் திரட்டி வைத்துக்கொண்டு, பிரிட்டிஷ் சர்க்காரை மிரட்டவில்லை. வயிற்றுக்கு வைததிருப்பதாயிற்றே என்பதைக்கூட மறந்து இநதியர்கள் அவற்றை விற்குபபடிச் செய்யவேண்டுமானால், அதிக விலை வருகிறது என்ற ஆசையைக் கிளப்பவேண்டும். இதற்காக, பிரிட்டிஷ் சர்க்காரின் சார்பில இநதிய சர்க்கார் சில பொருள்களின் விலையை ஏற்றியிருக்கலாம். அதறகு இந்தியர் ஜவாப்தாரிகளாக முடியாது. மேலும் கொஞ்சம நிலத்தை விற்றே கடனை அடைத்துவிடுவது கோவிந்தக்கோனுக்கு முடிந்ததென்றால் வாய்த்த ஒரு சந்தர்ப்பமே அதற்குக் காரணம. கண்டிராக்டர் நாயுடுவிடம் பணம் பெருகியிருந்ததும் இதற்கு முக்கிய காரணம. அதே போல சில பொருள்களின் விலையைப் பிரிட்டிஷ் சர்க்கார் அதிக விலைகொடுததது வாங்கியதென்றால், இந்திய சர்க்கார் அதற்காகப் பணத்தைப் பெருககியதும், பிரிட்டிஷ் சர்க்காரின் அவசரத் தேவைகளுமே அதற்குக் காரணங்கள். இவற்றால் இந்தியர் பட்டினியையும் மற்றும் பல கஷ்டங்களையும் அனுபவித்து வரும்போது, அக்கிரமமாகச் சுமந்த கடனைத் தீர்த்திருககும்போது, இதிலும் இந்தியாவுக்கு ஏதோ லாபம் உண்டு என்று சொலலுவது உலகத்தை ஏமாற்றுவதற்கே யல்லாமல் உண்மையலல.

## நிதியின் கதி என்ன?

1944 மார்ச் கடைசியுடன் இங்கிலாந்தில் இந்தியாவுக்கு ரூ 950 கோடிக்கு ஸ்டர்லிங் நிதி சேர்ந்திருப்பதைக் கண்டோம். இது சேர்ந்த விதத்தையும் கவனித்தோம். யுத்தத்தின் காரணமாக பிரிட்டனுக்கு இந்தப் பண வசதி அவசியமாயிற்று. அந்த அவசியத்தை, தன் எஜமானனான பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்திய சர்க்கார் செய்து கொடுத்திருக்கிறது. ஆகையால் இது, பிரிட்டனுக்கு இந்தியா செய்து கொடுத்த வசதியால், உதவியால் சேர்ந்த தொகை. இதனால் இந்தியா பெற்ற லாபம் எதுவும் இல்லை என்பதையும் பார்த்தோம். லாபத்துக்குப் பதிலாக இந்தியர் சொல்ல முடியாத துன்பங்களையே அனுபவித்து வருகின்றனர். எனவே இந்தியரின் துன்பங்களைப் பொருட்படுத்தாமல் பிரிட்டனுடைய நன்மையை முன்னிட்டு நடந்த ஒரு காரியத்தினாலேயே இத்தொகை சேர்ந்திருக்கிறது. பிரிட்டிஷ் தாராளமோ, நல்லெண்ணமோ இதில் கரைபுரண்டு ஓடியிருக்கிறது என்று சொல்வதற்கு எவ்வித நியாயமும் இல்லை.

நிதி சேருவது நல்லது. ஆனால் எப்பொழுது? சேரும் நிதியால் ஒருவனுக்குத் தொந்தரவு இல்லாதிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது நல்லது. ஆனால் இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதியால் இந்தியருக்குத் தொந்தரவுகளே அதிகரித்து வருகின்றன. ஸ்டர்லிங் நிதி பெருகப் பெருகப் பட்டினியும், பட்டினிச் சாவுகளும் பிற கஷ்டங்களும் இந்தியாவில் பெருகிக்கொண்டு வருவதும் பகிரங்கமான உண்மை. ஆகையால் சேர்ந்த நிதி இனி என்னவாகும் என்பதைவிட, இனியும் இந்நிதி பெருகாமல் இருந்தால் போதும் என்றே கவலைப்பட வேண்டியதாகிறது. இதற்குள் இந்த ஸ்டர்லிங் நிதி ரூ. ஆயிரம் கோடிக்கு வந்திருக்கும். அவ்வளவுடனாவது நிற்குமா என்பது இந்தியர் ஆவல். ஆனால் நிற்காது என்று நிதி மெம்பா இந்தியச் சட்டசபையில் பட்டவர்த்தனமாகச் சொல்லிவிட்டார். ரூ. 1000 கோடியுடன் ஸ்டர்லிங் நிதியை

நிறுத்தி ஒரு கட்டுத் திட்டத்திற்குக் கொண்டு வந்துவிடுவது நேசதேச யுத்த முயற்சிக்குப் பாதகம் அளிக்ககூடியது என்கிருர் ரெய்ஸ்மான். எனவே ஸ்டர்லிங் நிதியின் வளர்ச்சி ஆயிரம் கோடியுடன் நிற்காது. யுத்தம தொடர்ந்து நடந்து கொண்டு போகப்போக இது இரண்டாயிரம் கோடியும ஆகிவிடலாம்.

இந்தியாவினிடம் பிரிட்டன் பட்டிருக்கும் வட்டியில்லாக் கடன் இது. நோவாமல் பிறரை ஏய்த்துச் சமபாதித்துக் கடன் கொடுத்தவனுக்குப் பணம பிரமாதமாகத் தோன்ருதிருககலாம. கடன் வசூலாகுமா என்பதைப் பற்றி அவன கவலைப்படாமல் இருககக்கூடும். 'திருட்டுச் சொத்துக்குத் தொம்பரை மரக்கால்' என்பார்கள். கொள்ளை லாபம் அடித்தவர்களுக்கு, அந்தப்பணத்தில் ஒரு பகுதி வந்தாலும போனலும ஒரு பொருட்டல்ல. இங்கிலாந்தில இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, ஏய்த்துச் சேர்த்த சொத்தன்று கொள்ளை லாபமடித்துக் கூட்டிவைத்த நிதியுமல்ல. ரத்தத்தைச் சிந்தி, கண்ணீர் விட்டுச் சேர்த்த நிதியே இது இருக்கும் கஷ்டத்தை மறந்து, எதிர் காலத்திலாவது சுகம இருக்காதா என்று நம்புவது மனித சுபாவம். சேர்ந்த ஸ்டர்லிங் நிதியால் வருங்காலத்திலாவது கொஞ்சம சுகம் ஏறபடாதா என்று எதிர்பார்த்து இந்தியர் ஏங்கியிருக்கிருர்கள். ஆகையால் இந்த நிதி விஷயத்தில யாரும் அலட்சியமாக இருந்து விட முடியாது. இந்த நிதியின் கதி இனி என்னவாகும என்பதைப்பற்றி ஒவ்வோர் இந்தியரும் கவலைப்படுவதும நியாயம்.

யுத்தத்திற்குப் பிறகு இந்தியாவில் ஏற்பட வேண்டிய பொருளாதார அபிவிருததித் திட்டத்திற்கு இந்த ஸ்டர்லிங் நிதி உபயோகிக்கப்படும என்கிறது இந்திய சர்க்கார். இன்னும பலரும் இதையே சொல்லி வருகிருர்கள். ஸ்ரீ பிர்லா போன்ற முதலாளிகள், இந்தியாவின் வருங்கால சுபிட்சத்திறகு என்று சொல்லி ரூ. பத்தாயிரம கோடி செலவு கொண்ட 15 வருஷத் திட்டமொன்றை தயாரித்திருககிருர்கள். இந்தத் திட்டம நிறைவேற, ஸ்டர்லிங் நிதி ஆயிரம் கோடியும உதவும் என்பது இவர்கள் போட்

டிருக்கும் கணக்கு. சட்ட சபைகளிலே யன்றி வர்த்தக சம் மேளனக் கூட்டங்களிலும் ஸடர்லிங் நிதியைப பற்றிய பேச்சே இன்று அதிகமாயிருக்கிறது. இந்த நிதி விஷ யத்தில் இந்தியருக்கு இருக்கும கவலை மாத்திரமல்ல, அது உருப்படியான உதவியாக இருக்க வேண்டுமென்பதில் எல்லோருக்கும் இருக்கும அக்கரைக்கே இவைகளெல் லாம் அறிகுறிகள்.

ஸ்டர்லிங் நிதி, பிரிட்டனிடமிருந்து இந்தியாவுக்குச் சேர வேண்டிய கடன் என்று சொன்னோம். கொடுத்த கடன், அவசியமான காலத்தில் அவதியில்லாமல் வசூலா ஞல், அது ஒரு நல்ல நிதி. கடன் வாங்கியவன் வம்பு பேசி ஞல் வசூலாவதே துர்லபம் கடன் காலாவதியாஞலோ இருந்ததும் போய், பெரிய ஏமாற்றமும் உண்டாகிறது. கை, மனிதனுக்கு அத்தியாவசியமான அவயவம். கை அநேக நல்ல காரியங்களைச் செய்யும். தீமைக்கும் பயன் படலாம். கை கண்ணைத் துடைக்கும்; அதே கை கண்ணை யும் குத்தலாம்; கழுத்தையும் அறுக்கும். கடனும் அப் படியே. கொடுத்த கடனே பலருக்குக் கழுத்தறுப்பாக முடிந்திருக்கிறது என்பதும் உலகானுபவம். ஆகவே பிரிட்டனிடமிருந்து வரவேண்டிய ஸ்டர்லிங் நிதி என்ன வாகும் என்பதைக் கவனிக்கும் முன்னர், கடனிலுள்ள கஷ்டங்களையும் ஞாபகத்தில வைப்பது நல்லது.

சென்ற மகாயுத்தத்தின் காரணமாக அமெரிக்காவி னிடம் பிரிட்டனுள்பட பல ஐரோப்பிய நாடுகள் கடன் பட்ட வரலாற்றை முந்திய அத்தியாயத்தில் ஆராய்ந் தோம். பிரிட்டன் போன்ற நாடுகள், பட்ட கடனைக் கொடுத்துவிட முயன்றன ஆனால் முடியவில்லை. ஏன் முடியவில்லை என்பதே இப்பொழுது ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டிய முக்கிய விஷயம். ஒரு நாட்டின் பணம் அந்த நாட்டுக்கு வெளியில் செல்லாதல்லவா? எனவே ஒரு தேசம் மற்றொரு நாட்டினிடம் பட்ட கடனைத் தீர்க்க வேண்டுமானல் அதற்கு இருக்கும ஒரே முக்கிய வழி, பொருளாகக் கொடுத்துக் கடனை தீர்ப்பது. இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங்கைப் பிரிட்டன்கொடுத்துத் தீர்ப்

பதானல் அதற்கு இருக்கும் சுலபமான வழியும் பொரு ளாகக கொடுப்பதே. அமெரிக்காவுக்கு இவ்விதமே பொரு ளாகக் கொடுத்து, கடனைத் தீர்க்க ஐரோப்பிய நாடுகள் தயாராயிருந்தன. ஆனல் வாங்கிக்கொள்ள அமெரிக்கா மறுத்துவிட்டது. அமெரிக்கா மறுத்ததற்கு முக்கிய கார ணம ஒன்றே. அமெரிக்காவில், அதன் தேவைக்கு அதிக மான பொருள்கள் உற்பத்தியாயின. பொருள்கள் அதிகம் இருக்கையில் வெளியிலிருந்து இன்னும்அதிகப்பொருள்கள் வந்தால் உள்நாட்டு உற்பத்தி குறையும். இதனல் அமெரிக் கரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் பெருகும். இதற் காகவே பொருளாக வாங்கிக்கொள்ள அமெரிக்கா அப் போது மறுத்தது. இந்தியாவுக்கு இருக்கும் ஸ்டர்லிங் நிதி யைக் கொடுத்து பிரிட்டன் தீர்ப்பதாக இருந்தால், இந்தியா வுக்குப் பிரிட்டன் பொருளாகத்தான் தரவேண்டும். ஆனல் பிரிட்டிஷ் பொருள்கள் இந்தியாவுக்கு வருவதால் இங்கு ஏற்படக்கூடிய நிலைமை என்ன? அமெரிககா, தன் நாட் டுக்கு எந்த வேலையில்லாத் திண்டாட்டமும தீமையும் விளையும் என்று அஞ்சியதோ அந்தத் தொல்லைகளே இந்தி யாவுக்கும் சம்பவிக்குமமல்லவா? ஆயினும் சுபிட்சத்திற்கு வழியுண்டா? பிரிட்டன் இந்தியாவுக்கு என்ன பொருளைத் தரப்போகிறது என்பதையே இது பெரும்பாலும் பொருத் திருக்கிறது. ஆனல் எந்தப் பொருளும் வேண்டாம் என்று அமெரிக்கா சொன்னதைப்போல இந்தியாவும் சொல்ல வில்லை.

இந்தியா வாங்கிக்கொள்ளத் தயாராக இருக்கும் பொருள்கள் எவை? இதைக் கவனிக்கும் முன்னர் இந்தியா வுக்கும் அமெரிக்கா, பிரிட்டன் போன்ற மற்ற நாடுகளுக் கும இருக்கும் வித்தியாசத்தை நாம தெரிந்துகொள்ள வேண்டும. இந்தியா பெரிய நாடு; 40 கோடி மக்களைக் கொண்ட தேசம். இயற்கை வளமுண்டு. சுபிட்சமாக வாழ வசதிகளும் ஏராளமாக இருக்கின்றன. என்றாலும் இந் தியா ஏழை நாடாகவே இருக்கிறது. இந்தியரின் ஏழ்மை நிலை எவ்வளவு மோசமானதாக இருககிறதென்பதை ஒவ்வொரு தேசத்தினரின் சராசரி வருஷ வருமானப்புள்ளி விவரம் தெளிவாக்குகிறது.

| நாடு | ஒருவரின் வருஷ வருமானம் | நாடு | ஒருவரின் வருஷ வருமானம் |
|---|---|---|---|
| அமெரிக்கா | ரூ. 1,406 | பிரான்ஸ் | ,, 621 |
| கானடா | ,, 1,038 | ஜெர்மனி | ,, 603 |
| பிரிட்டன் | ,, 980 | ஜப்பான் | ,, 218 |
| ஆஸ்டிரேலியா | ,, 792 | இந்தியா | ,, 65 |

ஓர் அமெரிக்கரின் சராசரி வருஷ வருமானம் ரூ. 1,406 என்றால் ஓர் இந்தியரின் வருமானமோ ரூ. 65. குறைந்த வருமான மிருப்பதால் ஏழ்மை மிகுந்திருக்கிறது. இதனால் இந்தியரின் ஆயுள் குறைகிறது. மற்ற நாட்டினரைவிட இந்தியர் எவ்விதம அற்பாயுளில் மடிகிறார்கள் என்பதையும் பார்ப்போம். இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் சராசரி வயது 62. ஜெர்மனியிலும் சுவீடனிலும் 63 நியூஜிலாந்தில் 60. ஜப்பானியரோ சராசரி 47 வயது வாழ்கிறார்கள். ஆனால் இந்தியரின் சராசரி வயதோ 27! ஆயிரம் பேருக்கு வருஷத்தில் 11 பேர் வீதம் அமெரிக்காவில் சாகிறார்கள். இங்கிலாந்தில 12 பேர் வீதமும் ஜப்பானில் 17 பேர் வீதமும் மரணமடைகின்றனர். இந்தியாவிலோ 22 பேர் வீதம மடிகின்றனர். இவ்விதம் அற்பாயுளில் அதிகம பேர் இந்தியாவில யமனுக்குப் பலியாவதற்கு முக்கிய காரணம் இந்தியாவின் ஏழ்மை நிலையே.

இந்திய ஜனத்தொகையில் 100-க்கு 80 பேர் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கின்றனர். அப்படி இருந்தும் வருமானம் போதாமல், வயிற்றுக்கில்லாததால் அதிகமபேர் சாகிறார்களென்றால், அதிக வருமானத்துக்கு வழிவேண்டும் என்று ஏற்படுகிறது. வருமானத்துக்கு உள்ள இரு வழிகள் விவசாயமும் கைத்தொழிலும். விவசாயம் வருமானத்திற்குப் போதவில்லை என்பதிலிருந்து கைத்தொழில விருத்தியானால் ஒழிய இந்தியர் சுபிட்சம் அடைய முடியாது என்றாகிறது. அமெரிக்கா, பிரிட்டன், ஜபபான்போன்ற நாடுகளின் சுபிட்சத்திற்குக கைத்தொழில் வளர்ச்சியே காரணம. இதனாலேயே ரூ 10 ஆயிரம கோடிக்குத் திட்டம் வகுத்திருப்பவர்களும், இந்தியாவுக்குக் கைத்தொழில் வளர்ச்சியே முக்கியம் என்று வற்புறுத்துகின்றனர். இந்தியாவுக்குப் பிரிட்

டனிலிருக்கும் ஸ்டர்லிங் நிதி, இந்தியாவின் கைத்தொழில் வளர்ச்சிக்கு உதவுவதாக இருந்தால் அதனால் க்ஷேமம் உண்டு. ஆனால் அப்படி உதவுமா என்பதுதான் இப்பொழுது கேள்வி.

கைத்தொழிலில் இந்தியா அபிவிருத்தியடைய ஸ்டர்லிங் நிதி பயன்படுவதாக இருந்தால், அந்த அபிவிருத்திக்கான பொருள்களை மாத்திரமே பிரிட்டன் இந்தியாவுக்குத் தரவேண்டும். கைத்தொழிலும், நமக்குத் தேவையான பொருள்களின் உற்பத்தியுமே இத்தேசத்தில் பெருக வேண்டுமானால் இங்கே தொழிற்சாலைகள் அதிகரிக்கவேண்டும். அவற்றுக்கு வேண்டிய யந்திரங்கள் இந்தியாவுக்குத் தேவை. ஸ்டர்லிங் நிதியைக்கொண்டு யந்திரப்பொருள்களை வாங்கிக்கொள்ள இந்தியர் தயார். இந்த நல்ல வகையில் மாத்திரமே பிரிட்டன் ஸ்டர்லிங் நிதியை இந்தியாவுக்குத் திருப்பித் தருவதாக இருந்தால், சேர்ந்த ஸ்டர்லிங் நிதி சிறந்த மூலதனமாயிற்று என்றே சொல்லலாம்.

யோக்கியமாக பிரிட்டன் இப்படித்தான் நடந்து கொள்ளும் என்பதற்கான அறிகுறிகளாவது இருக்கின்றனவா என்பதையும் கவனிப்போம். இந்தியாவில் இருந்த பல கைத்தொழில்களைக் கொன்றதைத் தவிர, சாகாமல் எஞ்சியுள்ள தொழில்களையாவது அபிவிருத்தி செய்ய வேண்டுமென்ற நல்லெண்ணம் பிரிட்டிஷாருக்கு என்றைக்குமே இருந்தது கிடையாது. தனக்குத்தேவையான மூலப்பொருள்களை உற்பத்தி செய்து மலிவாகத் தரும் விவசாய நாடாக இந்தியா இருக்கவேண்டும்; பிரிட்டிஷ் தொழிற்சாலைகளில் உற்பத்தியாகும் பொருள்கள் விற்பனையாவதற்கு ஏற்ற மார்க்கெட்டாகவும் இந்தியா இருந்தாக வேண்டும்; இதுவே நிரந்தரமான பிரிட்டிஷ் கொள்கை. இந்த கொள்கையை பிரிட்டன் என்றும் விட்டதில்லை; இன்றும் விடத் தயாராக இருப்பதாகவும் காணோம். இந்த நிலையில், இந்தியாவில் அதிகமாக வேண்டிய தொழிற்சாலைகளுக்குத் தேவையான யந்திரங்களைச் சப்ளை செய்வதிலேயே ஸ்டர்லிங் நிதியைப் பிரிட்டன் உபயோகிக்குமா என்பது முதலாவதாக சந்தேகப்படக்கூடிய விஷயம்.

இந்த சந்தேகத்துக்கு இடமில்லாமலும் போகவில்லை. இந்த யுத்தத்தின் ஆரம்ப வருஷங்களில் பிரிட்டனுக்கு ஏற்பட்ட பெரிய சங்கடத்தைக் கொஞ்சம் எண்ணிப் பார்ப்போம் பிரிட்டனிடம் போதிய கப்பல்கள் இல்லை. யுத்தத்திற்குத்தேவையான மோட்டார்களும் போதிய அளவுக்குக் கிடையாது அவைகளைப் பெறுவதற்காகப் பிரிட்டன் அமெரிக்காவிடம் மண்டிபோட்டுக் கெஞ்சியது. 'இரவல் குத்தகை சப்ளை ஏற்பாடு' வரும் வரையில், தன்னிடம் இருக்கும் தங்கத்தை யெல்லாம் கொட்டித் தந்து, அதுவும் போதாததற்கு அமெரிக்காவில் தனக்கிருந்த மூலதனங்களையும் தத்தஞ் செய்தே பிரிட்டன், அமெரிக்காவினிடமிருந்து மோட்டார்களையும் மற்றும் பல சாமான்களையும் வாங்கிற்று. இங்கிலாந்தில உற்பத்தியை அதிகரிக்கலாம் என்றாலோ, அதற்குப் போதிய ஆள்பலமும் அங்கே கிடையாது. இந்தியாவில் ஆள்பலம் ஏராளம்; வசதிகளுமிருந்தன. ஆகையால் கப்பல்கட்டும் தொழிலையும் மோட்டார் செய்யும் தொழிற்சாலையையும் இந்தியாவில் ஆரம்பித்திருந்தால பிரிட்டிஷ் யுத்தமுயற்சிக்கு சகாயமாக இருக்கும். இதை இந்தியர் எடுத்துக் கூறினார்கள். இதற்கு வேண்டிய அனுமதியையும் யந்திர வசதியையுமாவது செய்து தரும்படி கோரினோம். அமெரிககாவினிடம் பல்லைக்காட்டிக் கெஞ்சிக்கொண்டிருந்த பிரிட்டிஷ் சர்க்கார், இந்தியரின் இந்த நியாயமான கோரிக்கைக்குச் சம்மதிக்கவில்லை. அந்த சர்க்காரின் கட்டளைப்படி நடப்பதைத்தவிர வேறு கதியற்ற இந்திய சர்க்காரும் கைவிரித்து விட்டது. கப்பல் கட்டும் தொழிலை ஆரம்பிப்பதற்கு அனுமதி கிடைத்தது. இதற்கென்று ஆரம்பமான கம்பெனி, இதற்குத் தேவையான யந்திரங்களை வெளி நாடுகளில் வாங்கிற்று. ஆனால் அவற்றை இங்கு ஏற்றிக்கொண்டு வருவதற்கு வேண்டிய வசதியையும் சர்க்கார் செய்து கொடுக்காமல் சால்ஜாப்புச் சொல்லி வருவதால் வாங்கிய சாமான்கள் வரமுடியாமல் இருக்கின்றன.

தன்னுடைய அவசரத் தேவையை முன்னிட்டுக்கூட இந்தியாவில் முக்கியக் கைத்தொழில்கள் ஆரம்பமாகி

விடாதபடி சண்டித்தனஞ் செய்த பிரிட்டிஷ் சர்க்கார், மற்றக் குடியேற்ற நாடுகளான கானடாவிலும் ஆஸ்டிரேலியாவிலும் மோட்டார் உற்பத்தியும் கப்பல் கட்டுவதும் தீவிரமான முறையில் ஆரம்பமாக வசதி செய்து கொடுத்தது. இந்த வஞ்சகம் ஏன்? இந்தியாவில் தயாராகும் கப்பல் கடலில் மிதக்க மறுத்துவிடுமென்பதோ அல்லது இந்தியாவில் செய்த மோட்டார் ஓடாது என்பதோ பிரிட்டிஷ் சர்க்காரின் எண்ணம் அன்று. இதற்குக் காரணம் வேறு. இந்தியாவில் புதிய தொழிற்சாலைகள் தோன்றினல் அதனல் உண்டாகும் நிலைமை என்ன? இந்தியாவுக்குத் தேவையான பொருள்கள் இந்தியாவிலேயே தயாராகிவிடும். பிரிட்டிஷ் சரக்குகளை இங்கே கொண்டு வந்து விற்க வழியில்லாது போகும். பிரிட்டிஷ் கைத்தொழிலுக்கும், பிரிட்டிஷாரின் லாபத்துக்கும் இடைஞ்சலான அந்தக் காரியம் வேண்டாம என்பதற்காகவே, மோட்டார் தொழிலும் கப்பல்கட்டுவதும் இந்தியாவில் ஆரம்பமாவதற்கு முட்டுக்கட்டையாக இருந்தார்கள்.

இந்த எண்ணத்தைப் பிரிட்டிஷ் சர்க்கார் பகிரங்கமாகச் சொல்லவில்லை என்பது வாஸ்தவம். ஆனல் பிரிட்டிஷ் சர்க்காருக்கு மூலபலமாக இருக்கும் பிரிட்டிஷ் முதலாளிகள் இக்கருத்தை வெளியிட்டுக்கொண்டே வருகின்றனர். பல பிரிட்டிஷ் பத்திரிகைகளும் இதைப் பச்சையாகச் சொல்லி வருகின்றன. ‘மான்செஸ்டர் கார்டியன்’, கொஞ்சம் நிதானமாக எழுதும் பத்திரிகை: இந்தியாவின் ஸ்டர்லிங் இருப்பு சம்பந்தமாக அப்பத்திரிகையும தனது நிதானத்தை இழந்திருக்கிறது. இந்த இருப்பு, யுத்தம் முடிந்ததும் இந்தியாவின் புனருத்தாரண ஏற்பாட்டுக்கு உதவும என்று இந்திய சர்க்காரின் நிதி மெம்பர், வரவு செலவுத் திட்டப் பேச்சில் சொன்னதைப்பற்றி எழுதும் ‘கார்டியன்’’ “சில வருஷ காலத்திற்குள் இந்த இருப்பைத் திருப்பித் தந்து விடவேண்டுமென்று இந்தியா கேட்பதாக இருந்தால் இம்முயற்சி தோல்வி யுறுவது நிச்சயம்” என்கிறது. இப்பத்திரிகை சொல்லுவதிலிருக்கும் கருத்து என்ன? குறிப்பிட்ட சில வருஷங்களில ஸ்டர்லிங் இருப்பைப் பிரிட்டன் திருப்பி தரப்போவது இல்லை என்பதே அதன் பொருள்.

கைத்தொழில் அபிவிருத்தித் திட்டத்துக்கு வேண்டிய யந்திரங்களையும் பிறவற்றையுமே ஸ்டர்லிங் நிதியைக் கொண்டு வாங்குவதாக இருந்தால் அந்நிதி சில வருஷ காலத்திற்குள் கட்டாயம் திரும்பக் கிடைப்பதாக இருக்க வேண்டும். குறைந்தது 5 வருஷங்களுக்குள்ளாகவாவது பல தொழிற் சாலைகளை ஆரம்பித்தால்தான், இந்தியாவின் தேவைக்கான பொருள்கள் இந்தியாவிலேயே உற்பத்தியாகி நாடு சுபிட்சமடைய முடியும். ஸ்டர்லிங் நிதி சிறுகச் சிறுகவே இந்தியாவுக்குக் கிடைக்குமென்றால், இந்தியக் கைத்தொழில் அபிவிருத்தி அரைகுறையாகத்தான் இருக்கும். சேர்ந்த நிதி, கைத்தொழில் அபிவிருத்திக்கு வாஸ்தவத்தில் பயன்பட்டதும் ஆகாது.

மேலும், 'எகனமிஸ்ட்' என்ற மற்றொரு பிரபல பிரிட்டிஷ் பத்திரிகை, விஷயத்தை இன்னும் ரொம்பத் தெளிவாக சொல்லிவிட்டது. இந்தியாவில் கைத்தொழில் அபிவிருத்தியைவிட விவசாய அபிவிருத்தியே முக்கியமாம். அதில்தான் அதிக மூலதனத்தைச் செலவிட வேண்டுமாம். இந்திய விவசாயிகள்மீது 'எகனமிஸ்டு' க்கு இவ்வளவு கருணை பொங்கி வழிவதன் மர்மம் என்ன? இந்தியாவின் விவசாய மூலப்பொருள்கள் பிரிட்டனுக்குத் தேவை. இந்தியக் கைத்தொழில் ஓங்காமலிருப்பதும் பிரிட்டிஷ் கைத்தொழிலின் முக்கியத் தேவை. இந்திய விவசாய வளர்ச்சி ஒன்றே முக்கியமென இப்பத்திரிகை சொல்லுவதன் ரகசியம் இதுதான். ஆகையால், இந்தியா கைத்தொழிலில் சிறந்த நாடாகவேண்டும் என்ற எண்ணம் பிரிட்டிஷாருக்கு இல்லை என்பது நிச்சயமாகிறது. ஆகவே ஸ்டர்லிங் நிதி, கைத்தொழில் அபிவிருத்திக்கு மூலதனம் ஆகுமா என்பது முதல் சந்தேகம்.

இந்தியக் கைத்தொழில் அபிவிருத்தியாக வேண்டுமென்ற அக்கரை இந்தியச் சர்க்காருக்கு இருந்ததில்லை என்பதும் தெரிந்த கதை. இந்திய நன்மையில நாட்டமுள்ள தேசிய சர்க்கார் அமையும் என்பதற்கான நம்பிக்கைக்கும் வழியைக் காணோம். இருக்கும் சர்க்காரோ, யுத்தகாலத்தில் வெளிநாடுகளிலிருந்து யந்திரங்களைக் கொண்டுவந்து புதிய

தொழிற்சாலைகளை ஆரம்பிப்பது முடியாத காரியம் என்கிறது. கப்பல் வசதி இல்லாத கஷ்டத்தை இதற்குக் காரணமாகக்காட்டுகிறது. யுத்தகாலத்திற்குப் பிறகு, கைத்தொழில் அபிவிருத்திக்கு ஒரு திட்டம் போடவும் சர்க்கார் தயங்குகிறது. தொழிற்சாலைகளுக்கு வேண்டிய யந்திரங்கள் போன்றவைகளை வாங்கவே ஸ்டர்லிங் நிதி உபயோகிக்கப்படும் என்ற வாக்குறுதியைத் தரவும் சர்க்கார் தயாராக இல்லை. ஆனால் ரோடுகள் விருத்திக்கும் விவசாய அபிவிருத்திக்கும் திட்டம் போடுகிறது. ஆழ்ந்து சிந்தித்தால், விவசாயத்தைப் பெருக்கி, விளைபொருள்களை வெளி நாடுகளுக்குக் கஷ்டமின்றி கொண்டுபோகச் செய்யப்படும் முன்னேற்பாடுகளே இவை என்பது புரியும்.

யந்திரங்களை இங்கிலாந்து கொடுக்காவிட்டால் அமெரிக்கா போன்ற நாடுகளில் வாங்கிக்கொள்ளலாமே என்று சிலர் நினைக்கலாம். ஆனால் இவ்விஷயத்திலும் பிரிட்டிஷ் சர்க்கார் சர்வ ஜாக்கிரதையாகவே நடந்திருக்கிறது. அமெரிக்காவுக்கும் இந்தியாவின் சரக்குகள் போய்க்கொண்டிருக்கின்றன. இந்தியாவில் அமெரிக்கப் படையினருக்குத் தரப்படும் சேவைக்கும் ரூபாய் வசதிக்கும் பதிலாக அமெரிக்காவினிடமிருந்து பணம் வரவேண்டியிருக்கிறது என்பதும் உண்மை. பிரிட்டிஷ் சர்க்கார் நியாயமாக நடந்திருந்தால் லண்டனில் இந்தியாவுக்கு ஸ்டர்லிங் இருப்பு இருப்பதைப்போலவே அமெரிக்காவில் டாலர் இருப்பும் சேர்ந்திருக்கும். ஆனால் பிரிட்டிஷ் சர்க்கார் சேரவிடவில்லை. சேர்ந்த டாலர் இருப்பைத் தனது சௌகரியத்துக்கு உபயோகித்துக்கொண்டு அதற்குப் பதிலாக ஸ்டர்லிங்கையே நமக்கு கொடுத்திருக்கிறது. ஆனால் கொஞ்சம் டாலர் வசதி கொடுக்கப்பிரிட்டிஷ் சர்க்கார் சம்மதித்திருப்பதாகச் சமீபத்தில் இந்திய சர்க்கார் நிதிமெம்பர் சொன்னார். அதிக டாலர் வசதியிருந்தால் அமெரிக்க யந்திரங்களை வாங்கிவரலாம். கொஞ்சம் டாலர்தான் இருக்கிறதென்றால் க்ஷவரப் பிளேடுகளையே வாங்க அந்த வசதி உதவும். பிரிட்டிஷ் சர்க்கார் செய்த இந்த வித்தையில் இன்னும் ஒரு சங்கடமும் அடங்கியிருக்கிறது. ஊருக்கு இரண்டு கடைகளாவது இருந்தால்

அக்கிரம விலையில்லாமலாவது இருக்கும். ஒரே கடையாக இருந்து, அதில் வாங்கியே தீர வேண்டும் என்ருலோ, அந்தக் கடைக்காரன் சொன்னதுதான் விலை. இது சர்வ சாதாரணமாக நடக்கும் விஷயம். இந்தியா விற்ற சரக்குகளும் பிறவும் ஸ்டர்லிங்காவே லண்டனில் சேர்ந்திருக்கிறது. ஆகையால், இந்தியாவுக்குப் பொருள்களை வாங்கும் வசதி இங்கிலாந்திலேயே தேங்கியிருக்கிறது. எனவே வேறு நாட்டுப் பொருளை வாங்க முடியாமல் இங்கிலாந்து இட்ட விலைக்கு வாங்கவேண்டிய நிர்ப்பந்தமும் இதனல் உண்டாகும்.

இந்தியக் கைத்தொழில் அபிவிருத்திக்கு ஸ்டர்லிங் நிதி உதவப் பிரிட்டன் அனுமதிக்கும் என்பது சந்தேகம் என்பதனுல், நிதியையே ஏமாற்றிவிடும் என்று யாரும் சொல்லவில்லை. யந்திரங்களாகத் தராவிட்டாலும் மற்றப் பொருள்களாக பிரிட்டன் தாராளமாக, ஆனந்தமாகத் தரும் முகத்திற்குப் பூசப் பவுடர் வாங்கலாம். சோப்பும் பட்டுத் துணியும வாங்கிக்கொள்ளலாம்; குழந்தைகள் விளையாடப் பொம்மைகள் வாங்கலாம். இந்தியர் சிந்திய ரத்தமும் வடித்த கண்ணீருமான ஸ்டர்லிங் நிதியைக்கொண்டு விஸ்கியும் பிராந்தியுங்கூட வாங்கிவரலாம். இவ்வகைகளிலெல்லாம் நமது ஸ்டர்லிங் இருப்பைக் கரைக்கப் பிரிட்டிஷ் முதலாளிகளும் சம்மதிப்பார்கள். இதுதான் நடக்கபோகிற காரியமாக இருக்குமானுல் இந்தியாவின் கதி என்ன என்பதையும் கொஞ்சம் யோசிப்போம்.

தேவைக்கான பொருள்கள் தட்டில்லாமல் கிடைக்கும் என்பது நிச்சயம். பிரிட்டிஷ் பொருள்களாகவே இந்தியருக்கு அகப்படும். இதனுல் பிரிட்டனில கைத்தொழில் செழிக்கும்; பிரிட்டிஷ் முதலாளிகள் கொழுப்பார்கள். தொழிலாளருக்கும் வேலையிருக்கும். நாட்டில் சுபிட்சம் மிகும். யுத்தத்திற்குப் பிறகு பட்டினியும் பசியும் வேலையில்லாத் திண்டாட்டமும இல்லாமல் இருக்கப் போவதாக பிரிட்டிஷ் மந்திரிகள் சொல்லிவருகிருர்களே! அதைப் பிரிட்டனில் நிறைவேற்றி விடுவதிலும் அவர்கள் வெற்றி பெறுவார்கள். ஆனுல் இந்தியாவின கதி என்ன? இங்கே

கைத்தொழில் அபிவிருத்தி என்பதற்குக் கதிமோக்ஷமே இருக்காது. வெளிநாட்டுப் பொருள்கள் இங்கே தாராளமாக வருவதால், இப்பொழுது இருக்கும் சில தொழிற்சாலைகளின் பாடும் திண்டாட்டமாகிவிடும். யுத்தத்தின் காரணமாகப் பல பொருள்கள் இந்தியாவுக்கு வருவது குறைந்தன. இதனால், சிறு தொழிற்சாலைகள் சில மூலைக்கு ஒன்றாக முளைத்திருக்கின்றன. பிரிட்டிஷ் சரக்குகளின் வரத்து அதிகரிப்பதால் இவைகளும் முளையிலேயே கருகிப் போக வேண்டியதாகும். இதனால் வேலையில்லாத திண்டாட்டம் பெருகும்; ஏழ்மை வளரும். லண்டனில் ஸ்டர்லிங் நிதி சேர்வதன் காரணமாக இங்கே பஞ்சமும், பட்டினிக்கு பலிகளும் மிகுந்துவருவதை இன்று காண்கிறோம். சேர்ந்த நிதிக்குப் பதிலாக இங்கே பொருள்கள் கப்பலேறிவந்தால் அதே பஞ்சமும் பட்டினியுமே அதிக ஆவேசத்துடன் தாண்டவமாடுவதையே நாம் பிறகும் காணநேரும். ஆகையால் ஸ்டர்லிங் நிதி இந்த விதத்தில் இந்தியாவுக்கும் பெரும் கழுத்தறுப்பாக முடிந்தால் அதைக் குறித்து ஆச்சரியப்பட வேண்டியது எதுவுமில்லை.

ஒரு நாடு சுபிட்சமடைய வேண்டுமானால் அந்த நாட்டு மக்களின் தேவைக்கான பொருள்கள் அந்தத்தேசத்திலேயே உற்பத்தியாகவேண்டும் என்பது தெளிவான விஷயம். பொதுஜன தேவைக்கு வேண்டிய பொருள்களே பிறதேசங்களிலிருந்து வரவேண்டியிருக்குமானால், அந்த நிலைமையில் இருக்கும நாட்டு மக்களிடையே வறுமையும் வேலையில்லாத் திண்டாட்டமும் இருந்துதான் தீரும். பிரிட்டிஷ் சுபிட்சம், அந்த நாட்டுக்குத் தேவையான சரக்குகள் அங்கேயே உற்பத்தியாகின்றன என்பதோடு நிற்கவில்லை. உறபத்தியாகும் சரக்குகளை அவர்கள் வெளிநாடுகளுக்குக் கொண்டுபோய் விற்கவேண்டும். அப்படி விற்பதனால் லாபமபெற்று ருசிகண்ட நாடு அது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கொள்கையில் இந்த லாபப் பேரமே முக்கியாம்சம் பெற்றிருக்கிறது என்பதிலும் ரகசியம் எதுவுமே கிடையாது. இந்த ஏகாதிபத்யப் போக்கை யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டன் மாற்றிக்கொள்ளும் என்று எண்ணுவதும் பைத்தியக்காரத்தனம்.

பிரிட்டனின் மூல பலங்களெல்லாம், இந்த யுத்தத்தில் எப்படி வெற்றி பெறுவது என்பதிலேயே இப்பொழுது ஈடு படுத்தப்பட்டிருக்கலாம். ஆனால் பிரிட்டிஷ் முதலாளிகளின் மூளையெல்லாம், அதிகமான சரக்குகளைத் தங்கள் தொழிற் சாலைகளில் உற்பத்தி செய்து அவற்றை யுத்தத்திற்குப் பிறகு வெளி மார்க்கெட்டில எப்படி விற்று லாபமடிப்பது என்பதிலேயே ஈடுபட்டிருக்கின்றன. பிரிட்டிஷ் தொழிற சாலைகளில் அநேகம இன்று யுத்தத்திற்கு வேண்டிய சரக்குகளைத் தயாரிப்பதிலேயே முனைந்திருக்கின்றன. சர்க் கார் செலவில் அந்த தொழிற்சாலைகளில் பல அபிவிருத்தி களையும செய்திருக்கிறார்கள். இதை கவனிப்பதற்கென்று சர்க்கார் நியமித்திருக்கும் போர்டு, பிரிட்டிஷ் தொழிற் சாலை முதலாளிகளைக்கொண்டது. ஆகவே இவர்கள் சர்க் கார் செலவில், பின்னால் செய்யவேண்டிய அதிக உற்பத் திக்கு ஏற்ற முறையில், தங்கள் தொழிற்சாலைகளை அபி விருத்தி செய்துவருகின்றனர் என்றும சொலலப்படுகிறது. வெளிநாட்டு மார்க்கெட்டுகளைத் தங்கள் உற்பத்திப் பொருள்களைக் கொண்டு நிரப்புவதற்கு பிரிட்டிஷ் முத லாளிகள் இப்பொழுது முதல் முஸ்தீப்புடன் இருக்கிறார் கள் என்பது இதனால் வெட்ட வெளிச்சமாகிறது.

அமெரிக்கா, தன் நாட்டின் க்ஷேமத்தை முன்னிட்டு, வரவேண்டிய கடனுக்குப் பொருளாக வாங்கிக்கொள்ள மறுத்து விட்டதல்லவா? அந்த விதமாகவே இந்தியாவும் ஏன் மறுத்துவிடக்கூடாது என்று கேடகலாம. ஆனால் அமெரிக்கா அல்ல இந்தியா. தன் நாட்டிற்கு விரோத மான எக்காரியத்திற்கும் உடன்பட மறுக்கும் உரிமையும் தீரமும் சுதந்தர நாடான அமெரிக்காவுக்கு உண்டு. அடி மை இந்தியாவுக்கு அந்த உரிமை ஏது? உரிமை இருப்ப தாகவே வைத்துக் கொண்டாலும், பிரிட்டிஷ் நன்மையை விட இந்திய நன்மையே பெரிது என்று அடிமை நாட்டின் சர்க்கார் எப்படிக் கருதும்?

யுத்தத்திற்குப் பிறகும் இந்தச் சீர்கெட்ட நிலைமைதான் இருக்குமா எனக் கேட்கலாம். அட்லாண்டிக் சாசனத்தின் அற்புதத்தைப் பற்றிய பேச்சுக்களும், ரூஸ்வெல்டின் நால்

வகைச் சுதந்தரங்களின் அருமையைப்பற்றிய ஆரவாரங்களும் முழங்குகின்றனவே எனச் சிலர் எண்ணலாம். அட்லாண்டிக் சாசனத்தில் கண்ட உரிமை இந்தியாவுக்கும் வருகிறதென்றே வைத்துக்கொள்ளுவோம். அதனால் இந்தியா, கைத்தொழில் வளர்ச்சியைப் பெற வசதியும உரிமையும் இருக்கும் என்பதற்கு அந்தச் சாசனத்தில் என்ன இருக்கிறது? அந்தச் சாசனத்தின் 4வது விதி இது: "சின்ன நாடுகள், வெற்றிபெற்ற நாடுகள், தோற்ற நாடுகள் என்ற பேதாபேதமில்லாமல், எல்லா நாடுகளின் பொருளாதார சுபிட்சத்தையும் முன்னிட்டு, உலகத்தின் மூலப்பொருள்களிலும் வர்த்தகத்திலும் பங்குபெற யாவருக்கும் சம உரிமை இருக்கும" என்றே அந்த விதி கூறுகிறது. இதைப் பற்றித் தென்னாப்பிரிக்க பிரதம மந்திரி பீல்ட் மார்ஷல் ஸ்மட்ஸ் சமீபத்தில் அந்தப பார்லிமெண்டில சொன்னது முக்கியமாகக் கவனிக்க வேண்டியது "எதிரி நாடுகளுக்கும், அவைகள் வாழ்வதற்கு வேண்டிய மூலப் பொருள்களும வர்த்தக சகாயமும கிடைக்கும" என்கிறார். இந்த மூலப்பொருள்கள் ஜெர்மனிக்கும் கிடைக்க வசதி இருக்கும, ஆனால் எதிரி நாட்டுக்குக் குடியேற்ற நாடுகளை கொடுக்கப் போவதிலலே என்பதே அட்லாண்டிக் சாசனத்துக்கு ஸ்மட்ஸ் சொல்லும் வியாக்கியானம்.

ஐரோப்பிய நாடுகளின் கைத்தொழில்கள் விருத்தியாகி வர்த்தகம் பெருக வேண்டுமானால் அதற்குப் போதிய மூலப் பொருள்கள் அவைகளுக்குத் தேவை. இந்த மூலப்பொருள்களைப் பெறும் வசதி, பெரிய சாமராஜ்யத்தைப் படைத்த பிரிட்டன் போன்ற நாடுகளுக்கு உண்டு. ஆனால் ஜெர்மனி போன்ற நாடுகளுக்கு இந்த வசதி போதவில்லை. சென்ற மகா யுத்தம் மூண்ட மர்மம இதுவே. அந்தப் போரின் காரணமாக ஜெர்மனியிட மிருநத குடியேற்ற நாடுகளும் பறி போய்விட்டதால், இருந்த கொஞ்ச மூலப்பொருள் வசதியும இல்லாததாயிற்று. இதன் பலனே இந்தக் கொடிய யுத்தம். ஆகையால் மூலப்பொருள் வசதியைப் பெறுவதற்கு நடக்கும் போட்டியே யுத்தங்களுககு மூல காரணங்களாகின்றன. இதனாலேயே, மூலப்பொருள்கள் வசதியிலும் வர்த்தகத்திலும் இனி எலலோருக்கும் சம உரிமை

இருக்கும் என்று அட்லாண்டிக் பிரகடனம் சொல்லு கிறது. இந்த யுத்தத்திற்குப் பிறகு எல்லாருக்கும் உலக மூலப்பொருள்களைப் பெற சமவசதி உண்டானால் எல்லா நாடுகளிலும் தொழிற்சாலைகளில் பொருள்களின் உற்பத்தி அதிகரிக்கும். உற்பத்தியான அதிகப் பொருள்களை வெளி யில் விற்றாக வேண்டும். இந்த வர்த்தகத்திலும் எல்லாருக் கும் சம பங்கு உண்டு என்று அட்லாண்டிக் சாசனம் கூறு கிறது. ஆகையால் மூலப்பொருள்களைச் சப்ளை செய்யும் நாடுகளும், அவற்றைக் கொண்டு தயாரித்த சரக்குகளை வாங்கியே தீரவேண்டிய மார்க்கெட்டுகளான நாடுகளும் இருந்தாக வேண்டியது இதன்படி அவசியமாகிறது.

அட்லாண்டிக் சாசனம், 'எல்லா நாடுகளுக்கும் சம உரிமை' என்கிறதல்லவா? 'எல்லா நாடுகளும்' என்பது எந்த எந்த நாடுகள்? ஐரோப்பாவுக்குத்தான் அட்லாண்டிக் சாசனம் என்று சர்ச்சில் சொல்லியிருக்கிறார். ரூஸ்வெல்டும் இதை மறுக்கவில்லை. "அட்லாண்டிக் சாசனம் சில நாடுகளுக்கே இருக்கும் என்ற நம்பிக்கையிலேயே நான் இருக்கிறேன்" என்று வென்டல் வில்கி சமீபத்தில் கூறினார். ஆகையால் அட்லாண்டிக் சாசனமும், நாம் கவனித்த அதன் 4-ஆவது விதியும் சில நாடுகளுக்குத்தான் இருக்கும். மற்ற நாடுகள், இந்தச் சில நாடுகளுக்கு வேண் டிய மூலப்பொருள் வசதியைத் தருபவைகளாக இருக்க வேண்டும். அதோடு அந்தச் சில நாடுகள் உற்பத்தி செய்யும் சரக்குகளை மற்ற நாடுகள் வாங்க வேண்டியவைகளாகவு மிருக்கும். இந்தியாவும் சீனாவும் வெளி நாடுகளுக்கு மூலப் பொருள்களைத் தரும் நாடுகளாக இருக்கின்றன. பிரிட்டிஷ், அமெரிக்கப் பொருள்களை விற்க இந்தியாவும் சீனாவு மே சரியான மார்க்கெட்டுகள். இந்த இரண்டு வசதிகளை யும் பெறுவதில் அமெரிக்காவும் பிரிட்டனும் சற்றேறக் குறைய இன்று ஏகபோக உரிமையைப் பெற்றிருக்கின்றன என்றே சொல்லவேண்டும். இவ்விரு தேசங்களும அட் லாண்டிக் சாசனத்தின்படி நடக்கப்போகிறார்களென்றால், தாங்கள் படைத்திருக்கும ஏகபோக உரிமையால் சண்டை வராமலிருக்க இன்னும் சில நாடுகளுக்கும் அதில் பங்கு தருவார்கள் என்பதுதான் பொருள்.

அமெரிக்காவையும் பிரிட்டனையும் மற்ற ஐரோப்பிய நாடுகளையும்போல இந்தியாவும் சீனவும் கைத்தொழில் களில் விருத்தியடைந்து வருகின்றன என்று வைத்துக் கொள்வோம். அப்பொழுது என்னவாகும்? இந்தியா, சீன நாடுகளின் மூலப்பொருள்கள் உள்நாட்டு உற்பத்தி யில் ஈடுபடுத்தப்பட்டுவிடும். இதனால் வெளிநாடுகளுக்கு மூலப்பொருள் இருக்காது. அதே சமயத்தில் கைத்தொழில் அபிவிருத்தியால் உள்நாட்டில் பொருளுற்பத்தி அதிகரிப்ப தால் வெளிநாட்டுப் பொருள்களின் தேவை குறையும். இத னால் அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் தங்கள் சரக்குகளை விற்க இருந்த மார்க்கெட் இல்லாது போகும். பிறகு அத்தேசங்களில சுபிட்சமும் சாத்தியம் இல்லை. வரும் லாபத்தில், பெறும் சுபிட்சத்தில், சண்டைக்காரனுக்கும் கொஞ்சம் பங்கு தர பிரிட்டனும் அமெரிக்காவும் சம்மதிக்கலாம். ஆனல் இந்தியாவும் சீன வும் சீரழிந்து கிடக்கின்றனவே என்று கருணை கொண்டு மூலப்பொருள், மார்க்கெட் வசதியைத் தியாகஞ்செய்து கைத்தொழில் அபிவிருத்திக்கு இடங்கொடுப்பார்களென்று நினைப்பதோ பைத்தியக்காரத்தனம். போருக்கு நடுவில்கூட அமெரிக்காவும் பிரிட்டனும் மார்க்கெட்டைப் பிடிக்கும் போட்டியை மறந்துவிடவில்லை என்பதை இன்று இந்தியா விலும் காண்கிறேம்.

அட்லாண்டிக் சாசனத்தின் இப்பிரிவில் இன்னும் ஒன்றும் சேர்க்கப்பட்டிருக்கிறது. மேலே சொன்ன சம வசதியை அளிக்கும் விஷயத்தில், "இப்பொழுதிருக் கும் உரிமைகள் மதிக்கப்படும்" என்பதே அது. பிற நாடு களைத் தங்கள் சுரண்டலுக்கு மாத்திரம் உபயோகித்துக் கொள்ளச் சில நாட்டினர் பெற்றிருக்கும் உரிமையும் பிறகு மதிக்கப்படும் என்பது தெளிவாகிறது. ஆகையால் அட் லாண்டிக் சாசனத்தால் அற்புதங்கள் விளையுமென்றோ, ஏகாதிபத்தியச் சுரண்டல் தொலையும் என்றோ நினைப்பது தவறு. எனவே இச்சுரண்டலுக்கு இடந்தராத வகை யில் இந்தியா அபிவிருத்தியடைய ஸ்டர்லிங் நிதி உபயோக மாக பிரிட்டன் விட்டு விடும் என நம்புவதும் பகற் கனவு.

இங்கிலாந்தில் இந்தியாவுக்கு ஏராளமாக ஸ்டர்லிங் நிதி சேர்ந்திருக்கிறது. ஆனால் அளவு கடந்த கஷ்டங்களினாலும் நஷ்டங்களினாலும் சேர்ந்திருக்கும் அந்த நிதி பின்னை இந்தியாவுக்கு நன்மை யளிக்கும் நிதியாக ஆகவேண்டுமானால், அது பிரிட்டன் நாணயமாக நடந்து கொள்ளுவதையே பொறுத்திருக்கிறது. அந்த நிதியை நல்வழியில் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென்பதில் இந்திய சர்க்காரும் யோக்கியமாக நடந்துகொள்ள வேண்டும். பிரிட்டனும் இந்தியச் சர்க்காரும் நேர்மையாக நடந்தால் இந்தியக் கைத்தொழில்கள் வளர ஒருவேளை அந்நிதி பயன்படலாம். இல்லையானால் கைத்தொழில வளர்ச்சி இல்லாததோடு, இருக்கும் கைத்தொழில்களுக்கே தீராத தீம்பாகவும் முடியலாம். முந்திய அத்தியாயத்தில இவற்றைக் கவனித்தோம். இதல்லாமல் ஸ்டர்லிங் நிதி ஒன்றுக்கும் ஆகாதது ஆகக் கரைந்துவிடக் கூடிய மற்றோர் ஆபத்தும் இருக்கிறது. இங்கிலாந்தில் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, இந்தியாவுக்கு இருக்கும் ஒரு நிதி என்றே சொல்லுகிறோம். இந்திய சர்க்காரும் இதையே சொல்லுகிறது. ஆனால் அந்த நிதியைச் சர்க்கார் சும்மா வைததிருக்கவில்லை. இந்த ஸ்டர்லிங்கை ரிசர்வாக வைத்துக்கொண்டு அதற்குப் பதிலாக இந்திய ரிசர்வ் பாங்கி நோட்டுகளைப் போட்டு இந்தியாவில் வழங்கி வருகிறது. இந்த வழியிலேயே சர்க்கார் இந்தியாவில் நோட்டுப் பணப் பெருக்கத்தை உண்டாக்கி இருக்கிறார்கள் என்பதையும் முன்னாடியே கவனித்திருக்கிறோம்.

பணம் நோட்டுப் போடும் அதிகாரம் சர்க்காருக்கு இருக்கிறது. இந்திய சர்க்காரின் பாங்காகவுள்ள ரிசர்வ் பாங்குக்குச் சட்டப்படி இந்த அதிகாரம் உண்டு. காகிதமும் அச்சு யந்திரமும் கையில் இருக்கின்றன என்பதற்காக எந்த சர்க்காரோ அன்றி சர்க்கார் பாங்கோ தங்களிஷ்டப்படி நோட்டுக்களை அச்சடித்து வீசிவிட முடியாது. அச்சடித்து வெளியிடும் நோட்டுக்களின் மதிப்புக்கான தங்கத்தையோ, வெள்ளியையோ அல்லது வேறு எந்த சொத்தையோ ரிசர்

வில் வைத்துக்கொண்டுதான் அவற்றிற்குப் பதிலாக நோட்டுப் போட்டு வெளியிட முடியும். இதற்கென்றே சட்ட விதிகளும் இருக்கின்றன. இந்திய சர்க்காரும், ரிசர்வ் பாங்கும் இதற்குக் கட்டுப்பட வேண்டியவைகளே. ஆனால் தங்கத்தையோ வெள்ளியையோ வைத்துக்கொள்ளுவதற்குப் பதிலாக இங்கிலாந்தில் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதியை இப்பொழுது ரிசர்வாக வைத்துக்கொண்டே சர்க்கார் இந்தியாவில் அதிக நோட்டுகளைப் போட்டு நோட்டுச் செலாவணியைப் பெருக்கியிருக்கிறார்கள். ஸ்டர்லிங்கை ரிசர்வில் வைத்துக்கொண்டு நோட்டுப் போடுவது என்பது திடீரென்று இன்று ஏற்பட்ட வழக்கமல்ல. 1898-99 ல் இந்த வழக்கம் தொடங்கியிருக்கிறது. அந்தக் காலத்தில் ஒருவனிடம் ஒரு ஸ்டர்லிங் நோட்டு இருந்தால் அதை இங்கிலாந்தில் பாங்கில் கொடுத்துவிட்டு தனக்கு ஒரு ஸ்டர்லிங்கிற்கு ஆன தங்கம் வேண்டுமென அவன் கேட்கலாம். உடனே அவனுக்கு தங்கத்தைக் கொடுத்துத் தீரவேண்டியது அந்தப் பாங்கி பொறுப்பு. தங்க நிர்ணய முறையிருந்த அந்தக் காலத்தில், கையில் ஸ்டர்லிங் இருந்தாலும் தங்கம் இருந்தாலும் இரண்டும் ஒன்றே ஆகையால் தங்கத்தை ரிசர்வில் வைத்துக்கொண்டு அதற்குப்பதிலாக நோட்டுப் போடுவதற்கும் ஸ்டர்லிங்கை ரிசர்வில் வைத்துக்கொண்டு நோட்டுப் போட்டுச் செலாவணிக்கு விடுவதற்கும் வாஸ்தவத்தில் வித்தியாசம் எதுவும் கிடையாது. இதனாலேயே அப்பொழுது ஸ்டர்லிங்கை ரிசர்வில் வைத்துக்கொண்டு இந்தியாவில் நோட்டுக்களைப் போட்டுச் செலாவணிக்கு விடும் பழக்கம் 1898-99-ல் வந்தது. ஆனால் இன்றோ நிலைமை வேறு. பிரிட்டனின் நாணயமான ஸ்டர்லிங் இங்கிலாந்தில் இன்றும் செலாவணியிலிருக்கிறது; அது செல்லும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் ஸ்டர்லிங்கும் தங்கமும் அன்றிருந்ததைப் போல இன்றும் ஒன்றே அல்ல. கையிலிருக்கும் ஸ்டர்லிங் தங்கத்திற்குச் சமானமும் அன்று. பிரிட்டனோ தங்க நிர்ணய முறையைக் கைவிட்டிருக்கிறது. ஆகையால் ஸ்டர்லிங் நோட்டைப் பிரிட்டிஷ் பாங்கில் கொடுத்துவிட்டு அதற்குப் பதிலாகத் தங்கத்தைத் தரவேண்டுமென்று இப்பொழுது யாரும் கேட்க முடியாது. கேட்டாலும் தங்கத்

தைத் தரவேண்டும் என்ற அவசியமும் பிரிட்டிஷ் பாங்குக்குக் கிடையாது. ஆகவே ஸ்டர்லிங்கை ரிசர்வாக வைத்துக் கொண்டு அதற்குப் பதிலாக இந்தியாவில் நோட்டுப் போடுவதென்பது புதிதல்ல என்றாலும், ஸ்டர்லிங் சம்பந்தமாக அன்றைக்கும் இன்றைக்கும் உள்ள இந்த முக்கியமான வித்தியாசத்தை யாரும் மறந்துவிடக்கூடாது.

இந்தியாவுக்குச் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி, இந்தியாவில் அச்சிட்டுச் செலாவணிக்கு விடப்பட்டிருக்கும் நோட்டுக்களுக்கு ரிசர்வாக, அதாவது இருப்பாக வைக்கப் பட்டிருக்கிறது.

சாதாரணமாக சர்க்கார் கோடி ரூபாய்க்கு நோட்டுப் போடுகிறது என்று வைத்துக் கொள்ளுவோம். நியாயப்படி கோடி ரூபாய் பொருமானமுள்ள தங்கத்தையோ வெள்ளியையோ இருப்பில் வைத்துவிட்டே கோடி ரூபாய்க்கு நோட்டுக்களைப் போடவேண்டும். ஆகவே வெளியில் செலாவணிக்குப் போயிருக்கும் கோடி ரூபாய் நோட்டுக்களுக்கு ஈடாகவே இந்தத் தங்கமும் வெள்ளியும் இருப்பில் இருக்கின்றன. மேலும் நோட்டுக்களுக்கு ஈடாக இருக்கும் தங்கத்தைச் சர்க்கார் வேறு எதற்கும் உபயோகிக்கவும் முடியாது. இந்தக் கோடி ரூபாய்த் தங்கமும் வெள்ளியும் இருப்பில் வேண்டாம் என்று சர்க்கார் நினைப்பதாக இருந்தால் இவற்றிற்குப் பதிலாக வெளியிட்ட நோட்டுக்களை வாபஸ் வாங்கிக்கொண்டு விடவேண்டும். அதாவது கோடி ரூபாய் நோட்டுகளுக்கு அந்தத் தங்கத்தையும் வெள்ளியையும் விற்றுவிட வேண்டும். விற்பதன் மூலம் வரும் நோட்டுக்களை திரும்பவும் வெளியிடாது இருந்தால்தான் இருப்பில தங்கமும் வெள்ளியும் இருக்கவேண்டிய அவசியம் இருக்காது. ஆகையால் நாணயச் செலாவணிக்கு என்று இருப்பில் இருப்பது, அந்த நாணயச் செலாவணி சம்பந்தமான காரியங்களுக்கு மாத்திரமே உபயோகப்படும் என்பது இங்கு தெளிவாகிறது. இங்கிலாந்தில் சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங இருப்பும், இந்தியாவில் அதிகரிக்கப்பட்டிருக்கும் நோட்டுச் செலாவணிக்கே இருப்பாக வைக்கப்பட்டிருக்கிறதல்லவா? அதை இருப்பாக வைத்துக்கொண்டே இங்கு

நோட்டுக்களை அச்சிட்டுச் செலாவணிக்கு விட்டிருக்கிறார்கள். ஆகையால் இதைக்கொண்டு கவனித்தால் ஒரு விஷயம் புலனாகிறது. நாணயச் செலாவணிக்கு இருப்பாக வைத்த தங்கமும் வெள்ளியும் பிற காரியங்களுக்குப் பயன்படுத்தப்படுவது எப்படி முடியாத காரியமோ அது போலவே இந்தியாவில் இன்று நோட்டுச் செலாவணிக்கு இருப்பாக வைக்கப்பட்டிருக்கும் ஸ்டர்லிங் நிதி, நோட்டுச் செலாவணி சம்பந்தமில்லாத பிறவற்றுக்குப் பயன் படுவதும் முடியாத காரியம். ஸ்டர்லிங் நிதிக்கு ஈடாகவே நோட்டுக்கள் செலாவணிக்கு விடப்பட்டிருக்கின்றன என்றால், அவசியமாகும்போது அந்த நோட்டுக்களை வாபஸ் பெறவே, அதாவது அவற்றை வாங்கிவிடவே, இந்நிதி பயன்படும். இதை விட்டுவிட்டு யுத்தத்திற்குப் பிறகு இந்த நிதி என்னென்னவோ பெரிய பெரிய காரியங்களுக்கெல்லாம் பயன்படப் போகிறது என்று பிரமாதமாக எதிர்பார்ப்பதெல்லாம் தவறு என்பதாகிறது. நோட்டுச் செலாவணியை அதிகரிப்பதற்கு ஈடாக இருப்பாக வைக்கப்பட்டிருக்கும் ஸ்டர்லிங் நிதி, அந்த நோட்டுக்கள் சம்பந்தப்பட்ட வகையில் யுத்தத்திற்குப் பிறகு என்ன ஆகும்? இதைச் சரியாகப் புரிந்துகொள்ளுவதற்குப் பணத்தைப் பற்றிய சில பொதுவான விசித்திரங்களையும் தெரிந்து கொள்ள வேண்டியது அவசியம்.

நாட்டுக்கு ஒரு வித நாணயமிருக்கிறது. இந்தியாவிலிருப்பது ரூபாய் என்றால் இங்கிலாந்தின் நாணயம் ஸ்டர்லிங் என்ற பவுன். இதே போல அமெரிக்காவில் டாலர், பிரான்ஸில் பிராங்க், ரஷ்யாவில் ரூபிள், ஜெர்மனியில் மார்க், ஜப்பானில் யென் என்ற வெவ்வேறு நாணயங்கள் செலாவணியில் இருக்கின்றன. இதை நாம் முன்னமேயே குறிப்பிட்டிருக்கிறோம். பெயரில் மாத்திரமல்ல, ஒவ்வொரு தேசத்தின் நாணயத்தின் மதிப்பிலும் இவ்விதம் அதிக வித்தியாசமிருக்கிறது. ரூபாயின் மதிப்பை உதாரணமாக எடுத்துக் கொள்ளுவோம். நமது ரூ. 1-9-0-க்கு ஜப்பானின் ஒரு யென் சமம். அதாவது ரூ 1-9-0 கொடுத்தால் ஒரு யென் கிடைத்துவிடும். ரூ. 3 கொடுத்தால்தான் அமெரிக்க நாணயமான டாலர் ஒன்று கிடைக்கும்.

ரூ. 13-க்கு அதிகமாகக் கொடுத்தால்தான் பிரிட்டிஷ் நாணயமான ஸ்டர்லிங் ஒன்று கிடைக்கும். ஒன்றரை ரூபாய் கொடுத்தால்தான் மலாய் நாட்டு வெள்ளி என்ற நாணயம் ஒன்று கிடைக்கும் என்பதையும் அநேகர் அறிவார்கள். ஆகையால் ஒரு தேசத்தின் நாணயத்திற்கும் மற்றோர் தேசத்தின் நாணயத்திற்கும் மதிப்பில் வித்தியாசம் இருக்கிறது. அடுத்த நாட்டுடன் சம்பந்தமில்லாது ஒரு தேசம் தனித்து வாழ முடிகிறவரையில் மற்றொரு தேசத்தின் நாணய மதிப்பைப்பற்றி எந்த நாட்டுக்கும் கவலையில்லை. ஆனால் வர்த்தகத்திலும் பிறவற்றிலும் உலகத்தில் இருக்கும் எல்லா நாடுகளுமே இன்று ஒன்றிற்கொன்று நெருங்கிய சம்பந்தம் பெற்றிருக்கின்றன. ஒரு நாட்டுக்கும் மற்றொரு தேசத்திற்கும் வர்த்தகம் நடக்கிறது என்றால் இதில் இரு நாடுகளின் நாணயங்களும் சம்பந்தப்பட்டதாகிறது. அமெரிக்கா இந்தியாவில் சணல் வாங்குகிறது. இதேபோல இந்திய மூலப்பொருள்கள் பல அமெரிக்காவுக்குத் தேவை. நாமும் அமெரிக்கப் பொருள்கள் அநேகவற்றை வாங்குகிறோம். இந்த அமெரிக்கா சணலை வாங்குகிறதென்றால் இந்த ரூபாய் கொடுத்துத்தான் வாங்கவேண்டும். அமெரிக்காவிலிருந்து பவுண்டன் பேனாவை நாம் வாங்குவதானால் அங்கே டாலர் கொடுத்துத்தான் வாங்கவேண்டும். ஆனால் டாலரின் மதிப்புக்கும் ரூபாயின் மதிப்புக்கும் வித்தியாசம் இருக்கிறது. மற்றத் தேசத்தின் நாணயங்களின் மதிப்பிலும் அதிக வித்தியாசங்கள் இருக்கின்றன. ஆகையால் ஒவ்வொரு நாட்டு நாணயத்தின் மதிப்பையும் இவ்வளவு என்று அளந்து நிர்ணயிக்க வேண்டியது அவசியமாகிறது.

நாணயத்தின் மதிப்பை அளப்பது எப்படி? துணியாக இருந்தால் கஜக்கோலால் அளந்து சொல்லிவிடலாம். பிற பொருள்களாக இருந்தால் தராசில் போட்டு நிறுத்தோ அல்லது படி கொண்டு அளந்தோ அதன் அளவு இவ்வளவு என்பதை நிர்ணயித்துவிட முடியும். ஆனால் பணமோ, அளந்தும் நிறுத்தும் மதிப்பை நிர்ணயித்துவிடக் கூடியதல்ல. பணத்தின் மதிப்பை அளப்ப

தென்றால் அதற்குச் சரியான உபாயம் ஒன்றுதான் உண்டு. பண்டங்களை வாங்கவே பணம் பயன்படுகிற தல்லவா? ஆகையால் பண்டத்தைக் கொண்டே பணத் தின் மதிப்பை அளந்துவிடலாம். சாதாரண காலத்தில் இந்த ரூபாய்க்கு 5 படி அரிசி கிடைத்துவந்தது. எனவே ஒரு ரூபாயின் மதிப்பு 5 படி அரிசி என்று நிர்ணயிக்க லாம். ஆனால் நாம் ரூபாயின் மதிப்பை அரிசியைக் கொண்டு அளந்துவிடுவது மாத்திரம் போதாது. பிரிட் டன், அமெரிக்கா போன்ற அநேக தேச நாணயங்களின் மதிப்பு இன்னது என்ற அளவும் நமக்கு அவசியம். இங்கி லாந்தில அரிசி விளையவில்லை. ஆகையால் இங்கிலாந் தின் நாணயமான ஸ்டர்லிங்கின் மதிப்பு இன்னது என் பதை நம் அரிசியைக் கொண்டு அளந்துவிடலாம் என்பது ஆகாத காரியம். ஆகவே எல்லா நாடுகளின் நாணயங் களது தனித்தனி மதிப்பு இன்னதென்பது நிச்சயமாக வேண்டுமானால் எல்லாத் தேசங்களுக்கும் பொதுப்படை யான ஒரு பண்டம் இதற்கு அளவுகோலாக இருக்க வேண்டியது அவசியம். எந்தப் பொருளை இந்த அளவு கோலாக உபயோகிப்பது? உலகத்தினர் யாவருமே விரும்பி வாங்கும் தங்கத்தை இந்த அளவு கோலாகக் கொள்ளுவது என்பது உலக ஏற்பாடு. ஒவ்வொரு தேசத் தின் நாணயத்தின் மதிப்பு இன்னதுதான என்பதை நிர்ண யிப்பதும் இதனால் சுலபமாயிற்று.

தங்கத்தின் விலை தாறுமாறாக இருக்கும் இன்றைய நிலைமையைக் கொஞ்சம் மறந்து விடுவோம். 1931-ல் அதாவது சாதாரண காலத்தில் தங்கம் இருந்த விலையைக் கவனிப்போம். அப்பொழுது தோலா தங்கம் ரூ. 24-12-0 ஆக இருந்தது. அதாவது ரூ. 24-12-0க்கு ஒரு தோலா தங்க மதிப்பு என்பது நிச்சயமாகிறது. இவ்விதமே ஒரு தோலா தங்கத்தை எவ்வளவு ஸ்டர்லிங், எவ்வளவு டாலர், எவ்வளவு யென், எத்தனை ரூபிள், எத்தனை மார்க்குக்கு வாங்கலாம் என்பதைக் கொண்டு முறையே பிரிட்டன், அமெரிக்கா, ஜப்பான், ருஷ்யா, ஜெர்மனி ஆகிய தேச நாணயங்களின் மதிப்பு இன்னது என்பதை

அறிந்து விடுவது சாத்தியம். இவ்விதம் நமது ரூபாயின் மதிப்பை பிறதேசத்தவர்களும், மற்ற நாட்டு நாணயங்களின் மதிப்பு இன்னதுதான் என்பதை நாமும் அளந்து அறிவது சுலபமாகிறது. ஒரு ஸ்டர்லிங்கின் மதிப்பு இன்ன அளவு தங்கம் என்று பிரிட்டன் நிர்ணயித்தது. அதன்படி ஒரு ஸ்டர்லிங் நோட்டை பிரிட்டிஷ் பாங்கியில் கொடுத்தால், அதன் மதிப்பென்று நிர்ணயிக்கப் பட்ட தங்கம் யாருக்கும் தானே கிடைக்கும். இவ்விதமே அமெரிக்கா முதலிய அந்நிய தேசங்கள், தங்கள் நாணயத்தின் மதிப்பை தங்கத்தினுல் நிர்ணயித்துக் கொண்டன. தங்க நிர்ணய முறை (Gold Standard) என்பது இதுதான். ஆனல் நாணயத்தின் மதிப்பை நிரந்தரமாக நிர்ணயிப்பது என்ற நோக்கத்தின் பேரில வந்த இந்த தங்க நிர்ணய முறை நீடிக்கவில்லை. பிரிட்டன் உள்பட எல்லா நாடுகளும் நெருக்கடிக் காலங்களில் இம் முறையைக் கைவிட்டிருக்கின்றன. இது ஏன்? இதே அடுத்தபடியாக நாம் தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம்.

சென்ற மகா யுத்தத்தின் காலத்தில் பிரிட்டன் தங்க நிர்ணய முறையை கைவிட்டது. எல்லா ஐரோப்பிய நாடுகளும் இதையே செய்தன. யுத்தச் செலவுகள் அந்த தேசங்களுக்கு அதிகரித்தன. இதனுல் அதிகப் பணம் அந் நாடுகளுக்கு அவசியமாயிற்று. தங்க நிர்ணய முறைப்படி, போடும் நோட்டுகளுக்கு அவற்றை வைத்திருப்பவர்கள் விரும்பினுல் தங்கத்தைக் கொடுத்துவிட வேண்டியது கடமையாகிறது. எனவே தங்க நிர்ண முறையைக் கைவிடாமலேயே பணத்தையும் பெருக்குவதானுல் பெருகிய அந்தப் பணத்திற்கு ஏற்றாற்போல கையிலிருக்கும் தங்க இருப்பையும் பெருக்கவேண்டிய நிர்பந்தம் சர்க்காருக்கு ஏற்படுகிறது. தங்கமோ சுமமா கிடைத்துவிடாது. பிறநாடுகளிலிருந்து தங்கத்தை வாங்கிக்கொண்டு வருவதாக இருந்தால், அதற்கென்று அந்த நாடுகளின் தேவைக்கான பொருள்களைக் கொண்டுபோய் விற்று தங்கமாக்கிக் கொண்டு வரவேண்டும். யுத்தகாலத்தில் இத்தகைய பேரமும் அசாத்தியம். மேலும், இன்னுமொரு தேசத்திலிருந்து

தங்கத்தை வாங்குவதைக்காட்டிலும் கையிலிருக்கும் தங்கத்தைக்கொண்டு யுத்தத்திற்கு அவசியமாகத் தேவைப்படும் பொருள்களை வாங்கித் தீரவேண்டிய நிர்ப்பந்தமே யுத்தத்தில் ஈடுபட்ட நாடுகளுக்கு இருந்தது. இதனாலேயே பிரிட்டனும் மற்றும் பல நாடுகளும் சென்ற மகா யுத்தகாலத்தில் தங்க நிர்ணயத்தைக் கைவிட்டன. பணத்தைப் பெருக்கிக் கொள்ளுவதற்கு வேண்டிய சௌகரியத்தை முன்னிட்டே தங்க நிர்ணயத்தை அப்பொழுது கைவிட்டார்கள் என்றால், அவசியததை முன்னிட்டுத் தங்கள் நாணயத்தின் மதிப்பைக் குறைத்துக் கொண்டார்கள் என்றே சொல்ல வேண்டும். இந்திய சர்க்கார் இப்பொழுது நோட்டுப் பணச் செலவாணியைப் பெருக்கி இருக்கிறது. இதன்பலனாக ரூபாய் முன்பிருந்த மதிப்பை இழந்து இன்று ஐந்தரை அணாவுக்குக் குறைவான மதிப்புடனேயே இருக்கிறது என்பதை முன் அத்தியாயம் ஒன்றில் கவனித்தோம். இவ்விதம் பணத்தைப் பெருக்கி, ரூபாயின் மதிப்கைக் குறைத்தாக வேண்டியது தனது யுத்தகால அவசியம் என்று இந்திய சர்க்கார் எண்ணுகிறது. பிரிட்டனும் பிறநாடுகளும், சென்ற மகா யுத்தகாலத்தில், தங்கள் நாணயத்தின் மதிப்பை நிர்ணயிக்க இருந்த தங்க நிர்ணயத்தைக் கைவிட்டு, பணத்தைப் பெருக்கி நாணயத்தின் மதிப்பைக் குறைக்கவேண்டியது அவசியமெனக் கருதியதனாலேயே அவ்விதம் செய்தன.

ஸ்டர்லிங்கின் மதிப்பு குறைந்திருப்பது சௌகரியமானது என்று எக்காலத்திலும் பிரிட்டன் எண்ணிக் கொண்டு இருந்துவிடவில்லை. நாணயத்தின் மதிப்பு குறைந்திருப்பது, தன் மதிப்புக்கே குறைவு என்று பிரிட்டிஷ் சர்க்கார், யுத்தம் முடிந்து சில வருஷங்களிலெல்லாம் கருத ஆரம்பித்தது. இதன்பலனாக 1925-ல் திரும்பவும் பிரிட்டன் தங்க நிர்ணய முறையைக் கைக்கொண்டது. ஆனால் 1931 செப்டம்பர் 23-ஆந் தேதி திரும்பவும் பிரிட்டன் தங்க நிர்ணயமுறையை ரத்துசெய்துவிட்டது. இந்தத் தடவை யுத்த அவசியம் காரணம் அன்று. உலகத்தில் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியே இதற்கு முக்கிய கார

ணம். விலை வாசிகள் குறைந்தன ; வேலையில்லாத் திண்டாட்டங்கள்பெருகின. ரஷ்யாவில் ஏற்பட்டதைப்போன்ற புரட்சி உண்டாகி விடுமோ என்ற திகிலும் பிரிட்டிஷ் முதலாளிகளுக்கு உண்டாயிற்று. தங்க நிர்ணய முறை அமுலில் இருந்ததால், பணம் படைத்தவர்கள் தங்களிடமிருந்த ஸ்டர்லிங் நோட்டுகளைக் கொடுத்துத் தங்கத்தை வாங்கி பத்திரமான வெளிநாடுகளுக்கு அனுப்பத் தலைப்பட்டனர். இதனால் சர்க்காரின் தங்க இருப்பு குறைந்தது. தங்க இருப்பு குறைந்ததால் நாணயத்தின் மதிப்பை நிரந்தரமாக்குவதற்கு வேண்டிய தங்கம் சர்க்காரிடம் இல்லாது போயிற்று. மேலும் பயத்தின் காரணமாக பிரிட்டிஷ் முதல் பிறநாடுகளுக்குக் கப்பலேறிப் போய்விடுவதைத் தடுத்தாக வேண்டியிருந்தது. சுருக்கமாகச் சொன்னால் **1931**-ல் பிரிட்டிஷ் சர்க்கார் தங்க நிர்ணயத்தைக் கைவிட்டதற்கு இவைகளே காரணங்கள். அதன்பிறகு ஸ்டர்லிங் நோட்டைக் கொடுத்து யாரும் தங்கம் தரும்படி பிரிட்டிஷ் சர்க்காரைக் கேட்க முடியாது.

அப்பொழுது தங்க நிர்ணயத்தைக் கைவிட்ட பிரிட்டனும் மற்ற நாடுகளும் அதன் பிறகு தங்க நிர்ணய முறைக்குத் திரும்பவில்லை. பின்னர் இந்த யுத்தமும் வந்துவிட்டது. ஆனால் பணத்தைப் பெருக்கியதின் பலனைகச் சென்ற யுத்தத்திற்குப் பிறகு, ஜெர்மனியிலும் மற்றும் பல ஐரோப்பிய நாடுகளிலும் விளைந்த அனர்த்தங்களை பிரிட்டனும் அமெரிக்காவும் மாத்திரமல்ல, ஜெர்மனி போன்ற நாடுகளும் ஞாபகத்தில் வைத்திருக்கின்றன. இந்த யுத்த காலத்தில் பணப் பெருக்கம் இல்லாதபடி பார்ப்பதில், அதாவது பணத்தின் மதிப்பு அதிகமாகக் குறைந்துபோகாமல் இருப்பதில், இந்த நாடுகள் எல்லாம் சர்வ ஜாக்கிரதையாகவும் இருந்து வருகின்றன. பணப் பெருக்கத்திலிருக்கும் ஆபத்துகளை அடியோடு மறந்துவிட்டு, இதிலுள்ள தீம்புகளைப் பிறர் சொன்னாலும் அதையெல்லாம் கொஞ்சங்கூடப் பொருட்படுத்தாமல், காகிதப் பண செலாவணியை பெருக்கிக் கொண்டே போகும் சர்க்கார் இன்று ஏதாவது உண்டு என்றால் அது

இந்திய சர்க்கார்தான். இந்திய சர்க்கார் ஏன் இப்படிச் செய்கிறது என்பதையும் முன்னுடியே கவனித்திருக்கிறோம். ஆகையால் திரும்பவும் இங்கு அதை விவரிக்க வேண்டியது அநாவசியம்.

ஒவ்வொரு நாட்டின் நாணயத்தின் உண்மை மதிப்பை தங்கத்துடன் ஒப்பிட்டு மதிப்பிடும் வழக்கத்தை கவனித்தோம். இப்பொழுது தங்க நிர்ணய முறையே இல்லை. இந்தச் சமயத்தில் பல தேசங்களின் நாணயங்களது மதிப்பை எப்படி நிர்ணயித்து அறிவது? தங்கத்தைக் கொண்டு மதிப்பை நிர்ணயிப்பதென்பது ஒரு தேசத்தின் நாணயத்திற்கு இல்லாது போய்விட்டதென்றால், அந்த நாணயம் வாங்கக்கூடிய பண்டங்களின் அளவைக்கொண்டே ஒரு தேசத்தின் நாணய மதிப்பை நிர்ணயிக்க முடியும். அதாவது விலைவாசியின் ஏற்ற தாழ்வைக் கொண்டே இதை அளந்தாக வேண்டும். விலைவாசிகள் ஏறிவிட்டன என்றால், உதாரணமாக, ஒரு ரூபாய்க்கு முன்பு வாங்கின அதே பொருளை இரண்டு ரூபாய்க்கே இப்பொழுது வாங்க முடிகிறதென்றால், ரூபாயின் மதிப்பு பாதியாக குறைந்து விட்டது என்று ஆகிறது. தங்கமும் விலைக்கு வாங்கக்கூடிய ஒரு பொருளே. ஆகையால் அதன் விலையும் பணத்தின் மதிப்பை அளக்க இன்னும் உதவும். ஆனால் பணம் படைத்தவர்கள் மாத்திரமே விரும்பிப் போட்டி போட்டு வாங்கி விடக்கூடிய பொருள் தங்கம். ஆகையால் ஒரு தேசத்தின் நாணயத்தின் மதிப்பு எவ்வளவு தூரம் குறைந்திருக்கிறது என்பதை அறிய இருக்கும் சரியான வழி வேறு ஒன்றும் உண்டு. சாதாரணமாக வாழ்க்கையில் எல்லோருக்கும் பல பொருள்கள் தேவையாகின்றன. ஏழைக்கும் உயிர்வாழ உணவு தேவை. இவற்றை இவனும் வாங்கியாக வேண்டி இருக்கிறது. ஆகவே இதற்காகும் செலவு வாழ்க்கைச் செலவு. இந்த வாழ்க்கைச் செலவு ஒரு தேசத்தில் அதிகரித்திருக்கிறது என்றால்—உதாரணமாக இங்கிலாந்தில் 1939-ல் 5 பவுனில் வாழ முடிந்தவனுக்கு இப்பொழுது 10 பவுன் வேண்டியிருக்குமாயின்-இதன்பொருள் என்ன? ஸ்டர்லிங்கின் மதிப்பு,

முன்பு இருந்ததற்கு இப்பொழுது பாதிதான் இருக்கிறது என்பதே அதன் அர்த்தம். இந்தியாவில், இந்த யுத்தம் ஆரம்பமாகும் முன்பு வாழ்க்கைச் செலவு 100 என்றால் அதே செலவு இன்று 280 ஆக இருக்கிறது. சர்க்கார் நிர்ண யித்திருக்கும் விலையைக்கொண்டு பார்த்த கணக்கு இது. நிர்ணயித்த விலைக்கோ அநேக பொருள்கள் கிடைப்ப தில்லை. திருட்டுத்தனமாக அதிக விலை கொடுத்து வாங்க வேண்டியிருப்பதைக் கவனித்தால் வாழ்க்கைச் செலவு 300க்கு அதிகமாகப் போகும். ஆகையால் ரூபாய்க்கு முன் பிருந்த மதிப்பில் மூன்றில் ஒருபகுதி மதிப்பே இனறிருக் கிறது என்பது ஆகிறது. இங்கிலாந்திலோ, அமெரிக்கா விலோ வாழ்க்கைச் செலவு இவ்வளவு மோசமாக ஏற வில்லை. 1939-ல், பிரிட்டனில் வாழ்க்கைச் செலவு 100 என் றால் இப்பொழுது 120 தான். அமெரிக்காவிலும் அதே நிலைமையே. ஆகையால் அமெரிக்க டாலரின் மதிப்பும், பிரிடடிஷ் ஸ்டர்லிங்கின் மதிப்பும் கொஞ்சம் குறைந் திருந்தாலும், ரூபாயைப்போல் அவ்வளவு மோசமாக குறைந்துவிடவில்லை என்பதற்கு இதுவே போதிய ஆதாரம்.

தன் நாணயத்தின் மதிப்பு குறைந்திருப்பதைப் பிரிட டன் விரும்பாததனாலேயே 1925-ல் திரும்பவும் தங்க நிர்ணய முறையைக் கைக்கொண்டது என்று முன்பு சொன்னோம். ஆனால் அதே பிரிட்டன், யுத்த அவசியம் எதுவும் இல்லாதிருந்தும் 1931–ல் தங்க நிர்ணயத்தைக் கைவிட்டு ஸ்டர்லிங்கின் மதிப்பைக் குறைத்துக்கொள்ள வேண்டியது ஆயிற்று. இதில் அடங்கி இருக்கும் மர் மமே நமக்கு இங்கு அவசியம்.

பணத்தைப் போடுவது சர்க்கார்தான். ஆனால், பணம் இருப்பதோ பண முதலாளிகளான பாங்கிக்காரர் களிடத்தில். விளைபொருள்களைப் பாடுபட்டுப் பயிரிட்டு உற்பத்தி செய்கிறவன் விவசாயி. தொழிற்சாலைகளிலும் தொழிலாளரே பொது ஜனங்களுக்குத் தேவையான அநேக பொருள்களை உற்பத்தி செய்கிறார்கள். ஆனால் விவசாயிக்கு அவன் வயிற்றுக்குப் போதிய உணவுப்

பொருள் கிடைப்பதில்லை. நெசவு மில்லில் துணி நெய்ப வனுக்கு. கட்டப் போதிய துணி கிடையாது. உழைப்பு இவர்களுடையது ஆனாலும், இவர்கள் பட்ட பாட்டின் பலனே உணவுப் பொருள்களும் பிற பொருள்களும் ஆயி னும், அவை, நிலம் படைத்த முதலாளிகள், தொழிற்சாலை முதலாளிகளின் சொத்து ஆகிறது. சமதர்ம தத்துவம் இல்லாத எல்லா நாடுகளிலும் நடப்பது இதுதான். பாட்டாளிகளை ஏய்ப்பதில் எல்லா முதலாளிகளும் ஒரே தரத்தினரே. என்றாலும் பணம் படைத்த முதலாளி, பண்டம் படைத்த முதலாளி என்று முதலாளிகள் இரு வகையினர் இருப்பதையே காண்கிறோம். இவ்விரு தரப் பினருக்குள் சதா போட்டி. முதலாளித்துவ முறை இருக் கும் நாடுகளில் மக்களின் பட்டினிக்கே அன்றி மற்றும் பல சங்கடங்களுக்கும் இந்த முதலாளிகள் போட்டியே மூலகாரணம்.

பாங்க் முதலாளியிடம் பணம் இருக்கிறது. ஆகையால், பணத்தின் மதிப்பு குறையக் கூடாது என்பது இவன் குறி. பண்டம் வைத்திருக்கும் முதலாளிகளோ, அவனிடமிருக் கும் பொருள்களின் மதிப்பு குறைந்துவிடக்கூடாது என்பது கவலை. முதலாளிகள் அல்லாத மற்றவர் களுக்கு துன்பமில்லாது இருக்கவேண்டுமானால் பண்டத் திற்கு ஏற்ற அளவில் பணம் இருக்கவேண்டும். பொருள் கள் உற்பத்திக்கு ஏற்றபடி சமமாகப் பணம் இருக்க வேண்டியதே ஒரு தேசத்தின் பொதுவான க்ஷேமத்திற்கு அவசியம். ஆனால் முதலாளிகளுக்கோ தங்கள் சுயநலத் தைத் தவிர பிறர் வாழ்வைப்பற்றிய கவலையே கிடையாது. பணத்தை வைத்துக்கொண்டிருக்கும் பாங்க் முதலாளிகள் விரும்புவது என்ன? பணம் மலிந்துவிடக்கூடாது என்பது இவர்கள் ஆவல். அதாவது பணத்தின் மதிப்பு குறைந்து விடக்கூடாது. பணம் மலிந்தால் குறைந்த வட்டிக்குப் பணம் கொடுக்க வேண்டி வரும். இது பாங்கர்களுக்கு லாபமல்ல. பணக் கிராக்கி வந்தால் அதிக வட்டி வாங்க லாம். இது அவர்களுக்கு லாபம். தொழிற்சாலை முதலாளி களுக்கே யன்றி மற்றவர்களுக்கும் பணத்தைக் கடனாகக்

கொடுப்பவர்கள் பாங்கிக்காரர்கள். கந்தப்பிள்ளை பாங்கிக்காரர் அல்ல. என்றாலும் முடைப்பட்ட கோவிந்தக் கோனருக்கு இவர் கடன் கொடுத்திருந்தார். இப்பொழுது பணம் மலியாமலிருந்தால் கோனரிடம் கொடுத்திருந்த தொகைக்கு அரை வேலி நிலம் கந்தப்பிள்ளைக்குக் கிடைத்திருக்கும். இன்று பணம் மதிப்பை இழந்ததால் அந்தப் பணத்திற்கு கால்வேலி நிலம்கூட கிடைக்காதுபோய் விட்டதை கண்டோமல்லவா? பணத்தின் மதிப்பு அதிகரித்திருக்கவேண்டியது கடன்கொடுத்தவர்கள் நன்மைக்கு அவசியம். ஆகவே பணத்தின் மதிப்பு உயர்ந்து, அது அதிக தங்கத்தை வாங்கக்கூடியதாக இருக்க வேண்டும் என்பதே பாங்கி முதலாளிகளின் முக்கிய முயற்சி.

பண்டங்களைப் படைத்த முதலாளிகளின் எண்ணம் முற்றிலும் மாறானது. பணத்தின் மதிப்பு குறைவது தங்கள் க்ஷேமத்திற்கு அத்தியாவசியம் என்பது இவர்கள் நினைப்பு. பாங்கி முதலாளிகளிடம் இவர்கள் கடன் படுகிறார்கள். பணம் மலிந்ததாலேயே, பணத்தின் மதிப்பு குறைந்து நிலத்தின் மதிப்பு ஏறியதனாலேயே, கால் வேலிக்கும் குறைவான நிலத்தைக் கொடுத்துவிட்டு கடனைத் தீர்த்துவிடுவது கோவிந்தக் கோனருக்கு சுலபமாயிற்று. ஒரு ஆட்டையும் குட்டியையுமே சொத்தாக கொண்டிருப்பவனுக்கு ரூ. 10 கடன் இருக்கிறது என்று வைத்துக் கொள்ளுவோம். ஆடும் குட்டியும் ரூ. 10-தான் பெறும் என்றால், அவற்றை விற்று கடன் கொடுத்தால் இவனிடம் மிஞ்சுவது எதுவுமில்லை. ஆட்டின் விலை ஏறி, ஆடு மாத்திரம் ரூ. 10 ஆனால் இவனுக்குக் குட்டி மிச்சம். ஆகையால் பொருள்களின் விலை ஏறுவது பொருள் படைத்தவர்களுக்கு லாபம். இதனாலேயே பணத்தின் மதிப்பு குறைந்து அதன் பலனாக பண்டங்களின் விலை அதிகரிக்கவேண்டும் என்பதில் இந்த பண்ட முதலாளி வர்க்கத்தினர் கண்ணும் கருத்துமாக இருக்கிறார்கள்.

பண்டங்களைப் படைத்த முதலாளிகள், பணம் மலியவேண்டுமென்பதில் அக்கறை கொண்டிருப்பதற்கு இன்னும் ஒரு காரணமும் உண்டு. பணம் மலிந்தால்

சரக்குகளின் விலை ஏறும். இவ்விதம் விற்றால் சரக்குக்கு அதிக விலை வருவதால் அதிக லாபம் வரும். வெளி நாட்டினர், மற்ற நாட்டுச் சரக்குகளைவிட தங்கள் சரக்குகளையே அதிகமாக வாங்கும்படி செய்வதும் பணம் மலிவதால் சாத்தியம். தொழிற்சாலை முதலாளிகள் பணத்தின் மதிப்பு குறைய வேண்டுமென ஆசைப்படுவதன் அந்தரங்கம் இதுதான். ஒரு நாட்டில் பணம் மலிவதால் அந்த நாட்டுச் சரக்குகளின் ஏற்றுமதி எப்படி அதிகரிக்கும் எனக் கேட்கலாம். இதைப் புரிந்து கொள்ளுவதற்கு ஓர் உதாரணத்தை கவனிப்போம்.

நமக்கு மலேயாவிலிருக்கும் பினங்கிலிருந்தும் இலங்கையில் கொளும்பிலிருந்தும பாக்கு வந்துகொண்டிருந்தது. பினங்கில் செலாவணியில் இருப்பது வெள்ளி என்ற நாணயமல்லவா? சாதாரணமாக இந்த ஒரு வெள்ளி, நம் ஒன்றரை ரூபாய் மதிப்புடையது. கொளும்பிலிருப்பதோ நம் ரூபாய் நாணயமே. சென்னையில் ஒரு மணங்கு பாக்கு விலை ரூ. 3-8-0 என்று வைத்துக்கொள்ளுவோம். வரத்துச் செலவு சேர்ந்ததே இந்த விலை. ஆகையால் கொளும்பில் இதே பாக்கு விலை ரூ 3 ஆக இருக்கும். அதே சமயத்தில் பினங்கில் இதே ஒரு மணங்கு விலை 2 வெள்ளியாக இருக்கும். நமது ரூபாயில் கணக்குப் பார்த்தால் பினங்கு விலையும் ரூ. 3-தான் ஆகிறது.

திடீரென்று மலாய் நாட்டு நாணயத்தின் மதிப்பு குறைந்துபோகிறது என்று வைத்துக்கொள்ளுவோம். ஒன்றரை ரூபாய்க்கு ஒரு வெள்ளி என்றிருந்த வெள்ளியின் மதிப்பு குறைந்து ஒரு ரூபாய்க்கு ஒரு வெள்ளி என்று ஆகிவிட்டால் நிலைமை என்ன? பாக்கு விலை பினங்கில் ஒரு மணங்கு 2 வெள்ளி என்றே இருக்கும். பினங்கிலிருந்து பாக்கு தருவித்துக்கொண்டிருந்த சென்னை வியாபாரி முன்பு ஒரு மணங்குக்கு ரூ. 3 தரவேண்டியிருந்தது. ஆனால் வெள்ளியின் மதிப்பு குறைந்ததால் இப்பொழுது இரண்டு ரூபாய் கொடுத்தால் போதும். வெள்ளியின் மதிப்பு குறையாமலிருந்த சமயத்திலும் பினங்கில் பாக்கு மணங்கு 2 வெள்ளியாகவே இருந்தது. மதிப்

புக் குறைந்தபிறகும் அந்த 2 வெள்ளி விலையே பிணங்கு பாக்குக் கிடங்குக்காரருக்கு கிடைக்கிறது. ஆகையால் தம் நாட்டின் நாணயத்தின் மதிப்பு குறைந்ததால் இவருக்கு நஷ்டம் எதுவுமே இல்லை. ஆனால் இதே சமயத்தில் கொளும்பு மார்க்கெட்டில் பாக்கு விலை நிலவரம் என்ன என்பதையும் பார்ப்போம். அங்கே செலாவணியில் இருப்பதும் நம் ரூபாயே அல்லவா? இங்கு ரூபாய்க்கு இருக்கும் மதிப்பே அங்கும் இருக்கும். எனவே கொளும்பில் பாக்கு விலை முன்பிருந்ததைப் போலவே ரூ. 3. கொளும்பிலிருந்தும் பிணங்கிலிருந்தும் பாக்கை தருவித்து வந்த சென்னை வியாபாரி என்ன செய்வார்? மலாய் நாட்டு நாணய மதிப்பு குறைந்ததால் ரூ. 2-க்கே ஒரு மணங்கு பாக்கு கிடைக்கிறது. கொளும்புப் பாக்கை வாங்கு வதானாலோ ரூ 3 தரவேண்டும். ஆகையால் பிணங்குப் பாக்கை மாத்திரமே அவர் வாங்குவார். இதனால் பிணங்குப் பாக்கு ஏராளமாகவும், சுலபத்திலும் விற்றுவிடும். பணம் மதிப்பை இழந்ததால் பிணங்கு பாக்கு மண்டிக்காரருக்கு வரும் நன்மை இது. பண்டம படைத்த முதலாளிகள் யாவருமே பணம மலிய வேணடுமென விரும்புவதன் மூல காரணம் இதுவே. வெளிநாடுகளில் அதிகச் சரக்குகளை விற்கவேண்டுமென்பதில் பிரிட்டனுக்கு, அமெரிக்காவும் ஜெர்மனியும் பலத்த போட்டியாக இருந்தன. அமெரிக்க, ஜெர்மன் நாணயங்களின் மதிபபை விட ஸ்டர்லிங்கின் மதிப்பு குறைவானதாக இருக்கவேண்டும் என்று பிரிட்டிஷ் தொழிற்சாலை முதலாளிகள் ஆசைப்பட்டதின் அந்தரங்கம் இப்பொழுது தெளிவாகிறதல்லவா?

முதலாளிகள் ஆதிக்கத்தைக் கொண்டதே பிரிட்டிஷ் சர்க்கார். அந்த முதலாளிகளிலோ இரு நோக்கங் கொண்டவர்கள் இருக்கிறார்கள் என்பதையும் கண்டோம். நாணயச் செலாவணி விஷயத்தில், இதில் எந்தத் தரப்பு முதலாளிகளின் இஷ்டப்படி சர்க்கார் நடப்பது? போன மகாயுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷ் சாக்காருக்கு உண்டான முக்கிய சஞ்சலம் இதுதான். கடைசியாக, பாங்க் முதலாளிகளின் இஷ்டப்படி ஸ்டர்லிங்கின் மதிப்பை அதிகரிப்பது என்ற

முடிவிற்கே பிரிட்டிஷ் சர்க்கார் வந்தது. 1925-ல் பிரிட்டன் திரும்பவும் தங்க நிர்ணய முறைக்கு வந்ததின் ரகசியம் இதுவே. இதற்கு மற்ருேர் முக்கிய காரணமும் உண்டு. உலகத்தின் பொருளாதாரப் போக்குக்கும் செலாவணிக்கும் ஆஸ்தான பீடமாக இருந்தது லண்டன். அந்தப் பீடத்தை எப்படியாவது தட்டிப் பறித்துவிட வேண்டுமென்பது அமெரிக்காவின் நீண்டகால முயற்சி. பிரிட்டிஷ் பணததின் மதிப்பு குறைந்தால், மதிப்பு குறைந்த அந்தப் பணத்தை கடனுக வாங்கிக்கொள்ள வெளி நாட்டார் தயாராக வரமாட்டார்கள். மதிப்பு குறையாதிருந்த அமெரிக்கப் பணத்தைக் கடன் வாங்கப் போய்விடுவார்கள். இதனுல் பிரிட்டனின் மதிப்பு மற்ற நாடுகளிடமே யன்றி பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலும் குறைந்துபோகும். அத்துடன் உலகப் பொருளாதார ஆஸ்தான பீடம் லண்டன் என்று இருந்தது மாறி வாஷிங்டன் என்பதாகிவிடும். ஸ்டர்லிங்கின் மதிப்பைக் குறைத்து பிரிட்டிஷ் மதிப்பையே பாழாக்கிக்கொண்டுவிட வேண்டாம் என்பதற்காகவே பணத்தின் மதிப்பைக் குறைக்க பிரிட்டிஷ் சர்க்கார் மறுத்தது. ஆகையால் தன் மதிப்புக்காக பிரிட்டிஷ் கைத்தொழில உற்பத்தியின் நன்மையை ஓர் அளவுக்குத் தியாகம செய்யவும் பிரிட்டிஷ் சர்க்கார் தயாராக இருந்தது. சென்ற யுத்தத்திற்குப் பின்னுல் பிரிட்டிஷ் தொழிற்சாலைகளின் நன்மைக்கு மாருக இந்தியாவில் சில தொழிற்சாலைகள் விருத்தியாக பிரிட்டிஷ் சர்க்கார் இடம் கொடுத்தது என்ருல், அதன் மர்மமும பிரிட்டன் விரும்பிய பண மதிப்பில்தான் அடங்கியிருக்கிறது.

ஸ்டர்லிங் பணத்தின் மதிப்பை குறைய விடுவதில்லை என்று பிரிட்டிஷ் சர்க்கார் கைக்கொண்ட முறையின் பலன் என்ன? பிரிட்டிஷ் தொழிற்சாலைகளில் உற்பத்தியான பொருள்களை வெளிநாடுகளில் அதிகமாக விறக முடியவில்லை. இதனுல பிரிட்டனில் பொருள் உற்பத்தி குறைந்தது. தொழிலாளரிடையே வேலையில்லாத் திண்டாட்டம் மிகுந்து பொருளாதார நெருக்கடியும் அதிகரித்தது. ஸ்டர்லிங்கின் மதிப்புக் குறையக்

கூடாது என்பதற்காக பிரிட்டிஷ் சர்க்கார் எந்த தங்க நிர்ணய முறையை 1925-ல் கைக்கொண்டதோ அதே முறையையே 1931-ல் அந்தச் சர்க்கார் கைவிடவேண்டிய தாயிற்று. அதாவது பிரிட்டிஷ் பண்ட முதலாளிகள் இஷ்டத்திற்கு உடன்படவேண்டிய நிலையையே பிரிட்டிஷ் சர்க்காருக்கு வந்தது என்றே சொல்லவேண்டும். இதே சர்க்கார் இந்த யுத்தம் முடிந்தபின்னர் என்ன செய்வார் கள்? பாங்கிக்காரர்களின் இஷ்டப்படி நடப்பார்களா? அல்லது, தொழிற்சாலை முதலாளிகளின் சௌகரியத்திற்கு எது நல்லதோ அந்த முறையையே தங்கள் நாணயச் செலாவணி விஷயத்தில் கையாளுவார்களா? ஸ்டர்லிங் கின் மதிப்பு குறையாமலிருப்பது அவசியம் என்று எண்ணுவார்களா? அல்லது, தொழிற்சாலைகளில் உற் பத்தி மிகுந்து, வெளிநாடுகளில், பிரிட்டிஷ் சரக்குகளின் விற்பனை அதிகரிப்பதற்கு ஸ்டர்லிங்கின் மதிப்பு குறைய விடுவது அவசியம் என்ற முடிவிற்கே வருவார்களா? இங்கிலாந்தில் ஆயிரம் கோடி ஸ்டர்லிங்கை இருப்பாக வைத்திருக்கும் இந்தியா, ஆழ்ந்து சிந்திக்கவேண்டிய விஷயம் இதுதான்.

1926-ஆம் வருஷத்திற்குப்பிறகு ஆரம்பமாகி 1931-ல் தாங்கமுடியாத நிலைக்கு வந்துவிட்ட பொருளாதார மந் தத்தின் படிப்பினையை பிரிட்டன் மறந்துவிடவில்லை. மேலும் இந்த யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டனில் பட்டினிப் பசியையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் போக் கியே தீருவதென்று, அதற்கென்றே பிரிட்டிஷ் திட்ட மொன்றும் தயாரிக்கப்பட்டிருக்கிறது. யுத்தம் முடிந்த தும தொழிற்சாலைகளில் உற்பத்தியை எப்படி அதிகரிப்பது என்பதற்கான முறையிலேயே பிரிட்டிஷ் தொழிற்சாலை கள் வேலை செய்து வருகின்றன. எனவே வேலையில்லாத் திண்டாட்டம் இல்லாதிருக்கவேண்டுமானால் உற்பத்தி அதிகரிக்கவேண்டும். அதிகரிக்கும் உற்பத்தி தடைப் படாமலிருக்கவேண்டுமாயின் உள்நாட்டிலும் வெளியி லும் வாங்குவோர் அதிகமாக வேண்டும். சுபிட்சத்திற்கு உள்ள வழி இது. பிரிட்டிஷ் பொருளாதார பண்டித

ரான ஸ்ரீ ஜி. டி. ஹெச். கோல், சமீபத்தில் லண்டன் 'டெயிலி ஹெரால்டு' பத்திரிகையில் எழுதிய கட்டுரையில், யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷார் ஏழைகளாகி விடாமலிருப்பதற்கு என்ன வழி என்பதை எடுத்துக் காட்டியிருக்கிறார். அவர் கூறுவதாவது :

"இந்த யுத்தத்திற்குப் பிறகு, வெளிநாடுகளில் நாம் முன்பு போட்டிருந்த முதலில் பெரும் பகுதியை நாம் இழந்தே விடுவோம். நமது வர்த்தகக் கப்பல்களின் அளவை முன்னர் இருந்ததைப்போல நாம் பெருக்கிக்கொள்ளுவதற்கு கொஞ்ச காலம் செல்லும். உலகத்தின் பொருளாதாரத்திற்கே இங்கிலாந்து கேந்திர ஸ்தானம் என்ற நிலைமையில் நாம் திரும்பவும் இருக்க முடியுமா என்பதும் சந்தேகம். எது எப்படியானாலும், வெளிநாடுகளிலிருந்து ஏராளமான மூலப் பொருள்கள் நமக்கு வரவேண்டியிருக்கிறது. இவ்விதம அதிகப் பொருள்களைத் தருவிப்பதற்கு நாம் அதிகச் சரக்குகளை வெளிநாடுகளில் விற்குகவேண்டும். இதற்கு, நமது சரக்குகளை விற்க, அதிக வெளிநாட்டு மார்க்கெட்டுகளைக் கண்டுபிடிக்கவேண்டியது அவசியமாகிறது. இதைச் செய்யாவிட்டால் நமது வாழ்க்கை அந்தஸ்து சீர்கேடு அடையாமல் இருக்கும என்று நமப இடமில்லை. இந்த விதத்தில் பார்த்தால் யுத்தம் முடிந்ததும் பிரிட்டன் ஏழைப்பட்ட நாடாகவே இருக்கும். ஆனால் உலக வர்த்தகத்தில் குறிப்பிட்ட அந்தஸ்தும், வெளிநாடுகளில் நமது மார்க்கெட்டுகளை விருத்தி செய்வதும் முடிந்தால், 1939-ல் இருந்ததைவிட நமது வாழ்க்கை நிலை குறையவேண்டியிருக்கும் என்பதற்கு எவ்வித காரணமும் இல்லை."

இந்தியர் ஓட்டாண்டிகளாவதைப்பற்றிப் பிரிட்டிஷ் சர்க்கார் கவலைப்படாமலிருக்கலாம். ஆனால் பிரிட்டிஷார் ஏழ்மைப்பட அந்த சர்க்கார் பார்த்துக்கொண்டிருக்காது. கைத்தொழில் அபிவிருத்தியும் சரக்குகள் உற்பத்தியும் பிரிட்டனில் அதிகரிப்பதற்கு வேண்டிய சகல வசதிகளையும் பிரிட்டிஷ் சர்க்கார் செய்து கொடுக்கும். இதற்காக தங்கள் நாணயமான ஸ்டர்லிங்கின் மதிப்பு, தங்க விலையிலோ, அமெரிக்கா போன்ற நாடுகளின் நாணய அள

விலோ குறையும்படியும் செய்யும். உலகப் பொருளா தாரத்துக்கு லண்டன் ஆஸ்தான பீடமாக இருந்தது போய்விட பிரிட்டன் சம்மதிக்குமா என்று சிலர் சிந்திக்கலாம். வாஸ்தவத்தில் பிரிட்டனுக்கு இதில் சம்ம தம் இருக்காதுதான். ஆனால் பழைய இந்த அந்தஸ்தை காத்துக்கொள்ளும் காலம் மலையேறிவிட்டது. உலகத்தின் தங்கமெல்லாம் பெரும்பாலும் அமெரிக்காவில் போய் குவிந்திருக்கிறது. பிரிட்டனும் தன்னிடமிருந்த தங்கத்தை அமெரிககாவினிடம் கொடுத்து யுத்தத் தேவைக்கான பொருள்களை வாங்கிக்கொண்டிருக்கிறது. ஆகையால், யுத்தத்திற்குப் பின்னால் சர்வதேச நாணயச் செலாவணி நிரந்தரத்திற்கு அவசியமான தங்கத்திற்கு அமெரிக்கா வின் தயவுக்கு தொங்கவேண்டிய நிலைமையிலேயே பிரிட்ட னுள்பட அநேக நேச நாடுகளும் இருந்து வருகின்றன. எதிர்கால நாணயச் செலாவணி ஒத்துழைப்புக்கென்று கேன்ஸ் திட்டம், ஒயிட் திட்டம் என்ற இரு திட்டங்களும் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றின்படி அமெரிக்கா 117 கோடி 20 லக்ஷம் டாலர் பெருமானமுள்ள தங்கத் தைத் தரவேண்டும். மற்ற 30 நாடுகளும் சேர்ந்து 42 கோடி டாலர் தங்கத்தையே தருவார்கள். அதாவது சர்வ தேச நாணயச் செலாவணிக்கு வேண்டிய தங்கத்தில் 74 சத விகிதத்தை அமெரிக்கா தரவேண்டியிருக்க மற்ற நாடுகளெல்லாம் சேர்ந்து 26 சதவிகிதமே கொடுப்பார்கள். ஆனால் இந்த நாணயச் செலாவணி சம்பந்தமான வோட்டு விஷயத்தில் மற்ற தேசங்களுக்கு 80 சத விகித வோட்டுரி மையும் அமெரிக்காவுக்கு 20 சத வோட்டுரிமையுமே இருக் கும். எனவே இந்த நாணயச்செலாவணி ஒத்துழைப்புமுறை ஸ்திரமாவதற்கு முன்னாலேயே அமெரிக்காவில் முக்கியஸ் தர்களின் எதிர்ப்பு பலப்பட்டுவருகிறது. இந்த எதிர்ப்பை ஆதரிக்கும் நியூயார்க் 'ஒர்ல்டு டெலகிராம்' என்ற பத்திரி கையின் பொருளாதாரப் பகுதி ஆசிரியர் ஸ்ரீ ரால்ப் ஹென் டர் ஷான் சமீபத்தில் கீழ்வருமாறு எழுதினர் :

" சர்வ தேச நாணயச் செலாவணி சம்பந்தமான திட் டங்கள் விஷயத்தில் நாம் அனுசரிக்கும் கொள்கை, உலகத்தின் எதிர்கால சமாதானத்தையே முக்கிய

நோக்கமாகக் கொண்டதாக இருக்கவேண்டும். அடிக்கடி ஐரோப்பா யுத்தத்தில் இறங்கிவருகிறது. இந்த யுத்தங்களுக்கு ஆகும் செலவுகளையெல்லாம் கொடுக்க இன்னொரு நாடு தயாராக இருக்கிறது என்பதையே ஐரோப்பா திரும்பவும் கண்டுகொள்ளுமானால், அது திரும்பவும் மற்றோர் யுத்ததில் இறங்கிவிடக்கூடும். ஆனால் இதற்கு மாறாக யுத்தத்தில் இறங்கியதன் பொறுப்பை ஐரோப்பாவே அனுபவிக்கும்படி விட்டு விட்டால் திரும்பவும் துப்பாக்கியை தூக்கும் புத்தி அவ்வளவு சீக்கிரத்தில் அதற்கு வராது.''

இவ்விதம் இருந்துவரும் எதிர்ப்புகளையும், பிரிட்டன் அடைந்திருக்கும் நிலைமையையும் ஆழ்ந்து கவனித்தால் உலகப் பொருளாதார விஷயத்தில் இங்கிலாந்துக்கு இருந்த கௌரவம் திரும்பப்போவதில்லை என்பது தெளிவாகும். ஆகையால் பிரிட்டன் ஆசைப்பட்டாலும் உலகத்தின் பொருளாதார ஆஸ்தான பீடமாக லண்டன் இனி இருப்பது சந்தேகம். ஆகாத காரியத்தில் ஆசை வைத்து, ஸ்டர்லிங்கின் மதிப்பு குறையாமலிருப்பதற்குப் பாடுபட்டு, திரும்பவும் பிரிட்டன் தன் கைத்தொழில்களின் நன்மையை தியாகம் செய்யும் என்று எண்ணுவது பைத்தியக்காரத்தனம். எனவே யுத்தத்திற்குப் பிறகு என்ன நடக்கும்? ஸ்டர்லிங்கின் மதிப்பு இப்பொழுது அவ்வளவாகக் குறையவில்லையானாலும் யுத்தத்திற்குப் பிறகு குறையும். தனது வெளிநாட்டு ஏற்றுமதியின் சௌகரியத்தை முன்னிட்டு ஸ்டர்லிங்கின் மதிப்புக் குறையவும் பிரிட்டிஷ் சர்க்கார் உதவியாக இருக்கும்.

அதேசமயத்தில் இந்தியாவில் நிலைமை என்னவாகும்? இங்கு ரூபாயின் மதிப்பு படுபாதாளத்திற்குப் போயிருக்கிறது என்பதை முன்பே கவனித்தோம். இதே நிலைமையே இருக்கும்படிச் செய்வார்களா? இதுவே அடுத்தபடியாக நாம் கவனிக்கவேண்டிய விஷயம். யுத்தத்திற்குப் பிறகு, பிரிட்டிஷார் ஏழைகளாகி விடாமலிருக்க வேண்டுமானால் இரண்டு விஷயங்கள் முக்கியம் என்று பிரிட்டிஷ் பொருளாதாரப் பண்டிதர் ஸ்ரீ கோல் சொன்னதை முன்னால் பார்த்தோம். வெளிநாடுகளிலிருந்து

பிரிட்டனுக்கு மூலப் பொருள்கள் அதிகமாக வருவதும், பிரிட்டிஷ் சரக்குகள் வெளி மார்க்கெட்டுகளில் அதிகமாக விற்பதும் அவசியம் என்றுர் அவர். இந்த இரண்டுக்கும் பிரிட்டனுக்கு ஏற்ற நாடாக அமைந்திருப்பது இந்தியா. இந்தியாவுக்கு அதன் சுதந்திரம் மறுக்கப்பட்டு வருவதன் முக்கிய ரகசியம் இதுவே என்பதும் யாருக்கும் தெரியாத மூடுமந்திரம் அல்ல. யுத்த அவசியத்தை உத்தேசித்தாவது இச்சமயத்தில் இந்தியாவில் கைத்தொழில் அபிவிருத்தி அத்தியாவசியம். ஆனல் யுத்த முயற்சிக்கு பல தொழில்களின் வளர்ச்சி அவசியமாக இருந்தாலும், வளர வசதி இருக்கும் இச்சமயத்தில் இந்தியாவில் கைத்தொழில் அபிவிருத்தி உண்டாக இடங்கொடுப்பதில்லை என்பதே பிரிட்டிஷ்-இந்திய சர்க்கார்களின் விடாப்பிடிக் கொள்கையாக இருந்து வருகிறது என்பதையும் இப்பொழுது பார்க்கிறேம். ஆகையால், யுத்தத்திற்குப் பிறகும் பிரிட்டன் சுபிட்சமாக இருப்பதற்கு எந்த நல்ல மார்க்கெட்டு அவசியமோ அந்த நல்ல மார்க்கெட்டாகவே இந்தியாவை வைத்திருப்பது என்பதே பிரிட்டிஷ் கொள்கை என்று யூகிப்பது தவருகாது.

இரண்டாவதாக பிரிட்டனுக்கு வேண்டியது மூலப் பொருள்கள் அல்லவா? கைத்தொழில் வளர்ச்சி இல்லை என்றல் விவசாயத்தின் மூலம் மூலப்பொருள்களை உற்பத்தி செய்து பிறருக்கு விற்று வாழ்வதைத் தவிர இந்தியாவுக்கு வேறு கதி இருக்காது. இந்திய மூலப் பொருள்களை பிரிட்டன் வாங்கிக்கொள்ளும். பிரிட்டிஷ் சரக்குகளையும் இங்கு அனுப்பி விற்கும். பிரிட்டிஷ் க்ஷேமத்திற்கு வேண்டிய இந்த இரண்டும் இந்தியாவினல் அவர்களுக்குக் கைகூடும். மலாய் நாட்டு நாணயத்தின் மதிப்பு குறைந்ததால் பினங்கு பாக்கு மண்டிக்காரருக்கு அதிகப் பாக்கை விற்க அது சௌகரியமாயிற்று என்பதை கவனித்தோம் அல்லவா? ஸ்டார்லிங்கின் மதிப்பு குறைவது பிரிட்டிஷ் சரக்குகள் வெளிநாடுகளில் அதிகமாக விற்க ஒருவசதி. நம் ரூபாயின் மதிப்போ அதிகமாகக் குறைந்திருக்கிறது. இதனல் கணக்கற்ற கஷ்டங்களையும் அடைந்துவருகிறேம்.

என்றாலும் வெளி தேசங்களில் இந்திய மூலப்பொருள்களை அதிகமாக விற்க நம் நாணயத்தின் மதிப்பு குறைந்திருப்பது வாஸ்தவத்தில் ஒரு வசதியே. ஆனால் மூலப்பொருள்களை நம்மிடம் வாங்கவேண்டியிருக்கும் பிரிட்டன், இந்த வசதியை நமக்கு விட்டுவைக்குமா என்பதே கேள்வி.

ஒரு தேசத்தின் நாணய மதிப்பு குறைவாயும், அதே சமயத்தில் மற்றொரு நாட்டின் நாணய மதிப்பு உயர்ந்தும் இருக்கக்கூடும் நாணய மதிப்பின் ஏற்ற தாழ்வு அந்தந்த நாட்டின் பொருளாதார நிலைமையைப் பொறுத்தது. ஆனால் இந்தியா விஷயத்திலோ நிலைமை முற்றிலும் வேறு. பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தியருக்கு அவர்களுடைய பிறப்புரிமையான சுதந்திரம் இல்லை என்பது மாத்திரமல்ல. நம ரூபாய்க்கும், கால வர்த்தமானத்தை அனுசரித்து, மதிப்பில் உயரவோ அன்றிக் குறையவோ இயற்கையாக இருக்கவேண்டிய உரிமையும் கிடையாது. அப்படி இப்படி அசைய முடியாதபடி ஸ்டர்லிங்குடன் நம் ரூபாயை பிடித்துக்கட்டி இணைக்கப்பட்டிருக்கிறது. ஒரு ரூபாய்க்கு ஒரு ஷில்லிங் 6 பென்ஸ் என்று நாண மாற்று விகிதத்தை நிர்ணயித்திருக்கின்றனர். இப்படிப் பிணைத்திருப்பது ஏன் என்பது பெரிய கதை. அதன் ஆராய்ச்சி இங்கு அவசியமும் அல்ல. 1 ஷில்லிங் 6 பென்ஸுக்கு ஒரு ரூபாய். அதாவது ரூ. 13-5-4 - க்கு ஒரு ஸ்டர்லிங் பவுன் என்ற விகிதப்படியே நடக்க இந்திய ரிசர்வ் பாங்க், சட்டப்படி கடமைப்பட்டிருக்கிறது. யுத்த காலத்தை முன்னிட்டு இந்த விதியின் அமுல் இன்று தள்ளி வைக்கப்பட்டிருக்கலாம். ஆனால் பிரிட்டன் ஸ்டர்லிங்குக்கு வாங்கும் சரக்குகள் இப்பொழுதும் ஏறக்குறைய இந்த விகிதப்படியே இந்தியாவில் வாங்கப்படுகின்றன. யுத்தத்திற்குப் பிறகும் இந்தியா அடிமைப்பட்ட நாடாகவே இருக்குமானால், இந்த விகிதமே கட்டாயம் அமுலில் இருக்கும் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால் இந்த நிலைமையில் இந்திய நாணயத்தின் மதிப்பு குறைந்திருப்பது, இந்திய மூலப்பொருள்களை வாங்கும்

பிரிட்டனுக்கு நல்லதா? அல்ல. அது எப்படி என்பதை யும் பார்ப்போம்.

இந்தியருக்கு அழகான மேனியைத் தரும் சோப்பு கள் என்று சொல்லி இந்தியாவில் விற்க பிரிட்டனில் சோப்புகள் தயாராகின்றன. இவற்றைச் செய்ய மூலப் பொருளான மணிலாக் கொட்டையை இந்தியாவில் வாங்குகிறார்கள். பணப் பஞ்சகாலத்தில் இங்கு மணி லாக் கொட்டை பாரம் ரூ. 27-க்கு விற்றதுண்டு பணம் பெருகி, ரூபாயின் மதிப்பு குறைந்து விலைவாசி ஏறி இருக்கும் இச்சமயத்தில் அதே மணிலாக்கொட்டை பாரம் ரூ. 60 என்று வைத்துக்கொள்ளுவோம். ஒரு ரூபாய் ஒன்றரை ஷில்லிங்குக்குச் சமம் என்ற விதியோ இருக்கிறது. இதன்படி கணக்குப் பார்த்தால் முன்பு 2 ஸ்டர்லிங் பவுனுக்கு ஒரு பிரிட்டிஷ் கம்பெனி ஒரு பாரம் மணிலாக்கொட்டையை வாங்கிவிடலாம். ஆனால் இப்பொழுது, ரூபாயின் மதிப்புக் குறைந்திருக்கையில் நிலைமை என்ன? பாரம் ரூ. 60 ஆகிவிட்டதால் 4 ஸ்டர் லிங் பவுனுக்குத்தான் ஒரு பாரம் வாங்க முடியும். ஆகை யால் ரூபாயின் மதிப்புக் குறைந்திருப்பது, இந்திய மூலப் பொருள்களை வாங்கித் தீரவேண்டிய பிரிட்டிஷாருக்கு நஷ்டம். எனவே பெருகிய இந்தப் பணம் பிறகு சுருங்கி, ரூபாயின் மதிப்பு ஏறி, இந்தியாவில் விலை வாசிகள் மலிய வேண்டியது பிரிட்டிஷ் முதலாளிகளின் நன்மைக்கு அவசியமாகிறது. இந்திய நன்மையைவிட பிரிட்டிஷ் நன்மையே முக்கியமெனக் கருதும் பிரிட்டிஷ் சர்க்கார், யுத்தத்திற்குப் பிறகு இந்தியாவில் பணம் சுருங்குவ தையே விரும்பும். இந்திய சர்க்காரும் இதை நிறை வேற்றி வைக்கும். திரும்பவும் பினாங்கு பாக்கு மண்டிக் காரரைக் கொஞ்சம் கவனிப்போம். இந்தியாவிலும் இலங்கையிலும் நாணய மதிப்பு குறையாமல், மலாய் நாட்டு நாணய மதிப்பு மாத்திரம் குறைந்திருப்பதினா லேயே, கொளும்புப் பாக்கைவிடப் பினாங்கு பாக்கு அதிக மாக இந்தியாவுக்கு ஏற்றுமதியாக முடிந்தது. அதே போல மற்ற தேசங்களின் சரக்குகளைவிட பிரிட்டிஷ்

சரக்கே இந்தியாவுக்கு அதிகமாக இறக்குமதியாக வேண்டு மானல் பிரிட்டிஷ் நாணயத்தின் மதிப்பு குறைந்து, அதே சமயத்தில் இந்தியாவின் நாணய மதிப்பும் பிற தேச நாணய மதிப்பும் கூடியிருக்க வேண்டியது முக்கியம் என்பதாகிறது. ஆகவே பிரிட்டிஷ் இறக்குமதிக்கே அல்லாமல் ஏற்றுமதி அதிகமாவதற்கும் இந்தியாவில் நாணயச் செலாவணி சுருங்கவேண்டியது அவசியம்.

எனவே இந்த யுத்தத்திற்குப் பிறகு, பிரிட்டிஷாரின் அந்தஸ்து இப்பொழுது இருப்பதைப்போலவே இருக்கு மானல், இந்தியாவும் அடிமை நாடாகவே இருக்க வேண்டியிருந்தால், நாணயச் செலாவணியில் கீழ்க்கண்ட செப்படி வித்தைகள் கட்டாயம் செய்யப்படும்: (1) ஸ்டர் லிங்கின் மதிப்பு இப்பொழுது அதிகமாகக் குறையாமல் இருந்தாலும் யுத்தத்திற்குப் பிறகு குறையும்; (2) இந்தி யாவில் இப்பொழுது பெருகி யிருக்கும் பணம் யுத்தத் திற்குப் பின்னல் சுருக்கப்படும்.

## பணச்சுருக்கத்தால் ஆபத்து

இந்தியாவுக்கு இங்கிலாந்தில் இருக்கும் ஸ்டர்லிங் இருப்பு ஸ்டர்லிங் செக்யூரிடிகளாக மாற்றப்பட்டு, அவற்றிற்கு பதிலாக இந்தியாவில் நோட்டுகள் செலா வணிக்கு விடப்பட்டிருக்கின்றன என்பதை முந்திய அத்தியாயத்தின் ஆரம்பத்தில் கவனித்தோம். இந்த ஸ்டர்லிங் நிதி, நாணயச் செலாவணிக்கே முக்கியமாக ஈடுபடுத்தப்பட்டிருப்பதால் இது பின்னுல் நாணயச் செலாவணி சம்பந்தமான காரியங்களுக்கே உபயோகிக்கப் பட முடியும் என்பதையும் கண்டோம். ஆகவே ஸ்டர் லிங் நிதி இப்பொழுது இரு காரியங்களுக்கு மாத்திரமே பயன்பட்டிருக்கிறது. இங்கிலாந்தில் இந்தியாவுக்கு இருந்த ஸ்டர்லிங் கடனைத் தீர்த்து அதை இங்கு ரூபாய்க் கடனுக மாற்றுவதற்கு இந்த ஸ்டர்லிங் நிதி உபயோக மாகியிருப்பது முதல் காரியம். இந்த நிதி, ஸ்டர்லிங் செக்யூரிடி ஆக்கப்பட்டு நோட்டு செலாவணிக்கு இருப் பாக வைக்கப்பட்டிருப்பது இப்பொழுது நடந்திருக்கும் இரண்டாவது உபயோகம். இதன் பலன் என்ன? இந்தி யாவுக்கு இருந்த ஸ்டர்லிங் கடன் தீர்க்கப்பட்டதனுல் பிரிட்டிஷ் யுத்தக் கடனுக்கு ஈடுபடுத்திக் கொள்ளப் பிரிட் டனுக்குப் கைமேல் ஏராளமான பணம் கிடைத்தது. நம் நோட்டுச் செலாவணிக்கு பிரிட்டனில் ஸ்டர்லிங்காக இருப்பில் வைத்ததால் திரும்பவும் இந்தியா பிரிட்டி ஷாருக்கு வலிய கடன் உதவி செய்ததாகிறது. இதனுல் இந்தியாவில் நோட்டுச் செலாவணி பெருகி கஷ்டங் கள் வளர்ந்தன. அதே சமயத்தில் பிரிட்டனில் பணப் பெருக்கமும் அதனுல் உண்டாகும் அனர்த்தங்களும் ஏற்படாமலிருக்க வசதி உண்டாயிற்று. இம் முறையினுல் இந்தியா அடைந்தது கஷ்டம்; பிரிட்டன் அனுபவிப் பதோ சௌகரியம்.

யுத்தத்திற்குப் பிறகு இதே ஸ்டர்லிங் நிதி எது எதற் குப் பயன்படுத்தப்படும்? 1943 மார்ச் 23-ஆந் தேதி

ராஜாங்க சபையில் பேசிய இந்திய சர்க்காரின் நிதிக் காரியதரிசி இதற்குப் பதிலளித்திருக்கிறார். "இப்பொழுது வெளியில் இருந்துவரும் இருப்புகள், இறக்குமதி வர்த்தகத்தை திரும்பவும் ஆரம்பிப்பதற்கும் அதே சமயத்தில் நோட்டுச் செலாவணியைக் குறைப்பதற்கும் உபயோகமாகும். ஆகையால் நோட்டுச் செலாவணி அதிகரித்திருப்பது தற்காலிகமான விஷயம்" என்றார் நிதி இலாகா காரியதரிசி. இதிலிருந்து தெளிவாவது என்ன? வெளிநாட்டுச் சரக்குகள் இறக்குமதிக்கும், இப்பொழுது பெருக்கெடுத்திருக்கும் நோட்டுச் செலாவணியை குறுக்குவதற்குமே சேர்ந்திருக்கும ஸ்டர்லிங் நிதி உபயோகிக்கப் படும் என்பது நிச்சயமாகிறது. யுத்தத்திற்குப் பிறகு பிரிட்டிஷ் இறக்குமதி இந்தியாவில் அதிகரிப்பதும், அதே சமயத்தில் இந்தியாவில் நோட்டுச் செலாவணி குறுகி ரூபாயின் மதிப்பு அதிகரிப்பதும் பிரிட்டிஷ் நன்மைக்கு அத்தியாவசியம் ஆனவைகள் என்பதையும் முந்திய அத்தியாயத்தில் விவரமாக ஆராய்ந்திருக்கிறோம். இப்பொழுது மதிப்பை இழந்திருக்கும் ரூபாய், பழைய மதிப்பை அடைய என்ன உபாயம் அனுசரிக்கப்படும் என்பதே இனித் தெரிந்துகொள்ள வேண்டியது.

சென்ற மகா யுத்தத்திற்குப் பிறகு ரூபாயின் மதிப்பு குறையாமல் இருந்தது உண்டு. இநத யுத்தத்திற்குப் பிறகும் ரூபாய் மதிப்பை இழக்காமலேயே இருக்கும் என்று யாராவது நினைப்பதானால் அது தவறு. போன யுத்தத்திற்குப்பின் ரூபாயின் மதிப்பு மங்காது இருந்தது என்றால் அதற்குக் காரணங்கள் பல. அப்பொழுது வெள்ளி ரூபாய்கள் செலாவணியில் இருந்தன. அவற்றில் அடங்கியிருந்த வெள்ளி, தங்கத்தின் மதிப்பைக் கொண்டு கவனித்தால் அதிகமாக இருந்தது. இதனால் அந்த ரூபாய்க்கு உள்நாட்டிலேயே அன்றி வெளிநாடுகளிலும் மதிப்புக் குறையாமல் இருந்தது. ஆனால் இன்றோ நிலைமை முற்றிலும் வேறு. வெள்ளியை அதிகமாகக் கொண்ட ரூபாய்கள் மறைந்தே போயின. அவற்றுக்குப் பதிலாக வந்த சொற்ப ரூபாய்களிலும் இருக்கும் வெள்ளி

யும் மிகச் சொற்பம். ரூபாய்களுக்கு பதிலாக ஒரு ரூபாய், இரண்டு ரூபாய் நோட்டுகளே அதிகமாகச் செலாவணிக்கு வந்தன. 1940 ஜுலை 24-ஆந்தேதி இந்திய சர்க்கார் பிறப்பித்த ஓர் அவசரச் சட்டத்தின்படி, ரூபாயைப் போலவே சட்ட காரியங்களுக்கெல்லாம் இந்த ரூபாய் நோட்டும் நாணயமாகவே இருக்கும் என்று விதித்திருக்கின்றனர். ஆகையால் சென்ற மகா யுத்தத்திற்குப் பின்னுல் வெள்ளி விலை அதிகமாயிருந்ததால் ரூபாயின் மதிப்பும் அதிகமாக இருந்ததைப்போல் இச்சமயத்தில் இருக்க எந்த வித நியாயமும் கிடையாது. மேலும் இப்பொழுது செய்யப்பட்டிருப்பதைப்போல முன்பு பணப் பெருக்கம் இவ்வளவு அதிகமாக இருந்ததும இல்லை.

ரூபாயின் மதிப்பு உள்நாட்டில் ரொம்ப குறைந்து விட்டது என்பதைப் பிரத்தியக்ஷத்தில் பார்க்கிறோம். இந்த ரூபாய்க்கு வெளிநாட்டினரிடையேயாவது மதிப்பு குறையாமல் இருக்குமா? அதுவும் குறையாமலிருப்பதற்கு வழி இல்லை. ஒரு தேசத்து நாணயத்தின் மதிப்பு உள் நாட்டில் குறைந்திருக்கலாம். ஆனுல் வெளிநாட்டிலும் குறையாமலிருக்க வேண்டுமானுல் வெளிநாட்டினரிடையே நமது ரூபாயின் தேவை அதிகமாக இருக்க வேண்டும். அதாவது நம் தேசத்தில் வெளி நாட்டினர் சரக்குகளை வாங்குவது அதிகமானுல், இந்தக் கொள் முதலுக்காக அவர்களுக்கு நமது ரூபாய் அதிகமாகத் தேவைப்படும். இதனுல் ரூபாயின் தேவை அதிகரித்து வெளிநாட்டினரிடையே ரூபாய்க்கு மதிப்பு அதிகமாக இருக்கும். மலாய் டாலரின் மதிப்பு குறைந்ததால் சென்னைப் பாக்கு மண்டிக்காரருக்கு பினுங்குப் பாக்கையே அதிகமாக வாங்கவேண்டி யிருந்ததை முன்பு கண்டோம் அல்லவா? பினுங்கில் பாக்கை வாங்க இவருக்கு மலாய் டாலர் ஏன் அதிகமாகத் தேவைப்பட்டது? பினுங்கு பாக்கு மலிவாக இருந்தது இதற்கு முக்கிய காரணம். அதேபோல நம் ரூபாயின் தேவையும் வெளியாருக்கு அதிகமாக இருக்கவேண்டுமானுல் இந்தியாவில் உற்பத்தியாகும் சரக்குகளும் மலிவாக இருக்கவேண்டும். ஆனுல்

அனுபவத்தில் இங்கு இருக்கும் நிலைமை என்ன? இங்கு எல்லாப் பொருள்களின் விலைகளும் அளவுக்கு மிஞ்சி ஏறிப்போயிருக்கின்றன. விலை கிராக்கியான பொருள்களை வாங்க யாரும் வரமாட்டார்கள். இதனால் வெளியாருக்கு ரூபாயின் தேவை அதிகம் இருக்காது. ரூபாயின் மதிப்பு இதனால் வெளியிலும் குறைந்தே இருக்கும்.

ரூபாயின் மதிப்பை உயர்த்த இருக்கும் வழி என்ன என்பதை இனி பார்ப்போம். உள் நாட்டில் ரூபாயின் மதிப்பு உயரவேண்டுமானால் பெருகியிருக்கும் நோட்டுச் செலாவணி சுருங்கவேண்டும். வெளி நாட்டினரிடையே இதே ரூபாய்க்கு மதிப்பு உயரவேண்டுமானால் இந்தியாவில் விலைவாசிகள் குறைய வேண்டும். விலை வாசிகள் ஏறியிருப்பதற்கே பணப் பெருக்கம் காரணமல்லவா? ஆகையால் ரூபாய்க்கு வெளியில மதிப்பு அதிகரிக்கவும் நோட்டுச் செலாவணியை சுருங்கவேண்டியதே அவசியமாகிறது. ஆகையால் அவசியமான இந்த நோட்டுச் செலாவணிச் சுருக்கத்தைச் செய்வது எப்படி?

முந்திய அத்தியாயத்தின் ஆரம்பத்தில் சொன்ன ஒரு விஷயத்தைத் திரும்பவும் ஞாபகப்படுத்திக்கொள்ளுவோம். ஸ்டர்லிங் நிதியை ஈடாக வைத்துக்கொண்டு அதற்குப் பதில் அல்லவா நோட்டுச் செலாவணியை இப்பொழுது அதிகரித்திருக்கிறார்கள்? நோட்டுச் செலாவணிக்கு என்று இருப்பில் இருப்பது அந்தச் செலாவணி சம்பந்தமான காரியத்துக்கே உபயோகிக்கப்படவேண்டும். ஆகவே ஸ்டர்லிங் நிதியைக் கொண்டே, அதற்கு பதிலாக வெளியான நோட்டுகளை வாங்கிவிடலாம். நோட்டுச்செலாவணியைச் சுருக்குவதற்கு இருக்கும் மார்க்கமும், சர்க்கார் அனுஷ்டிக்கக் கூடிய முறையும் இதுதான். ரூபாயின் மதிப்பை உயர்த்த 1920-ல் சர்க்கார் இதே வழியைத்தான் அனுஷ்டித்திருக்கிறார்கள். அப்பொழுது ஒரு ரூபாய் 2 ஷில்லிங் தங்கத்துக்குச் சமம் என்று நிர்ணயித்திருந்தார்கள். ஆனால் ரூபாயின் மதிப்பை உயர்த்த ஒன்றும் செய்யாமலிருந்தால் அந்த மதிப்பில் ரூபாய் நிற்காமல், அதன் மதிப்புக் குறைந்துகொண்டே போய்விடும்

என்பதைக் கண்டனர். உடனே ஒரு ஸ்டர்லிங்குக்கு இத்தனை ரூபாய் என்று ஒரு புது விகிதத்தைப் பிறப்பித்தனர். அந்த விகிதப்படி இந்தியாவிலிருப்பவர்களுக்கு ஸ்டர்லிங்கை விற்றனர். இவ்விதம் விற்றதில் கைக்கு வந்த ரூபாய் நோட்டுகளை திரும்பவும் செலாவணிக்கு வெளியிடாமல் இருந்துவிட்டார்கள். இவ்விதம் அப்பொழுது 554 லட்சம பவுன் ஸ்டர்லிங்குகள் விற்கப்பட்டன. ஆனல் இந்த முறை விருமபிய பலனை அளிக்காததால் பிறகு கைவிட்டுவிட்டனர்.

1920-ல் நடந்த இக்காரியத்துக்கு காரணம் ரூபாயின் நாணய மாற்று மதிப்பை உயர்த்த வேண்டு என்பதுதான். ஆனல், அந்த அவசியம் இப்பொழுது கிடையாது. ஒரு ரூபாய், ஒரு ஷில்லிங் 6 பென்ஸுக்கு சமம் என்னும் நாணயமாற்று விகிதம் சட்டப்படி இப்பொழுது இருந்து வருகிறது. யுத்தத்தை முன்னிட்டு ரிசர்வ் பாங்கிச் சட்டத்திலிருக்கும் இந்த விதி அமுலில் இல்லாதிருந்தாலும் யுத்தத்திறகுப் பிறகு அது தானே அமுலில் வந்துவிடும். ஆகையால் ரூபாயின் மதிப்பு குறைந்து, சட்டப்படியிருக்கும அந்த நாணய மாற்ற விகித மதிப்பு குறைந்துவிடாதபடிப் பார்த்துக்கொள்ள வேண்டியது ஒன்றே இந்திய ரிசர்வ் பாங்கின் பொறுப்பாக இருக்கும். எனவே 1930-ல் அனுஷ்டித்த முறையையே திரும்பவும் கையாண்டு ரூபாய் நோட்டுகளுக்கு ஸ்டர்லிங்கை விற்பார்கள். இதன் மூலம் பண செலாவணியை குறுக்குவார்கள்.

ஸ்டர்லிங்கை ரூபாய் நோட்டுக்கு விற்பார்கள் என்றல் என்ன ? பிரிட்டிஷ் சரக்குகளைத் தருவித்து விற்கும வியாபாரிகள் இந்தியாவில் அநேகர் இருக்கிறர்கள் அல்லவா ? இங்கிலாந்தில் சரக்குகளை வாங்க இவர்களுக்கு ஸ்டர்லிங் அதாவது பிரிட்டிஷ் பணம் வேண்டும. ஆகவே இவர்கள் அந்தச் சரக்குகளின் விலையை இங்கு நாணய மாற்று பேரம்செய்யும் பாங்கிகளில் ரூபாயாகக்கட்டுவார்கள். அதே சமயத்தில் இந்தியாவில் மூலப்பொருள்களை வாங்கும் பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கு ரூபாய் தேவைப்படும். அந்த ரூபாய்க்காக, அதாவது இந்தியச் சரகின்

விலைக்காக அவர்கள் லண்டன் பாங்கில் தங்கள் ஸ்டர்லிங் பணத்தைக் கட்டுவார்கள். ஆகவே இந்திய வியாபாரிகளுக்கு ஸ்டர்லிங் தேவை; பிரிட்டிஷ் வியாபாரிகளுக்கு ரூபாய் தேவை. இந்திய வியாபாரிகள் பாங்கில் தருவது ரூபாய்; பிரிட்டிஷ் வியாபாரிகள் பாங்கில் கட்டுவது ஸ்டர்லிங். ஆகையால் ரூபாய் தேவைப்படுகிறவர்களுக்கு ரூபாயையும், ஸ்டர்லிங் தேவைப்படுகிறவர்களுக்கு ஸ்டர்லிங்கையும் கொடுப்பதே சாதாரண காலங்களில் நாணய மாற்று பாங்கிகளின் வேலை. இந்தியாவில் பெருகி யிருக்கும் பணத்தைச் சுருக்க லண்டனில் இந்திய ரிசர்வ் பாங்கின் வெளியீட்டு இலாகா ஸ்டர்லிங்கையே விற்கிறது என்றால் அப்பொழுது நிலைமை வேறு பிரிட்டிஷ் சரக்கை வாங்க ஸ்டர்லிங் தேவைப்படும் இந்திய வியாபாரிகளிடம் ரூபாய்க்கு ரிசர்வ் பாங்கியிடமே ஸ்டர்லிங்கை வாங்கித் தந்து விடுவார்கள். ஸ்டர்லிங்கை வாங்க ரிசர்வ் பாங்கிக்கு வந்த ரூபாய் நோட்டுகளைத் திரும்பவும் செலாவணிக்கு விடாது இருந்து விடுவார்கள். இதனால் நோட்டுச் செலாவணி குறையும். பணப்பெருக்கமும் இருக்காது.

இந்தியாவில் நோட்டுப் பெருக்கத்தை அதிகரிக்க இப்பொழுது ஸ்டர்லிங் நிதி உபயோகிக்கப்படுகிறது. அதே ஸ்டர்லிங் நிதி, யுத்தத்திற்குப் பிறகு நோட்டுச் செலாவணியைக் குறைக்க உபயோகிக்கப்படும். பணப் பெருக்கத்திற்கு இந் நிதி உபயோகிக்கப்பட்டதன் பலனை இந்தியா இப்பொழுது அனுபவித்துக்கொண்டு வருகிறது. பணத்தைச் சுருக்க உபயோகிக்கப் போவதன் பலனையும் இந்தியா அனுபவித்துத் தீரவே நேரும். ஸ்டர்லிங்கை ரூபாய்க்கு லண்டனில் விற்றால் நோட்டுச் செலாவணி குறையும் என்பது உண்மை. இதனால் இந்தியா அடைய நேருவது பெருத்த நஷ்டத்தையே என்பதையும் யாரும் மறந்துவிடக்கூடாது. எந்த வகையில் இந்த நஷ்டம் என்பதையும் இனி கவனிப்போம்.

இன்று மதிப்புக்குறைந்திருக்கும் ரூபாய், யுத்தத்திற்குப் பிறகு ஸ்டர்லிங்கை வாங்கவேண்டிய சமயம் வரும்போதும் மதிப்பில் குறைந்தே இருக்கும். இப்பொழுது மதிப்பு

குறையாமலிருக்கும் ஸ்டர்லிங், யுத்தத்திற்குப் பிறகு மதிப்புக் குறையக்கூடும் என்பதையும் முன்பே கவனித்தோம். ஆனால் ரூபாய்க்கு நேர்ந்ததைப்போல ஸ்டர்லிங்கின்மதிப்பு அவ்வளவு மோசமாகி விடப்போவதில்லை. யுத்த முடிவில் ஒரு ரூபாய்க்கு 4 அணு மதிப்புகூட இல்லாதிருந்தால் யாரும் ஆச்சரியப்பட அவசியம் இருக்காது. என்றாலும் ரூபாய்க்கு ஒன்றரை ஷில்லிங் என்ற விகிதப்படி ஸ்டர்லிங்கை விற்பதானால், அதை வாங்கும் இந்தியாவிலிருக்கும் வியாபாரிகளுக்கு அது லாபம். பணப் பெருக்கம் படைத்தவர்கள் எந்தப் பொருள்களையும் போட்டி போட்டு வாங்குவதை இப்பொழுது காண்கிறோம். ஸ்டர்லிங்கை வாங்கும் விஷயத்திலும் இத்தகையவர்களே முதலில் வாங்கி விடுவார்கள். வாங்கிய ஸ்டர்லிங் எதற்கு ஆகும்? பிரிட்டிஷ் சரக்குகளை இங்கே வாங்கி வரவே அது உதவும். தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மூலதனப் பொருளாகத்தான் இவர்கள் பிரிட்டனில் வாங்கும் சரக்குகள் இருக்கவேண்டும் என்ற நிபந்தனை இல்லையல்லவா? இங்கிலாந்தில் சரக்குகளை குறைந்த விலையில் வாங்கச் சௌகரியமிருப்பதால் சோப்பு முதற்கொண்டு விஸ்கி வரையில் அநேக சாமான்களைத் தருவித்து இங்கு நல்ல லாபத்திற்கு விற்க இதனால் வசதி உண்டாகும். எனவே பிரிட்டிஷ் சரக்குகளில் பேரம்செய்யும் இந்திய, பிரிட்டிஷ் வர்த்தகர்களுக்கு இதனால் லாபம் உண்டு. அதிகச் சரக்குகளை விற்க வசதி இருப்பதால் பிரிட்டனுக்கும் இது நல்லது. ஆனால் இதே சரக்குகள் இந்தியக் கைத்தொழிலுக்குப் போட்டியாகக் கூடுமாகையால் பொதுவாக இது தேசத்துக்கு நஷ்டம். மேலும் நாம் கொடுத்த பொருளுக்கும் செய்த சேவைக்குமாகச் சேர்ந்ததே ஸ்டர்லிங் நிதி. இதனால் பல பஞ்சங்களையும் கஷ்டங்களையும் அனுபவித்திருக்கிறோம். எனவே அந்த நிதி பட்ட கஷ்டங்களுக்குத் தக்க பரிகாரமாக இருக்கவேண்டியது போய் எங்கோ சிலர் லாபமடிக்க ஒரு வசதியாகவே முடிந்து விடும்.

இந்த ஸ்டர்லிங் விற்பனையால் பணம் சுருங்குவது ஒரு லாபம் அல்லவா எனக் கேட்கலாம். ரூபாயின் மதிப்பு

உயரும் என்பது நிச்சயம். ஆனால் நிலைமை என்னவாகும்? நோட்டுச் செலாவணி அடியோடு குறுகி விடுவதால் எங்கும் பணமுடை உண்டாகும். விலை வாசிகள் இறங்கும். இதனால் உற்பத்தி குறைந்து வேலையில்லாத திண்டாட்டமும் அதிகமாகும். பணப்பெருக்கத்தால் அவதிப்படும் கந்தப்பிள்ளையும் மற்றும் பல கோடி மக்களும் திரும்பவும் பணம் குறுகுவதாலும் கஷ்டப்பட்டுத் தீரவேண்டிய துர்ப்பாக்கியமே வரும். பணப்புழக்கம் அதிகமாக இருக்கும் இச்சமயத்தில் சுபிட்சம் போன்றஒரு மாயையாவது வெளிக்குத் தோன்றுகிறது. தினசரி, புதுப்புதுக் கம்பெனிகள் பல தோன்றியும் வருகின்றன. பணமுடை வந்தால் இதில் அநேகக் கம்பெனிகள் இருந்த இடந்தெரியாமல் தாமே மறையும். இவற்றில் இன்று வேலைக்கு இருப்பவர்களும் வேலையற்றோர் திருக்கூட்டத்தில் சேர்ந்து பெருங்கூட்டமாக நேரிடும். எங்கும் பொருளாதார நெருக்கடி மிகும். சர்க்கார் பணத்தைச் சுருக்க அனுஷ்டிக்கும் வித்தையால் ஏற்படக் கூடிய விபரீதம் இது.

வழிகளும் உண்டு

இங்கிலாந்தில் இந்தியாவுக்கென்று ஸ்டர்லிங் நிதி சேர்ந்ததால் இந்தியாவுக்கு கஷ்டநஷ்டங்கள் உண்டு நிதியால் பிற்காலத்திலாவது நன்மை உண்டாகுமா என்பதிலும் சந்தேகங்கள் இருக்கின்றன. இன்று யுத்தத்தின் நடுவில் இருக்கிறோம். நேச தேச வெற்றி முக்கியம் என்றிருக்கும் சமயம் இது. ஆகையால் இந்தியா செய்து வந்தவசதியை இப்பொழுது திடீரென்று நிறுத்துவது முடியாத காரியம் என்றாலும் இந்தியரின் கஷ்டங்கள் இனியும் பெருகும்படி விடாமலிருப்பது சர்க்காரின் கடமை. அதனுடன் சேர்ந்திருக்கும் நிதி சின்னாபின்னமாகி விடுமோ என்று இந்தியருக்கு ஏற்படக்கூடிய சந்தேகத்தைப்போக்க வேண்டியதும் சர்க்கார் பொறுப்பு. இவ்விரண்டுக்கும் வழிகள் உண்டு. ஆனால் சர்க்காருக்கு இவற்றைச் செய்ய மனம் உண்டா என்பதுதான் தெரியவேண்டும்.

இந்தியருக்கு இனியும் கஷ்டமில்லாதபடி செய்வதற்கான வழி சுலபமானது. இதுவரை சேர்ந்திருக்கும் ரூ. ஆயிரம் கோடி ஸ்டர்லிங்குக்கு இந்தியாவின் கைத்தொழில் அபிவிருத்திக்கான யந்திரங்கள் முதலியவற்றைக் கொண்டுவர வசதி செய்து கொடுப்பது இப்பொழுது சாத்தியமில்லை என்று சர்க்கார் சொல்லுகிறது. அது சாத்தியமில்லை என்றே வைத்துக்கொள்ளுவோம். இனியாவது மேற்கொண்டும் இந்த நிதி சேராமலிருக்கும்படி செய்ய வேண்டும். இந் நிதி இங்கிலாந்தில் சேருவதால் இந்தியாவில் நோட்டுச் செலாவணி பெருகுகிறது. இதனால் பொது ஜனங்களின் தத்தளிப்பு அதிகமாகிறது. நிதி இன்னும் பெருகுவதால் நோட்டுச் செலாவணியும் பெருகும் அதனால் இந்தியரின் துயரங்களும் பெருகியே தீரும். எனவே இப்பணப் பெருக்கப் பேயாட்டத்தை அதிகரிக்காமலிருப்பது அவசியம். பேயை ஆட விட்டுவிட்டு அடக்க மந்திரம் செய்யப்போவதாக சர்க்கார் சொல்லுவது பைத்தியக்காரத்தனம். நடந்துபோனது தொலை

யபடும். இனி பிரிட்டனே அன்றி அமெரிக்காவோ இங்கு வாங்கும் சரக்குகளுக்கும் பெறும் சேவைக்கும் கொடுப்பதை இந்தியாவுக்கு அவசியமான யந்திரங்களாகத் தரலாம். அது சாத்தியமில்லையானல் தங்கத்தையாவது கொடுக்கலாம். இங்கு விற்று லாபமடிக்க தங்கம் கிடைக்கும்போது, இதற்கு தங்கமில்லை என்று பிரிட்டிஷ் சர்க்கார் சால் ஜாப்பு சொல்ல முடியாது. இந்த இரண்டும் முடியாதென்றல் பிரிட்டனும் அமெரிக்காவும் இந்தியாவில் கடன் வாங்கக் கூடும். நேச தேசத்தினர் வெற்றி வழியில் போய்க் கொண்டிருப்பதாகக் கருதப்படும் இச் சமயத்தில் இந்தியாவில் தாராளமாகக் கடனுக்குப் பணம் கிடைக்கும். மனமிருந்தால் இக்காரியங்கள் இலகுவானவை. பணம் படைத்தவர்கள் யந்திரங்களையோ தங்கத்தையோ வாங்குவார்கள். வெளிநாட்டு சர்க்கார்களுக்கும் கடன் கொடுப்பார்கள். இதனல் நாட்டில் தலைவிரித்தாடும் பணப் பெருக்கம் தானே குறையும்.

மற்றும் ஒரு சுலபமான மார்க்கமும் இருக்கிறது. இந்தியாவில் பிரிட்டிஷ் மூலதனம் பல தொழிற்சாலைகள், மில்கள், தேயிலை, ரப்பர் போன்ற தோட்டங்கள் முதலியவற்றில் ஈடுபடுத்தப்பட்டிருக்கின்றன. இவற்றை இந்தியருக்கு விற்கும்படி சர்க்கார் செய்யலாம். அப்படிச் செய்தால் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்தியாவில்சரக்கு வாங்கவும் செலவுக்கும் போதிய பணம் கிடைக்கும். இந்தியர் பணம் இவ்விதம் மூலதனமாக ஈடுபட்டு விடுவதால் பணப் பெருக்கத்தையும் முடக்கிப் போட்டதாகும். இந்தியாவில் கஷ்டங்கள் பெருகாமலிருக்க நியாயமான வழிகள் இவை. ஸ்டர்லிங் நிதி, யுத்தத்திற்குப் பின்னல் என்ன ஆகுமோ என்பதைப்பற்றிய சந்தேகங்கள் கிளம்பாதிருக்க உள்ள வழிகளையும் கவனிப்போம்.

பட்டுவரும் கஷ்டங்களுக்கு பின்னலாவது கொஞ்சம் சுகம்வேண்டும். கைத்தொழில் அபிவிருத்தியலன்றி எந்த நாட்டு மக்களும சுகம்பெற முடியாது என்பது தெளிவான விஷயம். ஆகவே ஸ்டர்லிங் நிதியால் இந்தியாவுக்குப் பின்னல் சுகம் உண்டு என்பது பொய்யல்ல

வென்றால் அந்நிதி இந்தியக்கைத்தொழில் அபிவிருத்திக்குப் பயன்படவேண்டும். அப்படிப் பயன்படுவதாயின் மூல தனச் செலவான யந்திரங்கள் முதலியவைகளை வாங்கு வதிலேயே இத்தொகை ஈடுபடவேண்டும். இதைவிட்டு பொதுஜனத் தேவைக்கான பொருள்களாக இங்கிலாந்தி லிருந்து வரவே இந்நிதி உபயோகமாகுமானால் இப் பொழுது இருக்கும் இந்திய கைத்தொழில்களும் குட்டிச் சுவராகிவிடும் என்பதையும் கவனித்தோம். ஆகவே இந்நிதி இந்தியக் கைத்தொழில் விருத்திக்கான மூலதனச் செலவிற்கே பயன்படுத்தப்படும் என்று சர்க்கார் இப் பொழுதே உத்தரவாதம் அளிப்பது அவசியம்.

யந்திரங்களை வாங்கவே இந்நிதி பயன்படுவதாக இருந்தாலும் அவசியமான எல்லா யந்திரங்களும் பிரிட் டனிலேயே கிடைத்து விடாது. அமெரிக்காவிலிருந்தும் வாங்கவேண்டி யிருக்கும். அமெரிக்காவில் எதையாவது வாங்குவதாக இருந்தால் அந்நாட்டு நாணயமான டாலர் அவசியமல்லவா? எனவே சேர்ந்திருக்கும் ஸ்டர்லிங் நிதி யில் பாதியையாவது டாலராக மாற்றி இருப்பாக வைத் துக்கொள்ள பிரிட்டிஷ் சர்க்கார் அனுமதிக்க வேண்டும். கொஞ்சம் டாலர் நிதியும் சேர பிரிட்டிஷ் சர்க்கார் அனு மதித்திருக்கிறது என இந்திய சர்க்கார் நிதி மெம்பர் சொல்லி யிருப்பது உண்டு. கொஞ்சம் நிதி சில்லறைச் சாமான் வாங்கவே உபயோகப்படும். அதிக விலையுள்ள யந்திரங்களை அமெரிக்காவிலும் வாங்குவதாயின் டாலர் நிதியும் அதிகமிருந்தால் அன்றி அது சாத்தியமாகாது. இருக்கும் ஸ்டர்லிங் நிதியைப் பின்னால் டாலராக மாற்றிக் கொள்ளலாமே என்று சொல்லப்படலாம். அப்படி மாற்றுவதில் கஷ்டங்கள் பல உண்டு என்பதை முன்னா லேயே கவனித்திருக்கிறோம். அதோடு ஸ்டர்லிங்குக்கு இப்பொழுது இருக்கும் மதிப்பு யுத்தத்திற்குப் பிறகு குறையலாமல்லவா? அப்படிக் குறைந்தால் இப்பொழுது ஒரு ஸ்டர்லிங்குக்கு எத்தனை அமெரிக்க டாலரை வாங்க முடியுமோ அத்தனை டாலர் பிறகு கிடைக்காது போகும். இதனால் இந்தியா நஷ்டத்தையே அடையும். ஆகையால்

ஆர்ஜன்டினுவுக்கு இப்பொழுது பிரிட்டிஷ் சர்க்கார் உத்தரவாதம் அளித்திருப்பதை போல,ஸ்டர்லிங் மதிப்பு டாலர் மதிப்பில் குறைவதை ஈடுசெய்து தருவதாக இந்தியாவுக்கும் வாக்குறுதியையாவது அளிக்கவேண்டியது முக்கியம். அதனுடன் ஸ்டர்லிங் நிதி அதிகப்படி ஐந்து வருஷங்களுக்குள் இந்தியாவுக்கு கிடைக்கும் என்ற வாக்குறுதியும் இன்றியமையாதது. இது இல்லையானல் யுத்தத்திற்குப் பிறகு ஸ்டர்லிங் நிதி இந்தியக் கைத்தொழில் அபிவிருத்திக்கு பயன்படும் என்பது பகற் கனவாகிவிடும்.

இந்தியருக்கு நேர்ந்துள்ள கஷ்டங்களும், ஏற்படக்கூடிய சந்தேகங்களும் குறைய மேற்கண்டவை முக்கிய உபாயங்கள். இவற்றைச் செய்ய, பிரிட்டன் பெரிய தியாகங்களை செய்ய வேண்டியது ஒன்றுமே கிடையாது. நேர்மைக்கே யன்றி, சரியான யுத்த முயற்சிக்கும் இவற்றை நிறைவேற்றி வைப்பது அவசியம் என்பதை உணரும் நியாய புத்தியே பிரிட்டனுக்கு வரவேண்டும்.

## பணச் செலாவணி அதிகரித்த விதம்

| காலம் | புதிதாக அதிகரித்த நோட்டுகள் | அதிகப்படியான ரூபாயும் 1 ரூபாய் நோட்டுகளும் | செலாவணிக்கு வந்த மொத்தப் பணம் | ஸ்டர்லிங் செக்யூரிட்டி |
|---|---|---|---|---|
| | கோ. ல. | கோ. ல. | கோ. ல. | கோ. ல. |
| 1939 செப்டம்பர் | — | — | 217,18 | 78,32 |
| 1940—41 | 19,11 | 33,22 | 269,51 | 129,97 |
| 1941—42 | 152,40 | 7,17 | 429,08 | 165,44 |
| 1942 ஏப்ரல் | 262,33 | 46,09 | 737,50 | 235,11 |
| ஜூலை | 69,75 | 97 | 808,22 | 270,84 |
| அக்டோபர் | 63,70 | 7,86 | 879,78 | 318,83 |
| 1943 ஜனவரி | 78,55 | 27,69 | 986,02 | 412,83 |
| ஏப்ரல் | 84,36 | 13,36 | 1083,74 | 501,49 |
| ஜூலை | 62,77 | 7,02 | 1153,53 | |
| அக்டோபர் | 41,71 | 1,75 | 1196,49 | |
| 1944 ஜனவரி | 71,59 | 8,08 | 1276,61 | |
| ஏப்ரல் | | | | 779,84 |

மொத்தப் பணச் செலாவணியில் ரூபாய் நாணயங்களும் சேர்ந்திருக்கின்றன. அவற்றைத் தள்ளிவிட்டு நோட்டுச் செலாவணியை மாத்திரம் கணக்கிடுவதானால் 1944 மார்ச் [illegible]7-ஆந்தேதி வரையில் மொத்தம் ரூ. 895 கோடிக்கு அச்சிடப்பட்டிருக்கின்றன. அதே தேதியில் செலாவணியில் இருந்த நோட்டுகள் ரூ. 885 கோடிக்கு ஆகும். ஆனால் யுத்தம் ஆரம்பமான மாதமான 1939 செப்டம்பர் 1-ஆந் தேதி மொத்தம் ரூ. 182 கோடிக்கே செலாவணியில் இருந்தது என்பது கவனிக்கத் தக்கது.




















Cover Printed at P A. S. Press, Post Box 349, Mount Road, Madras